# தேரையர் யமக வெண்பா

பாகம் 1



வெளியீடு :

இந்திய மருத்துவம் - ஓமியோபதித்துறை

அரும்பாக்கம், சென்னை - 600 106.

# தேரையர் யமக வெண்பா

**முதல் பாகம்**
(பேருரையுடன்)

வெளியீடு :
இந்திய மருத்துவம் - ஓமியோபதித் துறை
சென்னை - 600 106.

## நூலடைவு

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | **தேரையர் யமக வெண்பா** - முதற் பாகம் |
| பொருள் | : | நோய்க்குறிகள் - மருந்துகள் விளக்கம் |
| வெளியீடு | : | மொழிபெயர்ப்பு - நூல்கள் வெளியீட்டுப் பிரிவு, இந்திய மருத்துவம் - ஓமியோபதித் துறை, சென்னை - 600 106. |
| பதிப்புரிமை | : | © தமிழ்நாடு அரசு |
| பதிப்பு ஆண்டு | : | முதற் பதிப்பு : 1976<br>இரண்டாம் பதிப்பு : 2003 |
| நூல் வடிவம் | : | RA 1/8 |
| அச்சுத்தாள் | : | 15.7 கி.கி. (60 GSM) கிரீம் ஓவ் |
| அட்டைக்கட்டுமானம் | : | சாதாரணம் |
| எழுத்துகள் | : | 11 புள்ளி |
| மொத்த பக்கங்கள் | : | XVI + 255 |
| பிரதிகள் | : | 1000 |
| நூலின் விலை | : | **ரூ. 80/-** |
| அச்சிட்டோர் | : | திருவாளர்கள் எம்.எல்.எம். பிரிண்டர்ஸ், சென்னை - 24. |

**எம்.எப். பாரூகி, இ.ஆ.ப.,**
ஆணையர்,
இ.ம.ஓ. துறை,
சென்னை - 600 106.

நாள்
15.07.2003

## பதிப்புரை

இது தேரையரால் படைக்கப்பட்ட, யமகமென்னும் பாடல்வகையில், கடினமான நடையில் அமைந்த ஒரு மருத்துவநூல். எளிதில் புரிந்து கொள்ள முடியாத பாடல்களுககு உரை எழுதியவர் பெயர் தெரியவில்லை. மேலும் இந்த அருமையான உரையையும் மிகக் கவனமாகவும் படித்தாலன்றி புரிந்து கொள்ள இயலாது.

இவரது பாடல்களில் பயின்று வந்துள்ள வடமொழி மற்றும் தெலுங்குச் சொற்கள், நூலாசிரியரின் பல்மொழிப் புலமையை எடுத்துக்காட்டும். ஆங்காங்கு மகாபாரத நிகழ்வுகள் பல இடங்களில் கூறப்பட்டுள்ளன.

சித்த மருத்துவப் பட்ட மேற்படிப்பு மாணவர்களுக்குப் பயன்படும் இந்நூல் மீண்டும் கற்றுணர வேண்டிய சிறப்பினை உடையது.

இந்நூல் மருத்துவச் சரக்குகளின் சுத்தி முறைகள், பற்பங்கள், செந்தூரங்கள், இவற்றின் செய்முறைகள், இவற்றை உண்ணும் முறைகள், மேலும் இம்மருந்துகளை உண்ணும்போது அனுசரிக்க வேண்டிய பத்திய முறைகள் போன்ற அனைத்தையும் நூலாசிரியர் விரிவாக விளக்கியுள்ளார்.

ஏறத்தாழ இருபத்து ஏழு ஆண்டுகளுக்குப் பின்னர் மறு பதிப்பாக இந்நூல் வெளி வருகிறது.

நூல் வெளியீட்டுப் பணியினைச் செவ்வனே செய்துவரும் இத்துறையின் அனைத்துப் பிரிவு அலுவலர்களுக்கும், வழிநடத்தும் இணை இயக்குநர் அவர்களுக்கும் எனது பாராட்டுக்கள்.

இது போன்ற நூல்கள் மேன்மேலும் வெளிவருவதன் மூலம் சித்த மருத்துவத்தின் சிறப்பினை மக்கள் நன்குணர வழிகோலும் என நம்புகிறேன்.

**எம்.எப். பாரூகி,**
ஆணையர்.

இந்திய மருத்துவம் - ஓமியோபதித் துறை , சென்னை. 106

மொழிபெயர்ப்பு - நூல்கள் வெளியீட்டுப் பிரிவு

# நூலாக்கப் பணிக்குழு

| | | |
|---|---|---|
| சிறப்பு அலுவலர் (மொழி பெயர்ப்பு) | : | மரு.ஆனைவாரி இரா. ஆனந்தன் BSc, RHMP, MA(Tam), MA(Eng), MHEd |
| ஆய்வு மருத்துவ அலுவலர் (சித்தா) | | மரு. ஆ. க. பாரி, B.A., B.I.M., |
| தமிழ்ப் புலவர்கள் | : | திரு த. அழகப்பராசு, M.A(Tam), M.A(Eng), B.Ed. |
| | : | திருமதி செ. இரா. பிரசன்னா, M.A., M.Phil., B.Ed., |
| சுருக்கெழுத்தர்- தட்டச்சர்கள் | : | திருமதி தா.வே.லெட்சுமி<br>திருமதி வெ.சுப்புலெட்சுமி |
| நகலர் | : | திரு. க. மகேஸ்வரன் |
| சுவடி நகல் எடுப்பவர்கள் | : | திருமதி. ந.பாக்கியசுந்தரி, B.A.<br>திருமதி. த. லெட்சுமி<br>திரு. தி. சுபாஷ் சந்திரபோஸ்<br>திரு.வெ. சாரங்கபாணி |

# முதற்பதிப்பின் அணிந்துரை

## பேராசிரியர் க. அன்பழகன், எம். ஏ.

முன்தோன்றிய - மூவா முதன்மொழியாம் தமிழுடனும் அதன் நாகரிகத்துடனும் பிறந்து வளர்ந்த - சித்த மருத்துவத்தின் தன்மையும் மேன்மையும் உலகம் என்றும் இழந்து விடாது காப்பது நம் கடன். தமிழகத்திலும் பிற தென் மாநிலங்களான திராவிடத்திலும் சித்த மருத்துவம் இன்றும் பலரால் வழி வழியாகவும் கற்றறிந்தும்-கையாளப்பட்டு வரினும், அதன் சிறப்பும் புகழும் நிலைபெறுவதற்கு நாம் ஆற்ற வேண்டிய பணிகள் பலவாகும். தமிழக அரசின் ஆதரவாலும்-இத்துறை வல்லுநர்களின் முயற்சியாலும்-மருத்துவ முறைகளில் சித்த மருத்துவமும் இடம் பெற்று வருகிறது எனினும், அதன் தனிச் சிறப்புகள் அறிவியல் ஆய்வாளர்கள் ஒப்புக் கொள்ளுமாறு ஆய்வுகள் மூலம் நிலைநிறுத்தப்பட்டாக வேண்டும் என்பதை நாம் கருத்தில் கொண்டு செயற்பட வேண்டும். அந்த நிலை உருவாவதற்கு-ஓலைச் சுவடிகளாகவும் ஒருகாலத்தில் அச்சேறியும் இன்று கிடைத்தற்கரியதாகவும் உள்ள நூற்றுக்கணக்கான சித்த மருத்துவ நூல்கள்-உடனடியாகப் பதிப்பிக்கப்படல் வேண்டும். இவை வெளிவந்தால்தான், இன்று சித்த மருத்துவம் பயிலும் மாணவரும், இளம் மருத்துவரும் அவற்றைப் பயின்று பயன் பெற இயலும். மருந்து செய்முறைகளை ஒப்பு நோக்கி உண்மை தெளியவும், மருந்துகளின் தரத்தை உறுதிப்படுத்தவும், அரிய மூலப் பொருள்கள் கிட்டாத விடத்து மாற்று மூலப்பொருள்களைக் கொண்டு மருந்து செய்திடவும், மருந்து உற்பத்தியைப் பல மடங்காகப் பெருக்கி மக்களுக்குப் பரவலாகக் கிடைக்கச் செய்யவும் வாய்ப்பாகும். பரவலாக எங்கும் எளிதில் கிடைப்பதால் செல்வாக்குப் பெற்றுள்ள அலோபதி மருந்துகட்கு ஈடு கொடுத்து மக்களிடம் செல்வாக்குப் பெறவும் முடியும்.

எனவே, சித்தமருத்துவ நூல்கள் வெளியிடும் முயற்சிக்குத் தகுந்த நிதி உதவி வேண்டும் என்னும் எனது வேண்டுகோளை இசைவுடன் ஏற்று அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் அறங்காவல் குழுவினரும்-அதன் தலைவர் திரு. பு. மனோகரன் அவர்களும் - இதற்காக இரண்டு இலட்சம் ரூபாய் நிதி ஒதுக்க முன்வந்ததுடன், சித்த மருத்துவ நூல் வெளியீட்டுக்கென டாக்டர் இரா. தியாகராஜன், எல்.ஐ.எம்., அவர்களைத் தலைவராகக் கொண்ட ஒரு குழுவையும் அமைத்துச் செயல்படுத்தலாயினர்.

இக்குழுவின் தலைவரும் உறுப்பினர்களும் ஆர்வத்துடன் ஈடுபட்டு ஆற்றிவரும் நற்பணியும்-பல்வேறு வகையிலும் அவர்கட்குத் துணை நிற்போர் ஆற்றும் பணியும், இந்திய மருத்துவத்துறை இயக்குநர் டாக்டர் பு.மு.வேணுகோபால் அவர்களின் இயக்குவித்திடும் திறனும் எனது பாராட்டுக்குரியனவாகும். அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் அறங்காவலர் குழுவினருக்கும் அக் குழுவின் தலைவருக்கும் எனது நன்றியும் பாராட்டும் உரியனவாகும்.

தேரையர் யமக வெண்பா என்னும் இந்த நூல் வெளியீட்டுக் குழுவினரால் தேர்ந்தெடுக்கப்பெற்று, முதலில் வெளியிடப்படும் வரிசையில் 24 வது நூலாகும். இந்த நூலின் கையேட்டுப்படியைக் கொடுத்துதவிய டாக்டர் இரா. தியாகராசன், எல்.ஐ.எம் அவர்களுக்கு நன்றி செலுத்துவதோடு, இதுபோல் அரிய கையேட்டுப்படி வைத்திருப்பவர்கள் கொடுத்துதவினால் சித்த மருத்துவம் மேலும் செம்மையாய் வளம்பெறவும் மக்கட்குப் பயன்படவும் வாய்ப்பாகும்.

மிகக்கொடிய நோய்களையும், அறத்தீர்க்கும் பற்பம் செந்தூரமாகிய முறைகள், நமது நாட்டு மருத்துவத்தில் இருப்பதுபோல் மற்ற மருத்துவத்தில் இல்லையென, நமது மருத்துவ நூல் பயிற்சியுள்ள ஐரோப்பிய மருத்துவர்கள் மனப்பூர்வமாக ஒப்புக்கொள்கிறார்கள். ஆங்கில மருத்துவம், நாட்டு மருத்துவம் ஆகிய இரண்டிலும் சிறப்பான முறையில் தேர்ச்சியுள்ள சிறந்த பண்டிதர்களின் தீர்மானமாவது:

*“அறுவை செய்தல் முதலிய இரண மருத்துவத்தில் ஆங்கில முறை வைத்தியம் மிகவும் மேலானது. மற்ற நோய்களின் மருத்துவத்தில் தற்கால சாந்தியாகச் செய்வதிலும் ஆங்கில வைத்தியமே அதிகம் சிறந்தது; ஆனால் நாட்பட்ட நோய்களையும், பெரிய நோய்களான குன்மம், நீரிழிவு, சயம், எருவாய்நோய், பாண்டு, மந்தாக்கினி, மேகம் , தாது இழப்பு முதலிய கடின நோய்களையும் அறத்தீர்ப்பதற்கு நாட்டு மருத்துவ முறைகளே மிக மேன்மையானவை. அவற்றுள்ளும் முறைக் கிரமமாகச் செய்யப்பட்ட பற்ப செந்தூரங்களே மேன்மை பெற்றவை என்பதே”.*

இந்த அபிப்ராயமானது மிகவும் சரியானதெனவும் உத்தமமானதெனவும் அதிகம் வாய்மையானதெனவும் சிறந்த மருத்துவர்களான ஒவ்வொருவரும் முழுமனதோடு ஏற்றுக் கொள்வார்கள். இக்கூற்று உண்மையாவதை, நவீன கருவிகள் வளர்ச்சியால் ஆலென வளர்ந்து அடர்ந்து நிற்கும் அலோபதி மருத்துவமும் ஏற்கும் வண்ணம் நடைமுறையில் செயல்படுத்தி எண்பிக்கும் வல்லமையும், ஆராய்ச்சி முறையில் சான்றுகளை உருவாக்கும் முயற்சியும் ஓங்க வேண்டும் என்பதே எனது பேரவா.

இவ் வெளியீடு மேலும் பல நூல்களை வெளியிடும் முயற்சியில் ஈடுபட்டுள்ளோரை ஊக்கப்படுத்துவதற்குத் துணை செய்வதாகும் என நம்புகிறேன். அவர் தம் முயற்சி வளர வாழ்த்துகிறேன்.

**க. அன்பழகன்**

சென்னை

28-10-1975

# முதற்பதிப்பின் முன்னுரை

உலக மொழிகளில் மிகப் பழமையானது தமிழ் மொழி; தமிழ் மருத்துவ முறையும் அத்தகைத்தே. இம் மருத்துவ முறையைத் தோற்றுவித்தவர் சித்தர்கள் எனப்படுவர். ஆகையால், இம் மருத்துவத்திற்குச் சித்த மருத்துவமென்று பெயர் அமையலாயிற்று. அச் சான்றோர்கள் தாம் கண்ட உண்மைகளையும் மருத்துவ நுணுக்கங்களையும் மருந்து சரக்குகளின் குணம் முதலானவைகளையும் மாணவர்கள் பலரை ஏற்று ஓதியும் ஓதுவித்தும், பற்பல ஏடுகளில் பதிவு செய்தும் உலகோர்க்கு உதவி செய்து தம் மருத்துவ முறைகளைப் பரப்பி வந்தார்கள்.

காலப்போக்கில், சிறிது சிறிதாய் இயற்கையின் -- நிலநடுக்கம், கடற்கோள் போன்ற -- சீற்றம் காரணமாகவும், வெளிநாட்டார் படையெடுப்பு, சிதலை, இராமபாணம் போன்றவைகளின் தாக்குதலாலும் பல ஏடுகள் அழிந்தவை போக மிகுந்தவைகளின் சில மேலை நாட்டு நூல் நிலையங்களுக்கு எடுத்துச் செல்லப்பட்டன வெனக் கூறப்படுகின்றது. இன்னும் எஞ்சியுள்ள ஏடுகளாலும், அம் மருத்துவக் கலையைத் தொன்றுதொட்டுக் கையாண்டுவரும் மருத்துவர்கள் வாயிலாகவும், பல நூற்றாண்டுகளாக அதன் அடிப்படை உண்மை, தனித்தன்மை காரணமாகவும் சித்த மருத்துவம் அழியாது நிலைபெற்றிருக்கிறது.

தஞ்சையையாண்ட மராட்டிய மன்னர் சரபோஜி அவர்களின் ஆட்சிக் காலத்தில் சித்த, ஆயுள்வேத, யுனானி மருத்துவ ஏடுகளை எல்லாம் சரசுவதி மகால் நூல் நிலையத்தில் அரியணை ஏறின. மருத்துவப் புலவர்களின் அனுபவங்கள் ஏடுகளில் ஏறி ஏமமுற்றன. மருத்துவ செய்முறையும் பிணித் தீர்வும் அவர் ஏற்படுத்திய தன்வந்திரி மகாலில் மறுமலர்ச்சியுற்றன. அவர் ஆட்சிக்குப்பின் சித்த மருத்துவம் அரசு ஆதரவை இழந்து பழையபடி குடிமக்களின் ஆதரவு கொண்டு ஆங்காங்கு வழக்கில் இருந்துவரலாயிற்று.

மிக அண்மையில், வெள்ளையராட்சிக் காலத்தில் நீதிக்கட்சி சார்பில் முதல் அமைச்சராகப் பணியாற்றிய பனகல் அரசர் 1924-ல் இந்திய மருத்துவப் பள்ளியைத் தோற்றுவித்து, பல கிராம மருத்துவ மனைகளையும் அமைத்து இயங்கச் செய்து சித்த மருத்துவம் முதலான இந்திய மருத்துவ முறைகளின் மறு மலர்ச்சிக்கு வித்தூன்றினார். அக்காலத்தில் மேற்படி கல்வி நிலையத்தில் பயிலும் மாணவர்களுக்கு அமைந்த பாடத்திட்டப்படி கற்பிக்கப் போதிய பாடப் புத்தகங்களும், முதல் (மூல) நூல்களும் இல்லாக்குறையை ஓர்ந்து பாடப் புத்தக ஆக்கக்குழுவை அரசு அமைத்தது. அந்நாள் சித்த

மருத்துவத்துறைத் தலைமை ஆசிரியராய் இருந்த பண்டித, வைத்திய ரத்தினம், மருத்துவ சிரோன்மணி காலஞ்சென்ற க. ச. முருகேச முதலியார் அவர்கள் குணபாடம் (மூலிகை வகுப்பு) என்னும் நூலைத் தம் சொந்த முயற்சியால் இயற்றி அரசினருக்கு நன்கொடையாக அளித்து வெளியிடச் செய்தும், குழுவினர் அரசுவழி வெளியிட்ட நஞ்சு நூல், பாலவாகடம் என்னும் நூல்களைப் பார்வையிட்டும் உதவினார். அக் குழுவினர் நூற்றுக்கும் மேற்பட்ட மருத்துவச் சுவடிகளையும், அச்சிட்ட நூல்களையும் சேகரித்து, ஒரு நூல் நிலையம் ஏற்படுத்தினார்.

மேற்படி பள்ளி, கல்லூரியாக மிளிர்ந்தபோது அந்தநாள் கௌரவ இந்திய மருத்துவ இயக்குநராகப் பணியாற்றிய டாக்டர் ம. ரா. குருசுவாமி முதலியார் ஊக்கம் கொடுத்தமை காரணமாக 1950-ல் சித்த மருத்துவம், சித்த மருத்துவாங்கச் சுருக்கம், நோயில்லா நெறி, குணபாடம் (மூலிகை வகுப்பு), குணபாடம் (தாது சீவ வகுப்பு) என்ற நூல்களும் அப்போது பணிபுரிந்து வந்த கல்லூரி விரிவுரையாளர்களைக் கொண்டு எழுதுவித்து அரசால் வெளியிடப் பெற்றன.

அக் கல்லூரி நிகழ்ந்த காலத்திலும் பின்னர்ப் பாளையங் கோட்டைக் கல்லூரி தோன்றிய பின்னுங்கூட, பாட நூல்களும் துணை நூல்களும் நிரம்பாமை பெருங்குறையாக நீடித்து வருவதாயிற்று.

ஆகவே, பண்டைய சித்த மருத்துவ ஓலைச் சுவடிகளையும், கையேடுகளையும், ஒருமுறை அச்சாகிப் பின் விற்பனைக்குக் கிட்டாத புத்தகங்களையும் சேகரிக்கவும், மருந்து செய்முறை அட்டவணை தயாரிக்கவும், பாடநூல்கள் வெளியிடவும் ஆகிய பணிகள் செய்ய **(Pharmacopoeia Committee, 1996, G.O. Ms. 2163 dt. 23-8-60)** ஒரு குழுவும், சித்த மருத்துவக் கல்வி மற்றும் பாட நூற்குழு என்று **( G.O. Ms. No. 1060, Health, dt. 13-6-66)** ஒரு குழுவும், திருவருட்பா, திருப்புகழ் முதலியவைகளில் உள்ள மருத்துவப் பகுதிகளை ஆய்வதற்காக ஒரு குழுவும் எனத் தமிழக அரசு குழுக்களை ஏற்படுத்தியது. அதன் விளைவாக அறுவை மருத்துவம், சூல் மருத்துவம் என்ற நூல்கள் வெளிவந்தன.

மீண்டும் விரைவில் பயன்காண வேண்டி 1973 ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 15 ஆம் நாள் தமிழக அரசினர் மேற்கூறிய குழுக்களை ஒருங்கிணைத்து சித்த மருத்துவ அறிவியல் வளர்ச்சிக் குழு என்னும் ஒரு குழுவைத் **(G.O. Ms. No. 2571 dt. 23-10-73)** தோற்றுவித்தார்கள். அக் குழுவின் பணிகளாவன: சித்த மருத்துவ அரிய சுவடிகள், கையேடுகள், அச்சாகிய பழைய நூல்கள் ஆகியவைகளைச் சேகரித்துப் பாதுகாத்தல்; ஓலைச் சுவடிகளை ஆய்ந்து கையெழுத்துப்படி, தட்டெழுத்துப்படி

முதலியவைகளை எடுத்து அச்சியியற்றி வெளியிடல்; ஒருமுறை அச்சில் வெளிவந்து விற்பனைக்குக் கிடைக்கப் பெறாத நூல்களை மீண்டும் வெளியிடல் ; இதுவரை அச்சிடப்பெறாத நூல்களை வெளியிடல் என்பனவாம். அதன்படி இக்குழுவினர் இதுவரை 400 சுவடிகளையும், 100 கையெழுத்துப்படிகளையும், 230 அச்சான பழைய நூல்களையும் சேகரித்துள்ளனர்.

இக் குழுவினர் தாம் மேற்கொண்ட பணிகளைச் செயலாற்ற, இந்திய மருத்துவத்துறை இயக்குநர் அலுவலகத்தில் ஒரு தனி அலுவலரையும், அவர்களுக்கு உதவியாளர்களையும் நியமித்துள்ளனர். அவர்கள் நூல்களைப் படியெடுத்துத் திருத்தம் செய்து அச்சியியற்றத் தக்க வகையில் செய்துவருகின்றனர்.

அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் நிதியிலிருந்து சித்த மருத்துவ நூல் வெளியீட்டுக்கென்று ஒதுக்கப்பட்ட இரண்டு இலட்சம் ரூபாயைக்கொண்டு, மேற்படி நூல்களை நடைமுறைச் சிக்கல்களைத் தவிர்த்து வெகுவிரைவில் வெளியிட, உறுப்பினர் சிலருடன், அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் அறங்காவலர்க்குழுத் தலைவர் அவர்களையும், மேற்படி திருக்கோயில் நிருவாக அதிகாரியையும் கொண்டு அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் சித்த மருத்துவ நூல் வெளியீட்டுக்குழு ஏற்படுத்தப்பட்டது. அக்குழு முடிவெடுத்தபடி முதல் வெளியீட்டு வரிசையில், 24வது நூலாக வெளிவருவது தேரையர் யமக வெண்பா என்னும் இந்நூலாகும். இந்நூலுக்குரிய கையேட்டுபடியை டாக்டர் இரா. தியாகராசன் எல்.ஐ.எம். அவர்கள் அளித்தமையால் பதிப்பித்ததாகும். இந்நூலுக்குரிய கையேட்டுப்படிகளைக் கொடுத்துதவிய மேற்கண்டவர்க்கு எங்கள் மனமார்ந்த நன்றி உரித்தாகுக.

இந்நூலுள் நோயாளியின் சாத்திய சாத்தியக்குறிகள், கற்ப முறைகள், சரக்குகளின் சுத்திமுறைகள், பற்ப செந்தூர முறைகள், அவைகளின் துணைமருந்துகள், பத்திய வகைகள் யாவும் மிக்க விரிவாகக் கூறப்பெற்றுள்ளன.

இந்நூலின் ஆசிரியர் தேரையர். இவ்வாசிரியர் தம் பெயரைத் தேரன் எனத் தம் பாடல்களில் குறிப்பிட்டுள்ளார். இவர் இயற்றிய பாடல்களிலிருந்து இவருக்குத் தமிழைப் போல, வடமொழி, தெலுங்கு, கன்னடம் எனப்பட்ட பலமொழிப் புலமையும் முடிவெடுத்தபடி முதல் வெளியீட்டு வரிசையில் 24 ஆவது நூலாக வெளிவருவது மருத்துவத்துறையில் எல்லா அங்கங்களிலும்

தேர்ச்சிமிக்க புலமையும் ஒருங்கே அமையப்பெற்ற ஒப்பற்றவர் என இவர் இயற்றிய நூலே எடுத்துக்காட்டும். இவர் சைவ வைணவ ஒருமைப்பாட்டில் நாட்டமும், முருகனிடம் பக்தியும், சிவபக்தியும் நிறைந்தவராக இந்நூலில் பல இடங்களில் கண்டறியலாம். சிவனுடைய பாசுபதாத்திரத்தின் பெருமையைப் பல பாடல்களில் எடுத்துக்காட்டி விளக்கியுள்ளது குறிப்பிடத் தகுந்த ஒன்றாகும். இவர்க்கு மகாபாரதத்தில் மிக்க ஈடுபாடு உண்டு என்பதையும் இந்நூலில் பற்பல இடங்களில் காணலாம். தன்வந்தரி என்பவரிடம் மிக்க பக்தியும் இவர்க்குண்டு.

இந்நூலுக்கு தற்போதுள்ள புலவர்களால் உரைகாண இயலாது என்றால் அது மிகையாகாது. இதற்கு இப்பேருரையெழுதிய புலவர் (பெயர் தெரியவில்லை) ஏற்பட்டிராவிட்டால் இந்நூலைச் சரிவர ஓதிப் பயன்பெற யாராலும் இயலாதென்பதை இவ்வுரையைக் கவனத்தோடு கற்பவர் அறியலாம். இவ்வுரையாசிரியரும் தேரையரைப் போலவே தமிழ்த்துறையிலும் மருத்துவத் துறையிலும் புலமை பெற்றும் பன்மொழிப் புலவராயும் இருந்திருக்க வேண்டுமென்று உணரலாம்.

இவ்விருவரின் பிறப்பிடம், குலம் முதலியவைகளை அறிய இவர் நூல்களில் யாதொரு அகச்சான்றும் இல்லை. இவ்விரு ஆசிரியர்களும் தொண்டை நாட்டைச் சேர்ந்தவர் என்பது செவிவழிச் செய்தியாகும். தேரையரை வணிகர் என்பதும் அவ்வாறே, தேரையருடைய ஞானாசிரியர் தரும சௌமியர் என்பர்.

மேலும், தெலுங்குக் கவிஞர் வேமனரைப் பற்றி, தேரையர், உத்தம 'மஞ்சிவாரு சுவாமி நீ வென வேமனர் வடுகில் உரைத்தல்போல்' என்று கூறி இருப்பதால், இவர் வேமனர் காலத்தவர் அல்லது அவருக்குச் சற்றே பிற்காலத்தவர் என்று ஊகிக்கலாம். வேமனர் கி.பி. 1386–1505 இடைப்பட்ட காலத்தவர். மேலும் இந்நூலில் உருளைக்கிழங்கு கற்பம் பற்றிக் கூறியிருப்பதாலும், உருளைக்கிழங்கு தென் இந்தியாவுக்கு வந்தது கி.பி. 16 ம் நூற்றாண்டு என்று அறிவதாலும் தேரையர் சற்றேறக்குறைய 500 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர் என்று கருதலாம்.

மேற்கண்ட அரிய வெளியீட்டுப் பணிக்குப் பெருந்தொகை தேவைப் படுவதால் இப்பெரும் பணியை விரைவில் செயல்படுத்த உளங்கொண்ட நம் தமிழக அரசின் நல்வாழ்வுத்துறை அமைச்சர் மாண்புமிகு பேராசிரியர் உயர் திரு. க. அன்பழகன், எம்.ஏ., அவர்கள் பேரார்வங்கொண்டு மேற்படி பணி

முட்டின்றி முடிவதற்கு அரசு நிதியிலிருந்து ஆண்டொன்றுக்கு ஐம்பதாயிரம் ரூபாய் வழங்க ஆணை பிறப்பித்தார். மேலும் அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் அறங்காவலர் குழு முன்னாள் தலைவர் உயர்திரு. பு. மனோகரன் அவர்களைக் கொண்டு முதல் தவணையாக மேற்படி திருக்கோயில் கருவூல நிதியிலிருந்து இரண்டு இலட்சம் ரூபாயை ஒதுக்கி வழங்கச் செய்தமையும், சித்த மருத்துவ நூல்கள் விரைவில் வெளியாக வாய்ப்புத் தேடித் தந்தமையும், காலஞ்சென்ற டாக்டர் ஜி. டி. நாயுடு அவர்களைக் கொண்டு காலஞ்சென்ற திரு டி. வி. சாம்பசிவம் பிள்ளை அவர்கள் தொகுத்து வைத்திருந்த மருத்துவப் பேரகராதியின் முதல் மூன்று பகுதிகளையும் பிற சித்த மருத்துவ இலக்கிய நூல்களையும் அச்சிட்டு வெளியிடச் செய்தமையும் அமைச்சர் பெருமகனார் சித்த மருத்துவ மறுமலர்ச்சிக்கு முழுமனதுடன் ஆற்றிவரும் செயற்கரிய ஆக்கச் செயல்களாகக் கூறிப் பெருமிதமடையலாம். இதற்குத் தமிழகம் என்றென்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளது.

அருள்மிகு பழநி தண்டாயுதபாணி திருக்கோயில் அறங்காவலர் குழுவின் முன்னாள் தலைவர் உயர்திரு. பு. மனோகரன் அவர்கள் தமக்குள்ள பற்பல அறப்பணிகளுக்கிடையேயும் இக் குழுவின் கூட்டங்களில் பங்கு கொண்டு நூல் வெளியீட்டுக்கான பற்பல வழிமுறைகளையும், ஆலோசனைகளையும் வழங்கி வெளியீட்டுப் பணி ஊக்கமும் ஆக்கமும் பெற்றுத் தங்குதடையின்றி நூல்கள் வெளிவர மேற்படி திருக்கோயில் நிதியிலிருந்து மேற்படி அறங்காவலர் குழுவினரைக் கொண்டு முதல் தவணையாக இரண்டு இலட்ச ரூபாய் வழங்கச் செய்ததோடு, சித்த மருத்துவக் கல்லூரி ஒன்று பழநியில் தோற்றுவிக்க உடன்பட்டமைக்கும், சென்னையில் மத்திய சித்த மருத்துவ நூலகம் ஒன்றை நிறுவக் கட்டடம் கட்டித் தர முயன்றமைக்கும் இக் குழுவினரும், இதில் பணியாற்றி வருபவர்களும் என்றென்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டவர் ஆவார்கள்.

மேற்படி அறங்காவலர் குழுத்தலைவர் அவர்களுக்கு உறுதுணையாக இருந்து ஒத்துழைத்துவரும் மேற்படி திருக்கோயில் நிருவாக அதிகாரி அவர்களுக்கும், இப்பணி நிறைவுபெற ஆக்கிய தீர்மானங்களுக்கு ஒப்புதல் அளித்து வரும் இந்து சமய அறநிலையப் பாதுகாப்புக் குழுத் தலைவர் உயர்திரு கே. எஸ். நரசிம்மன், ஐ. ஏ. எஸ்., அவர்களுக்கும் இக் குழுவினரின் உளங்கனிந்த நன்றி உரித்தாகுக.

இக் குழுவினர் பணியாற்றுவதற்கு ஏற்ற இடவசதியும், பிற வசதிகளும் தம் அலுவலகத்தின் ஒரு பகுதியில் கொடுத்து, பணி இடையீடின்றி நடைபெற

வேண்டிய ஆலோசனைகளும், ஊக்கமும் அளித்துவரும் இந்திய மருத்துவத்துறை இயக்குனர் டாக்டர் பு. மு. வேணுகோபால். எச். பி. ஐ. எம்., அவர்களுக்கு எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

அச்சடிக்கும் தாள்கள் அடக்க விலையில் திருவாளர்கள் சேஷசாயி பேப்பர் மில்சாரிடமிருந்து மிக விரைவில் கிடைக்கும்படி செய்த முத்தமிழ் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களுக்கு இக் குழு நன்றி தெரிவிக்கக் கடமைபட்டுள்ளது.

மற்றும் இந் நூல்களை அச்சியற்ற ஏற்றவண்ணம் மூலப்படிகளைத் திருத்தம் செய்வித்தும், கருத்துரைகள் தந்தும் இக்குழுவுக்குத் துணை புரிந்துவரும் தனி அலுவலர் டாக்டர் வி. விசுவநாதன், எல். ஐ. எம். அவர்களையும், அன்னாருக்குத் துணைபுரிந்து வரும் புலவர்கள் டாக்டர் மு. சௌரிராசன், வை. முரு. முத்துக்குமாரசாமி, நா. மு. மாணிக்கம். வி.செ. வினாயகம், தா. சிங்காரவேலு ஆகியவர்களையும் இக்குழு மனமுவந்து பாராட்டுகிறது.

இந்நூலைக் குறுகிய காலத்தில் அழகிய முறையில் அச்சியியற்றிய அருள்மலர் அச்சகத்தாரின் சேவைக்கு இக்குழு மனமுவந்து பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்கிறது.

சான்றோர் மிகுந்த இவ்வுலகு இந் நூல்களில் காணும் குற்றங்கண்டு முனியாது நனியாதரவு தந்து எம்மை ஊக்குவிக்குமென்ற துணிவுடன் நூல்களை வெளியிடுகின்றனம்.

டாக்டர் இரா. தியாகராசன், எல். ஐ. எம்.,
தலைவர்,
அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி
திருக்கோயில் சித்த மருத்துவ நூல்
வெளியீட்டுக்குழு.

இந்திய மருத்துவத்துறை
இயக்குநர் அலுவலகம்,
சென்னை - 600 029.

# பொருளடக்கம்

# தேரையர் யமக வெண்பா

## பாயிரம்

### விநாயகர் வணக்கம்

*அத்தி முகம னணிமழவா குங்கருணை*
*யத்தி முகம னணிகாப்பே - யத்தி*
*முகவா கடமேனை முன்னாத தேரன்ச*
*முகவா கடமறைக்கு முன்.* 1

(சொற்பொருள்) அத்தி - ஈஸ்வரியினுடைய, முகமன் - உபசாரத்தை, அணி - தரிக்கப்பட்ட, மழவாகும் - பிள்ளையாகிற, கருணைகிருபா கடாட்சத்தையுடைய, அத்திமுகமன் - யானை முகத்தையுடைய விராசனான விக்கினேசுவரர், அணி - அழகாக, காப்பே - காத்து ரட்சிக்க வேண்டியது (அது ஏதுக்கென்றால்) அத்தி - சமுத்திரமானது, முகவா - மொண்டு கொள்ளக்குறையமாட்டாது, ஏனை- வேறான, கடம் - பானையிலே, ( அப்படிப்போலே) முன்னாத - எத்தனைபேர் பார்த்துக்கற்றுக்கொண்டாலும் அவர்களாலே அடங்காமலிருக்கப்பட்ட, தேரன் சமுக - தேரனென்கிற பண்டித சிகாமணியினுடைய ஆதிக்கியமான, வாகடமறைக்கு - வயித்திய சாத்திரத்திற்கு, முன் - முதலிலே.

## பல தேவர் வணக்கம்

*சத்தியத்த னத்தன் சயம்பேரம் பன்வீரன்*
*சத்தியத்த னத்தன் சதாகதிமால் - சத்தியத்தன்*
*காரிமதி சேய்பொன் கவிராகு கேதனுமன்*
*காரிமதி பூநீர்தீ காப்பு.* 2

(சொ. பொ.) சத்தியத்தன் - பார்வதா தேவியைப் பாகத்திலே வைத்த பரமசிவனும், நத்தன் - சங்கையுடைய திருமாலும், சயம்பு - பிரமதேவனும், ஏரம்பன் - விக்கினே சுவரனும், வீரன் - வீரபத்திரனும், சத்தியத்தன் - வேலாயுதத்தைக் கையிலே பிடித்த சுப்பிரமணிய சுவாமியும், அத்தன் - வயிரவனும், சதாகதி - வாயு பகவானும், மால் - புதபகவானும், சத்தியத்தன் - சூரியபகவானும், காரி - சனீசுர பகவானும், மதி-சந்திரபகவானும், சேய் - அங்காரக பகவானும், பொன் - பிரகஸ்பதி (குரு) பகவானும், கவி - சுக்கிர பகவானும், ராகு - இராகு பகவானும், கேது - கேது பகவானும், அனுமன் - அனுமந்தனும், காரி - அரியர புத்திரனும், மதி - ரதி தேவியும், பூ - பூமியும், நீர் - கங்கையும், தீ - அக்கினி பகவானும், காப்பு - இந்தச் சாத்திரத்திற்குக் காவலாகும்.

*வல்லமையா வேசுவர்க்கம் வாகுதரங் கண்ணமரி*
*வல்லமையா வேசுவர்க்க மாதரிமே - வல்லமையால்*
*கும்பமுனி யாதிசட்டை கொங்கணிகோ ரக்கிசித்தக்*
*கும்பமுனி யாதிகல்வெல் கூர்.* 3

(சொ. பொ) வல் - சொக்கட்டான் போலவும், அமை - மூங்கில் போலவும், ஆல் - ஆலிலையைப் போலவும், ஏ - பாணத்தைப் போலவும், சுவர்க்கம் - முலையும், வாகு - தோளும், உதரம் - வயிறும், கண் - கண்ணும் படைத்திருக்கப்பட்ட, அமரி - துர்க்கையும், வல்லமையாலே - சாமர்த்தியத்தால், சுவர்க்கம் - தெய்வலோகத்தி லிருக்கப்பட்ட, மாதரி - வீர மாதாவும், மேவல் - பிரவேசமானது,

அமை - உண்டாயிருக்கிற சாமர்த்தியம், ஆல் - மேலாடுகிற, கும்பமுனி - அகத்தியர், ஆதி - முதலான, சட்டை - சட்டை முனியார், கொங்கணி - கொங்கணர், கோரக்கி - கோரக்கர் இவர்களுமல்லாமல், சித்தக்கும்பு - நவநாட்டுச் சித்தாதிகளுடைய கூட்டங்களும், (இந்நூலைக்காத்து ரட்சிக்கத்தக்கதாய்) அம் - அழகாக, முனியாது - குரோத மாறுபாடு செய்யாமல் வந்தனை செய்து, இகல் - பகையை, வெல் - செயம்பண்ண, கூர் - செய்யாய்.

*மாதங்க நாக மகரா லயநதிபொன்*
*மாதங்க நாகம் வருடமுதன் - மாதங்கம்*
*போகிய கப்பை புராதனிதன் வந்திரிமெய்*
*போகியகப் பையிருவர் போல்.* 4

(சொ. பொ.) மாதங்கம் - அஷ்டதிக்கஜங்களும், நாகம் - அஷ்டதிக்கு நாகங்களும், மகராலயம் - சத்த சமுத்திரங்களும், நதி - சத்த நதிகளும், பொன் - அழகிய, மா - பெருமை பொருந்திய, தங்க நாகம் - பொன் மலையான மகாமேரு பர்வதமும், வருடமுதல் - வருஷமுதல், மாதம் - மாதமும், கம் - ஆகாசமும், போகி - தேவேந்திரனும், அகப்பை - யோகிகளும், புராதனி - பாதராயணரும், தன் வந்திரி - தெய்வ வயித்திய சிரேஷ்டரான தன்வந்திரியாரும், மெய் - சத்தியானந்த ரிஷியும், போகி - போகரும், அகப்பை - அகப்பைச் சித்தரும், இருவர்போல் - இந்த இரண்டுபேரைப் போலே, எல்லோரும் இதனை நன்றாய்க் காத்து ரட்சிக்க வேண்டியது.

*வாகடத்தை வந்தபிணி வாராமற் றீர்த்திடவு*
*வாகடத்தை ரண்டறமீ வார்ந்தடலாம் - வாகடத்தைச்*
*சற்குருவாந் தேரந் தரும சவுமியர்*
*சற்குருவாந் தேரனுக்குந் தான்.* 5

(சொ. பொ.) வாகு - நன்மையை, அட - கெடுத்துப்போடத் தக்கதாய், தைவந்த - வருடிக் கொடுத்த, பிணி - வியாதியானது, வராமல் தீர்த்திட - வராமலிருக்கத் தக்கதாய், உவா - ஆனையானது,

கடத்து - மதங்களிலே, ஐ - ஐந்துக்கு, ரண்டற - இரண்டு நீங்க மற்ற மும்மதமும், மீ - மேலாக, வார்ந்து - பெருகி மீளுகிறது போலே, அடலாம் - அடிக்கிற சாமர்த்தியத்தை யுடைத்தான, வாகடத்தை - வயித்திய சாத்திரத்தைக் காக்க வேண்டியது, (ஆரெனில்) சற்குரு - நல்ல பரமாசிரியரானவர் பின்னும், ஆம் - அழகிய பொருளை, தேர் - ஆராயப்பட்ட, அம் - குளிர்ச்சியையுடைய, தருமசவுமியர் - தருமசவுமியரென்கிற நாமத்தையுடையத்தானவர், (ஈ)சற்கு - பரமசிவனுக்கு, உருவாம் - தேகமாயிருக்கப் பட்டவர், தேரனுக்கும் - தேரப் பெருமாளென்கிற பண்டித சிகாமணிக்கும், தான் - மெய்யாகத்தான்.

*சொன்னவரை மீதிருந்து தூயமறை யாகமநூல்*
*சொன்னவரை மீதிருந்து தொல்லுளஞ்சேர் - சொன்னவரை*
*யாதரிக்கும் பாரி லதுபோன் மருந்தஞர்வை*
*யாதரிக்கும் பாரினியை யா.* 6

(சொ. பொ.) சொன்னவரை - மகாமேரு கிரி, மீது - மேலே, இருந்து - எழுந்தருளி, தூய - பவித்திரமான, மறை - வேதங்களையும், ஆகமம் - ஆகமங்களையும், நூல் - சாத்திரங்களையும், சொன்ன வரை - அருளிச் செய்தவரெவரோ அவரை, மீ - சிலாக்கியமாகத்தானே, திருந்து - திருத்தமாகிய நல்ல, தொல் - பழமையோடுங் கூடிய, உளம் - இருதயத்திலே, சேர் - தியானம் பண்ணு, சொல் - நெற்கதிராக விளைந்த, நவரை - ஒரு சாதி நெல்லை, ஆதரிக்கும்- நம்பியிருக்கப்பட்ட சீவன்றானே மானிடரோடுங்கூடிய, பாரில் - பூமியின் கண்ணிலே, அது போல் - அந்தத் தானியமானது பசிப்பிணிகளையெல்லாம் எப்படி யோட்டி மனிதர் தேகங்களைப் போஷிக்குமோ. அப்படிப் போல் சமிதையாக, மருந்து - வயித்திய சாத்திரப்படிக்கு வயித்தியராலே செய்யப்பட்ட அவிழ்தமும், அஞர் - உபத்திரவ வியாதியைத் தேகத்திலே, வையாது - இருக்கவொட்டாமல், அரிக்கும் - அதம்பண்ணிப்போடும், பார்-நீ பரீட்சித்துச் சோதனை வேணுமென்றால் பார்த்துக் கொள்ளலாம், இனி - மேலே, ஐயா - என்னுடைய துணைவனே.

*அவையடக்கம் புன்மை யநீத மகந்தை*
*அவையடக்கம் பம்போ யறஞ்செ - யவையடக்கக்*
*கத்திகையா மென்னுங் கவிபோற்றே ரன்வெண்பாக்*
*கத்திகையா மோனையம கம். 7*

(சொ. பொ.) அவையடக்கம் - சபையின் கண்ணிலே யடங்கியிருத்தலும், புன்மை-நடத்தையீனமும், அநீதம்-நீதியில்லாமையும், அகந்தை - ஆங்காரமும், அவை - இவைகளெல்லாவற்றையும், அட - சங்காரம் பண்ண, கம்பம் - நடுக்கமும், போய் - விட்டு விட்டு, அறம் - தருமத்தை, செய் - பண்ணப்பட்ட, அவையள் - ஒளவையாரைப் போல, தக்க - யோக்கியமாகவும், கத்தி - ஆயுதமானது, கை - கையிலே, ஆமென்னும் - இருக்கிறதென்று சொல்லிக் கொள்ளத்தக்கதாகும், கவிபோல் - ஒளவையாருடைய மகிமை பொருந்திய பாட்டைப்போல், தேரன் - தேரனுடைய, வெண்பா - வெண்பாவாகிய, கத்திகை - மாலையாகிய, ஆம் - அழகு பொருந்திய, மோனை - ஆதியான, யமகம் - யமகமென்று சொல்லப்பட்டது.

*முத்தமிட்டு றைக்குமன்னர் மூடனென்வாய்ச் சொற்கொளல்சேய்*
*முத்தமிட்டு றைக்குமிலை மொய்கொளல்போன் - முத்தமிட்டுச்*
*சங்கமுற முன்புசிறார் தாங்களிக்கக் காட்டேரற்*
*சங்கமுற முன்னவர்போற் றான். 8*

(சொ. பொ.) முத்தமிழ்-இயலிசை நாடகத்தினது, துறைக்கு-பிரபந்தத் திராவிடத்துக்கு, மன்னர் - கவிராசரான புலவர்கள், மூடன் - முட்டாளான, என் - என்னுடைய, வாய் - வாயினாலே பேசுகிற, சொல் - பேச்சை, கொளல் - அங்கீகாரம் பண்ணிக்கொள்ளுகிறது எப்படியென்றால், சேய் - குழந்தைப் பிள்ளையினுடைய வாயை, முத்தமிட்டு - தாங்கள் முன்னே முத்திகொடுத்துப் பிறகு அந்தக் குழந்தைப் பிள்ளையினது வாயில், உறைக்கும் - எச்சிலிலே ஊறியிருக்கப்பட்டதான, இலை - வெற்றிலையை, மொய் - (தாயானவள்) உடனே, கொளல் - வாயிலே

வாங்கிக் கொள்ளுதல், போல் - போலவும், முத்து - முத்துகளை, அம் - அழகாக, இட்டு - பெற்றுவைத்த, சங்கம் - சங்குகள், உற - உண்டாயிருக்க, முன்பு - எதிரிலே, சிறார் - பிள்ளைகளுக்கு, தாம் - தங்களிலே, களிக்க - சந்தோஷமுண்டாகத் தக்கதாகப் பதிலுக்கு, காட்டு - காண்பிக்கும், ஏரல் - கிளிஞ்சிலினுடைய, சங்கம் - கூட்டத்தினது, முறம் - முறங்களாக மிகவும், முன் - நினைக்கப்பட்ட, அவர் - அந்த மனிதரைப், போலவும் - போன்றும், தான் - மெய்யென்று.

*நாகரத்தி னத்தை நகையி லிடலெனவே*
*நாகரத்தி னத்தை நடாத்தினோம் - நாகரத்தி*
*யாயுள்வே தத்தை யருந்தமிழி னாற்புனைந்தே*
*யாயுள்வே தத்தையறி வாய்* 9

(சொ. பொ.) நாகரத்தினத்தை-சர்ப்பத்தினது சிரோரத்தினமாகிய மாணிக்கத்தை, நகையில் - ஆபரணத்திலே, இடல் - அழுத்துகிறது, என - போல, ஏ - அசை. நாகரத்தின் - நாகரத்திலேயிருந்த தெய்வ பாஷையை. அத்தை - ஏற்பாட்டை, நடாத்தினோம் - தமிழ்ப் படுத்தினோம், நாகர் - தேவதைகளுடைய, அத்தி - சமுத்திரத்தைப் போன்ற, ஆயுள் வேதத்தை - வயித்திய சாத்திரத்தை, அரும் - அருமையான, தமிழினால் - திராவிடத்தினாலே, புனைந்தே - அலங்கரித்துத்தான், ஆய் - விசாரணைபண்ணு, உள் - உள்ளேயிருக்கிற, வேதத்தை - வித்தியாசங்களை, அறி - தெரிந்து கொள்வாய், ஆய் - தாய் போல.

**புதிய உரை :-**

(சொ. பொ.) நாகம் - உயர்ந்த, ரத்தினத்தை - மாணிக்கத்தை, நகையில் - (உயர்ந்த) நகையில், இடல் என்ன - (பொற்கொல்லன்) இட்டு இழைத்தல் போல, நாகரம் - (பயன்பெறுவோர் பலராலும்) விரும்பப்படுகின்ற, அத்தியாய் - கடல் போல் பல இடங்களிலும் பலரிடங்களிலும் மருந்து முறைகள் வழக்காக, உள - இருந்ததான, (அவற்றை எல்லாந்திரட்டி) ஏதத்தை - அவற்றிலிருந்த

குற்றங்களையெல்லாம் ஒருவாறு ஒழித்து, இனத்தை - ஒவ்வோரினத்தையும் வரிசைப்படுத்தி, அருந்தமிழினாற் புனைந்து - எளிய தமிழாகிய விருத்தம் முதலியவற்றால் செய்யாமல் அரிய தமிழாகிய ஒருவகை யமகத்தால், நா - நாவையும், கரத்து - கைகளையும் துணை கொண்டு, நடாத்தினோம் - செய்தோம் (ஆகையால்) இந்நூலில் சொல்லப்பட்டதைப் போல, உள் - இந்த உடலின், அ - அந்த, ஏது - (பலவகைக்) காரணங்களால் உண்டாகின்ற, அத்தை - அந்த வாத, பித்த, ஐயங்களால் உண்டாகி வருத்துகின்ற, பலநோய்களையும் ஆய் - அவற்றின் ஆயுள் காலங்களையும், அறிவாய் - நன்றாய் ஆராய்ந்து பார்த்து உணர்ந்துகொள்வாய்.

"மாணிக்கம் பூண்பார்க்கு மற்றொருகல் வேண்டுமோ" என்றும், "எடையொழிமணி" என்றும், பல நூல்களில் சொல்லப்பட்டிருப்பதால், உயர்ந்த மாணிக்கத்தை உயர்ந்த மதிப்புள்ள நகையில் இட்டு இழைப்பது வழக்குஞ் சிறப்பும் ஆகையால் நகையில் என்றதற்கு "உயர்ந்த நகையில் எனவும், பண்டைக்காலத்தில் பெண்களைச் செய்யுள் வழக்கில் மகடூஉ முன்னிலையாக விளிக்குங்கால் 'மாணிழாய்' 'நேரிழாய்' என்று விளித்தமை, இழைக்கப்பட்ட நகைகளை அணிந்தவளே! என்னும் பொருளைத்தரலால் அக்காலத்து நகைகளெல்லாம் இழைக்கப் பட்டவைகளே எனப்போதரலின், 'இடல்என' என்றதற்கு 'இட்டு இழைத்தல்போல' எனவும், பொற்கொல்லன் நகைகளை இழைக்குங்கால் நாவில் ஊறும் எச்சிலும், கைகளும் துணைகளாதல் போல, நாவால் சொல்லியும் கைகளால் எழுதியுமே நூல் முடித்தல் வேண்டுமாகையால், 'நாகரத்து' என்றதற்கு நாவாலும் கைகளாலும் எனவும் எழுதப்பட்டன.

எள்ளரிசி வழக்கு என்னும் 'திலாதண்டுல நியாய' மாக ஒரு கறுப்பு நிற மருந்துடன் ஒரு வெள்ளை நிற மருந்தை விரவிக் கூறும் மற்ற நூல்களைப்போல் கூறாமல், அவ்வவ் வகைகளைத் தனித்தனி தொகுத்து வரிசைப்படுத்திக் கூறுதலின், 'இனத்தை' என்றதற்கு, ஒவ்வோரினத்தையும் வரிசைப்படுத்தி எனவும் எழுதப்பட்டது.

மா. வடிவேலு முதலியார்

18-3-42

கத்துருவை யார்சேய் கடிக்குவெண்குஞ் சத்ததுவா
கத்துருவை நீர்போற் கவிக்குருமிற் - கத்து
வயினதே யன்பாத மானதமாங் கோவில்
வயினதே யன்பாக வை. 10

(சொ. பொ.) கத்துருவையார் - கத்துருவினுடைய, சேய் - பிள்ளையாகிய பாம்பினுடைய, கடிக்கு - கடிக்கிற விஷத்திற்கு, வெண் - வெள்ளை, குஞ்சத்தது - குன்றிமணி வேர், ஆக - சமூலம் ஆக, துருவை - வெள்ளாட்டினுடைய, நீர் - மூத்திரம் போலே, போல் - சமிதையாக, கவிக்கு - இந்த மோனை யமக வெண்பா வென்னும் பாவுக்கு, உருமு - இடியை, இல் - போல, கத்து - கர்ச்சிக்கப்பட்ட, வயினதேயன் - கருடபகவானுடைய, பாதம் - பாதாரவிந்தங்களை, மானதம் - மனசு, ஆம் - ஆகும், கோவில் - ஆலயத்திலே, வயின் - இடமாக, அதே - அதில்தானே, அன்பாக - பத்தி விசுவாசத்துடனே, வை - தாபிதஞ் செய்துகொள்.

முட்டா ளரவிந்த முன்குமுத மீடறல்போன்
முட்டா ளரவிந்த மூப்பறிந்தும் - முட்டாள்
வரமுடையே னத்திடலென் மாபரர்முன் பேச
வரமுடையே னத்திடலென் வாய். 11

(சொ. பொ.) முள் - முள்ளையும், தாள்-கொடியையும் உடைத்தான, அரவிந்தம் - தாமரைப்பூவின், முன் - முன்னே, குமுதம் - அல்லிப்பூவானது, ஈடு - சமானம், அறல் - அற்றுப்போதல், போல் - போலச்சமிதையாக, முட்டாளர் - மூடர்கள், அவிந்த - (கல்விமான்கள் முன்னே) அடங்கிப்போன, மூப்பு - பழமையை, அறிந்தும் - அறிந்திருந்தும், முட்டு - தட்டுதலையுடைய, ஆள் - மனிதத்தனமான, வரம் உடையேன் - வரப்பிரசாதத்தையுடைய நான், நத்திடல் - ஆசைப்படுகிறது, என் - என்ன, மா - பெருமை பொருந்திய, பரர் - வித்துவசேனங்கள், முன் - எதிரிலே, பேச - பேசுகிறதற்கு, வர -

வருவதற்கு, முடை - நாற்றத்தையுடைய, ஏனம் - பன்றியினுடைய, திடல் - சமத்தைப்போல, என் - என்னுடைய, வாய் - வாசகமென்றவாறு.

*ஏகாட்சி யானாளில் எந்தா யுகந்தகதி*
*யேகாட்சி யாதலினா லேழைநெஞ்சே - யேகாட்சி*
*யாங்கவிகை வல்லியமே யாரா தனையிடமே*
*யாங்கவிகை வல்லியமெய் யாய்.* 12

(சொ. பொ.) ஏகாட்சியான் - சுக்கிர பகவானுடைய, நாளில் - வாரத்திலே, எம் - எங்களுடைய, தாய் - பரமேஸ்வரி, உகந்த - வீற்றிருக்கப்பட்ட, கதியே - திருவோலக்கமான கொலுவே, காட்சி - நல்ல தெரிசனச் சேவையே சேவை, ஆதலினாலே - ஆனபடியினாலே, ஏழை - அறிவில்லாமையையுடைய, நெஞ்சே - மனதே, ஏகு - போ, ஆட்சி - நிலையான வாழ்வு, ஆம் - கிடைக்கும், கவி - முனைந்துபார், கைவல்லியமே - கைவசப்படும், ஆராதனை - சக்தி பூசைபண்ணுகிற, இடம் - இடத்திலே, ஏய் - இசைவாக, ஆங்கு - அங்கே, அவி - அடக்கிப்போடு, கை - பொல்லாத, வல்லியம் - புலியை, மெய்யாய் - நிச்சயமாக.

*பண்டிதரை நோக்குமறைப் பௌவங் கரைகாண்போர்*
*பண்டிதரை யென்னநெஞ்சே பண்ணுவைநோய் - பண்டிதரை*
*யேழையிடை யனிளிச்ச வாயன் பணிவி*
*யேழையிடை யன்பாகியே.* 13

(சொ. பொ.) பண்டிதரை-வயித்தியர்களை, நோக்கும் - பார்க்கப்பட்ட, மறை - வேதமாகிய, பௌவம் - சமுத்திரத்தை, கரை - கரையை, காண் - காணமாட்டுவாய், போர் - வயித்தியச் சண்டையும், பண்டு - முன்னாலே, இது - இந்தச் சாத்திரம், அரை - பாதி, என்ன - என்று சொல்லத்தக்கதாய், நெஞ்சே - மனசே, பண்ணுவை -

பண்ணமாட்டுவாய், நோய் - வியாதிகளுடனே, பண்டி - வயிற்றிலே, தரை - பூமியை வைத்திருந்து, ஏழை - இராமாவதாரமும், இடையன் - கிருஷ்ணாவதாரமும், இளிச்சவாயன் - நரசிங்காவதாரமும் (இந்த மூன்றும் விஷ்ணு அவதாரத்திலே யோக்கியமானது. பூசிக்க நன்மையாம்.), பணி - பூசைபண்ணு, வி - நீங்கலான, ஏழை - மற்ற ஏழு அவதாரத்தையும், இடை - விட்டுவிடு, அன்பாகியே - ஆசைவிசுவாசத்துடனே,

*வயிரவரை நேரோசை வைகரியுள் வைத்தே*
*வயிரவரை நேராய் வதிந்தே - வயிரவரை*
*யாரா தனஞ்செயனே யத்துள்வை(ப்பை) யென்மகனே*
*யாரா தனஞ்செயனே யாம்.* 14

(சொ. பொ.) வயிரவரை - நாதசுரக்காரரை, நேர் - போலே, ஓசை - சத்தத்தை, வைகரி - நாபி முதல் இருதயவரையி லடங்குகிற சத்தத்திலே, உள் - அடங்கியிருக்கத்தக்கதாய், வைத்தே - யோகாப்பி யாசஞ்செய்து, வயிரவரை - வச்சிர மலையைப் போலே, நேராய் - நிலையாய், வதிந்தே - இருந்துகொண்டு, வயிரவரை - கால வயிரவ மூர்த்தியை, ஆராதனம் - பூசையை, செயல்-பண்ணுகிற, நேயத்துள் - மனதிலே, வை(ப்பை) - வைக்கவேணும், என்-என்னுடைய, மகனே - அன்பனே, ஆரா - உன்னை யாரென்று யோசனை பண்ணுமிடத்திலே, தனஞ்செயனே - அர்ச்சுனனே, ஆம் - சந்தேகமில்லை.

செல்வந் தழைக்குந் திடமுண்டாந் தெய்வதமண்
செல்வந் தழைக்குஞ் சிகாவளம்போற் - செல்வத்
தனமாத்தி வீரங்கோ தஞ்சீர்த்தி செய்வி
தனமாற்றி விக்குமது தான். 15

(சொ. பொ.) செல்வம் - பாக்கியம், தழைக்கும்-அதிகமாகும், திடம்-தைரியம், உண்டாம் - கிடைக்கும், தெய்வதம் - மகிமை, அண் - சேரும், செல் - மேகம், வந்து - கிட்ட வந்து, அழைக்கும் - அழைக்கப்பட்ட, சிகாவனம் - மயிலை, போல - போலவும், செல் - செம்மைக்குநட, வந்தனம் - உபசாரம், ஆற்றி - செய்து, வீரம் - சிந்தூரமான செந்தூரமும், கோதம் - மாத்திரையும், சீர்த்தி - பற்பமும், செய் - பண்ணிக்கொள்வாயேயானால், விதனம் - விசாரத்தை, மாற்றிவிக்கும் - போக்கடிக்கும், அது - அந்தப்பலம், தான் - தானே.

*விண்ணப்ப மீதாயுள் வேதியரா யோதடியேன்*
*விண்ணப்ப மீதாயுள் வேதியர்க்கு - விண்ணப்பஞ்*
*சிந்தூரம் பற்பஞ் செறிவா யுறழ்மாத்ரை*
*சிந்தூரம் பற்பமுதல் சேர்.* 16

(சொ. பொ.) விள் - சொல்லப்பட்ட, நல்பு - நம்பிக்கை, அ - அந்த, மீ - மேம்பாட்டிலே, தாய் - தாயைப்போல, உள் - நினைக்கப்பட்ட, வேதியராய் - பேதமானவர்களாய், ஓது - சொல்லப்பட்ட, அடியேன் - நான், விண்ணப்பம் - மனு பண்ணிக்கொள்ளுகிறேன், ஈது - இது, ஆயுள்வேதியர்க்கு - வயித்தியர்க்கெல்லாம், விண் - ஆகாயத்து, அப்பு - மேகத்தின், அம் - நீரும், சிந்து - கடலின்கண், ஊர் - பரவிய, அம்பு - நீரும், அற்பம் - சிறிது, செறிவு - வித்தியாசம், ஆயுறழ் - அப்படிப்போல, மாத்ரை - மாத்திரையும், சிந்தூரம் - செந்தூரமும் பற்பம் - பற்பமும், முதல் - இன்னமும் மருந்துகளை, சேர் - பண்ணிக்கொள்.

*தாதுவி னாடிபண்டி தர்க்குக் கணிதர்க்கெய்*
*தாதுவி னாடியெய்திற் சத்தியமாந் - தாதுவினா*
*கும்பரமர் நந்தி குமாரதரு மந்திரி*
*கும்பரமர் தேரர்சித்திக் கும்.* 17

(சொ. பொ.) தாது - தாதுவினுடைய, இன் - உண்டான, நாடி - நாடி நிதானமும், பண்டிதர்க்கு - வயித்தியர்க்கு, கணிதர்க்கு - சோசியர்க்கு, எய்தாது - அகப்படாது, வினாடி - நாழிகையும், எய்தில் - அகப்பட்டால், சத்தியம் - உண்மையாக, ஆம் - சித்திக்கும், தாதுவின் - காவியைப்போல, ஆகும் - சிவந்த, பரமர் - சிவன், நந்தி - நந்திகேசுவரர், குமாரர் - சுப்பிரமணியர், தருமந்திரி - தன்வந்திரி, கும்பர் - அகத்தியமுனி, அமர் - சித்தாதிகள், தேரர் - தேரன், சித்திக்கும் - இவர்களுக்கெல்லாம் வயித்திய பாரம்பரியமான வாகடசாத்திரப்படிக்கு அவிழ்தங்களெல்லாஞ் செய்தபடிக்கு வியாதிகளை யெல்லாம் போக்கடித்து வெற்றியைக் கொடுக்கும்.

(பரமசிவன் முதலாகத் தேரன் ஈறாகச் சொல்லப்பட்ட ஏழுவகையாரும், மகிமையான சம்பிரதாயமான பண்டிதர்கள். இந்த ஏழில் முதலுங்கடையும் இந்தக் கலியுகத்திலே புள்ளிருக்கும் வேளூர் வயித்திய ஈஸ்வரரும், வாகடத்திலே தேரனும் பிரபல்லிய திஷ்டாந்திரமாக விளங்கினார்கள் என்பதறியப்படும்.)

**(பாயிரம் முற்றிற்று)**

# முதலாவது நூல்

## வாத குணம்

*பொற்றா மரையான் புனைமெய் யரண்காக்கும்*
*பொற்றா மரையான் புகல்வதென்னே - பொற்றாம்*
*வளவினிலை யாக்குரம்பை மன்னனென மன்ன*
*வளவினிலை யாக்கும் வளி.* 1

(சொ. பொ.) பொன் - சொர்ணத்தினது மயம்பெற்ற, தாமரை - கமலாசனத்தை, யான் - உடைய பிரமதேவன், புனை - உண்டு பண்ணிய. மெய் - சரீரமான, அரண் - கோட்டையை, காக்கும் - ஆளப்பட்ட, பொன் - அழகிய, தாமரை - மாலையையுடைய வர்க்கத்தை, யான் - நான், புகல்வது - சொல்லவேண்டியது, என்னே - என்னத்துக்காக, பொற்றாம் - நவத்துவாரங்களுடனே கூடிய, வளவின் - வீட்டினுடைய, நிலையா - அநித்தியமான, குரம்பை - குடிசைக்கு, மன்னன் - அரசன், என - என்று சொல்லத்தக்கதாய், மன் - நிலை பெற்ற, அ - அந்த, அளவினில் - பிரமாணத்திலே, ஐ - அனுமானத்தை, ஆக்கும் - உண்டு பண்ணப்பட்ட, வளி - வாதத்தினது குணம்.

## வாத சுரத்தின் குணம்

*அங்கங் கறுக்குமிசை யானனமா மேனியுளை*
*யங்கங் கறுக்குமிசை யாதுணவா - யங்கம்*
*பரமாக பண்ணுமுடல் பாவகனா நோய்வி*
*பரமாகப் பண்ணுநிரு பன்.* 2

(சொ. பொ.) அங்கம் - சரீரமெல்லாம், கறுக்கும் - கறுப்பாயிருக்கும், மிசை - மேலே, ஆனனம் - முகத்திலே, ஆம் - நீரின் பந்தத்தாலே, மேனியுள் - சரீரத்திற்குள்ளே, ஐ - அனுமானம் போலே, அங்கங்கு - உறுப்பு எங்கேயும், (அந்தந்தப் பீடங்களெல்லாம்), அறுக்கும் - சுறுக்குச் சுறுக்கென்று கடுக்கும், இசையாது - வேண்டியுண்ணக் கூடாது, உணவு - போசனம் (பொசிப்பு), ஆய - இனந்தலையாயாசம், அம் - சலமானது கம் - சிரசிலே, பரம் - பளுவாய், ஆக - உடம்பினிடத்திலே, பண்ணும் - சீனி போட்டாற்போலே இருக்கும்படியா யிருக்கும், உடல் - கோபக்குரோதக் கொதிப்பைப் போல, பாவகன் - அக்கினி பகவானைப் போலவும், ஆம் - சுரங்காயும், நோய் - வியாதிகள் வெகுவாகும். விபரமாக - வயணங்களேற்படத்தக்கதாய் அநேக வித்தியாசமுண்டாகும் படியாய், பண்ணும் - செய்யும், நிருபன் - அரசனென்று சொல்லப்பட்ட வாதசுரத்தினது குணங்கள்.

## பித்தசுரத்தின் குணம்

*பாடலமெய் மானாகம் பாறுநிக ராகவுடல்*
*பாடலமெய் மானாகம் பாறுமே - பாடலங்கம்*
*பித்தசுர மாகவரு பேராக் கினிமயமாம்*
*பித்தசுர மாகவரும் பேய்.* 3

(சொ. பொ.) பாடலம் - குதிரையைப்போலவும், ஏய் - முள்ளம் பன்றியைப் போலவும், மான் - மானைப்போலவும், நாகம் - குரங்கைப்போலவும், பாறு - பருந்தைப் போலவும், நிகராக - சமானமாக (எந்நேரமும்), உடல் - எதிராளி போலக் காயத்திலே வளர்க்கிறதுங் கனவுகள் காணுகிறது மல்லாமல், பாடலம் - சிவப்பு வர்ணம் பூசினது போலே சிவந்து, மெய் - சரீரமெல்லாம் பார்த்தபேர்கள் பிரமிக்கத் தக்கதாயிருக்கும், மான் - ஆத்துமா வென்கின்ற பிராணன், ஆகம் - உடம்பிலேயிருந்து நீங்கிப் போவது போலேயிருக்கும் வேதனையை ஒரு நிமிஷத்திலே கொடுக்கிறது போலேயிருக்கும், பாறுமே - பற்பலவிதமாய் மனமானது கலங்கிப்போகப் பண்ணும், பாடலம் -

பாதிரிப்பூ நிறமாகக் கண்ணும், மூக்குத்தண்டம் வேறு சிவப்பாகச் சிவந்திருக்கும், கம்பித்து - நடுக்கலுண்டாயுடம்பெல்லாம் பதறத்தக்கதாய், அசுரமா - இராட்சதர்கள் அவுணர்களிவர்களுடைய பெருமை பொருந்திய மாய்கைகளாலே அநேகமநேகமான வித்தைகளாலே இதரமான பேர்களுடைய மனத்தைக், கவரும் - வாங்கிக் கொள்ளப்பட்ட மோசங்கள் போலே அநேக மோசங்களைப் பண்ணும், பேராக்கினி - பெரிதான பிரளய காலாக்கினியினுடைய விபரீதமான வேகத்தைப்போல, மயமாம் - அதிகமான அந்த நெருப்பைப் போலக் காயப்பட்ட சுரமும் பிரமையும் பினத்தல் முதலானதும் மெத்தவுமுண்டாய் வருத்தத்தை மெத்த மெத்தக் கொடுக்கும், பித்தசுரம் - பயித்தியக்காய்ச்சலாகிய, ஆக - அப்படிப்பேராய், வரும் - வரப்பட்ட, பேய் - பிசாசு.

## சேட்ப சுரத்தின் குணம்

*அஞ்சுவே தத்துண்டா மானகமா னாகுங்கா*
*யஞ்சுவே தத்துண்டா மாம்வடவை - யஞ்சுவே*
*தத்தை யிருத்தை தனிலாக்குந் தப்பாது*
*தத்தையி ருத்தைநா தன்.* 4

(சொ. பொ.) அஞ்சு - பயங்கரத்தையுண்டாக்கத் தக்கதான, வேத - வித்தியாசத்தைக் காண்பிக்கத்தக்கதான, துண்டாம் - முகத்திலே காணத்தக்கதாயுண்டாம் பின்னேயும், ஆனகமானாகும் - மேளமடிக்கிற சத்தத்தைப் போலவும், மானம் சத்தித்துக் கூவுகிற சத்தத்தைப் போலவும் வேறு வேறு சத்தங்கள் காதிலேயிருந்து சிரசளவுங்காணப்படும், (பின்னும் வேறு), காயம் - சரீரமானது, சுவேதத்துண்டாம் - மயிர்க்காலுக்கு மயிர்க்கால் பிசுபிசுவென்று ஒருவித வேர்வை வேர்க்கும் படியாய் மெத்தச் சலப்பசுமையை உண்டுபண்ணும் (என்னவென்றால்), வடவை - வடவாமுகாக்கினியைப் போல ஒரு காலத்திலேயும் ஒருவராலேயும் நிறுத்தி மறுக்கக் கூடாது சுரமேலிடத்தக்கது. எப்படியென்றால் வடவாமுக மென்கிற தீயானது சமுத்திரத்தினது மத்தியில் நீரிலே தானே பிறக்கும் அது, நீருக்கடங்காது - அவியமாட்டாது

அப்படிப் போலே, சேட்பத்திலே தானே பிறந்த சுரமானபடியினாலே மற்றச் சாந்தப்படுத்துவதான மாத்திரை பற்பங்களாலே யடங்கத்தக்கதாயிராத விடமித்த காய்ச்சலென்பது பெற்றாம், அம் - நல்ல வர்ணமான, சுவேதத்தை - வெண்மை நிறத்தை, இருத்தை - ஒரு நாழிகை நேரம், தனிலாக்கும் - அதுக்குள்ளே உண்டுபண்ணுவித்துப் பார்த்த பேர்களுக்குப் பிரமை உண்டுபண்ணும், தப்பாது - எப்படியும் உண்டு பண்ணும் அதற்கு அனுமானமில்லை, தத்தை - அப்பேர்ப்பட்ட ஆபத்தை, இருத்து - எப்படியும் வரத்தக்கதாக நிறுத்தி வைக்கப்பட்ட, ஐ - செயமான சேட்பமென்று சொல்லப்பட்ட, நாதம் - சேனாதிபதியான வரிப்படி செய்வார். அவருடைய நடத்தைக் குணங்களை அறிந்து கொள்ளவேண்டிய வயித்தியர் அறிந்துகொள்ள வேண்டியது.

## அசாத்தியம்

*அத்தத்தை நாடி யலையாமற் றீபமுறை*
*யத்தத்தை நாடி யடங்குநெறி - யத்தத்தை*
*கோழி யரையன் கொடிவாய்த்தேன் ராசாளி*
*கோழியரை யன்றொந்து கொள்.* 5

(சொ. பொ.) அத்தத்தை - பாக்கியங்களிலே பேதமான வீடு, மாடு, பொன், காணி, புத்திரமித்திர களத்திராதிகளை அத்துகளை வேறு வேறாகிய வகைகளை, நாடி - எண்ணி யெண்ணி மயங்கத்தக்கதான காலமாகிய மரணகாலமென்கிற சமீப காலத்திலே மருண்டு தவிப்பதான காலத்திலே, அலையாமல் - வயித்தியனானவன் நாடி பார்த்து நிதானித்துச் சொல்ல மாட்டாமல் விசாரப்படாமற்படிக்கு, தீப முறை - விளக்கினது விவரத்தைப் போல ஒருமிக்க விளக்கு அணைந்து போகிற போது தானே மீறி எப்படி எரிபோலே எரியுமோ அப்படித்தானே, அத்தத்து - நோயாளியினது கையிலே. ஐ நாடி - சிலேத்துமநாடியானது படாமல், அடங்கும் - ஒளித்திருக்கப்பட்ட, நெறி - திருட்டு வழியினது பருவ வித்தியாசத்தை, அத்தத்தை - அந்த வித்தியாசக் கபடத்தினாலுண்டாக்கப்பட்ட ஆபத்தை, கோழியரையன் -

அறிந்து கண்டுபிடித்து நிதானமாகச் சொல்ல வேண்டியது எப்படியென்றால் சோழராசாவினது, கொடி - புலியைப் போல ஒரு மிக்க ஒருதிறமாய்ப் பாய்ச்சல் பாய்கிற விதமாய் நாடி நரம்பின் வழியிலே முன்னூல்களிலே சொல்லப்பட்ட நடையை விட்டுப்புதிதாக நடப்பதும், வாய - காக்கையினது சிறுபாய்ச்சலாகப் பறக்கிறது போலே நடப்பதும், தேள் - தேளானது கொடுக்கையெடுத்துக் கொண்டோடித் திரிவதுபோலத் துரிதமாக நடப்பதும், ராசாளி - இராசாளிப் பட்சியைப்போலே பெரும்பாய்ச்சலாக மீறியெழும்பிப் பறக்கிறது போலே தாவித் தத்தி நடப்பதும், கோழி - முன்னூல்களிலே சொன்ன கோழி நடையுடனே கத்திப்பறக்கப்பட்ட வேகமும், அரை - மேற்படிக்கரைவாசியுமாகத் தோன்றத்தக்கதாக நடக்கிற நடையும், அன் - அன்னப் பட்சியுடைய நடையோடே கூடப்பறப்பது போலக் காணப்பட்ட நடையும், கொள் - இவைகளையெல்லாம் குறிப்பாக நன்றாயறிவினாலே யோசனை பண்ணிப்பார்த்துக் குறிப்பாலறிந்து கொள்ள வேண்டியது.

## நாடிப் பரீட்சை

*அன்ன மயில்குயில்மா வாண்டலையூ ரோதிபுளீ*
*அன்ன மயில்குயில்மா வாண்டலையாய் -அன்னமயில்*
*வித்தகரை யாவாயுள் வேதியரா மேனையர்செய்*
*வித்தகரை யாவரிது வீண்.* 6

(சொ. பொ.) அன்னம் - அன்னப்பட்சியைப்போலவும், மயில் - மயில் பட்சியைப் போலவும், குயில் - குயில் பட்சியைப் போலவும், மா - வண்டுப்பட்சியைப் போலவும், ஆண்டலை - கோழிப்பட்சியைப் போலவும், ஊர் - எறும்பைப் போலவும் ஓதி - ஓணானைப் போலவும், புள் - கெருடப் பட்சியைப் போலவும், ஈ - ஈயினது பேதமாகிய ஒரு சாதிப் பட்சியைப் போலவும் (ஆகிய இந்த வொன்பது வகையும் ஒவ்வொரு வகைக்கு மூன்றாக வாதத்திற்கும், பித்தத்திற்கும் சேட்பத்திற்கும் வரிசையாய்க் கிரமாலங்காரமாகப் பார்த்தால் ஒன்பதும்

சரிப்படும். அப்படிக்குப் பார்க்குமிடத்திலே, வாதத்திற்கு அன்னப்பட்சியும், மயில் பட்சியும், குயில் பட்சியும்; பித்தத்திற்கு வண்டுப் பட்சியும், கோழிப் பட்சியும், எறும்பும்; சேட்பத்திற்கு ஓணானும், கெருடனும், ஈயும் வரிசைக்கிரமமாகப் பார்த்துக் கொள்வது. பின்னும் மேலே கூறிய) அன்னம் - உண்ணப்பட்ட சோற்றை, அயில் - புசிக்கிறதினாலே அதனுடைய ரசங்கூடிக் கொழுப்பை வளர்க்க அதனாலே, குயில் - அது உண்டுபண்ணப்பட்ட, மா - பெரிதான கொழுப்பினாலது செய்யும் மயக்கத்தால், ஆண்டு - அந்த இடத்திலே (அந்த மயக்க நிமித்தம்) அலையாய் - மனம் தத்தளிக்கமாட்டாய், அன் - அப்பேர்ப்பட்ட, நம் - நம்முடைய, அயில் - கூர்மையான புத்தி கோசரத்தாலறியப்பட்ட, வித்தகர் - விற்பத்தியானவர்க்கே, ஐயா - நான் சொல்லுகிறேன், ஆயுள்வேதியர் - வயித்தியர், ஆம் - அது மெய்தான், ஏனையர் - மற்ற பேர்களெல்லாம், செய்வித்த - கட்டிவைத்த, கரையர் - கரையென்று மாத்திரமா, அரிதுவீண் - அருமையாய்ச் சொல்லவேண்டிய தொன்றுமில்லை.

## அசாத்திய இலட்சணம்

*பாசாங் குசனார் பரிபோ னரம்போடிப்*
*பாசாங் குசனார்வாய்ப் பல்லானாற் - பாசாங்கு*
*சாரமிலை தீபனமுந் தாகமும்பொ யீமறிலஞ்*
*சாரமிலை யச்சொல்காட் டம்.* 7

(சொ. பொ.) பாசாங்குசனார் பரிபோல் - பெருச்சாளி எப்படி நடந்து திரியுமோ அப்படிப் போல, நரம்பு - நாடியானது, ஓடி - நடந்து, பாசு - பச்சை நிறம், ஆம் - ஆகியிருக்கப்பட்ட, குசம் - தெர்ப்பைப்புல்லைப் போல, நார் - நீட்சிமை, வாய் - உண்டாகிய வறட்சியுடைத்தாய் இருக்குமேயானால், பல்லானால் - பல்லுங்கூட வறண்டு தெர்ப்பைப் புல்லைப் போலே இருக்குமேயானால், பாசாங்கு - அவனசைவாகி அசனதாக நித்திரை முதலானதுகள் அவனுக்கு வேண்டியதாகப்

பேசுகிறதெல்லாம், பாசாங்கு - மெய்யல்ல பொய்யே, சாரமிலை - சாத்தியமல்ல அசாத்தியமாய், தீபனமும் - பசிமுகமென்று சொல்லுகிறதும், தாகமும் - நீர்வேட்கையென்று சொல்லுகிறதும் இவைகளெல்லாம், பொய் - (அப்பிரயோசனமே பிரயோசனமில்லை) மெய்யல்ல பொய்யாம், ஈமம் - சுடுகாடான, நிலம் - பூமியிலே, சார் - போய்ச் சேரத்தக்க முன்னாடித்தானே, மிலைய - சாக்கிரதை பண்ணிக்கொள்வாயாகவும், சொல் - என்று சொல்லி உத்தரவு பண்ணு, காட்டம் - விறகு கட்டை முட்டைகளை.

## வாத பித்த சேட்ப விஷநாடித்துணிவு

*கைகால்வா யாறு கபமந்த மாகவும் பொய்*
*கைகால்வா யாறு கடுக்குமேற் - கைகால்வாய்*
*நம்பியிரா தேவையிலை நாளிறுமோர் சாமமட்டும்*
*நம்பியிரா தேவைகன்னல் நால்.* 8

(சொ. பொ.) கை - கைகளிடத்திலேயும், கால் - கால்களிடத்திலேயும், வாய் - வாயினிடத்திலேயும், ஆறு - வழிவழியாய் மேலும் மேலும், கபம் - சேட்பமானது, மந்தமாகவும் - மந்தகெதியாய்ச் சலத்தம்பனம் பண்ணிக் கொண்டதுபோலே, பொய்கை - தண்ணீர்க் குளத்தினைப் போலவும், கால்வாய் - தண்ணீர் ஓடுகிற கால்வாயினைப் போலவும், ஆறு - பிரவாகமாக ஓடுகிற நதியைப் போலவும், கடுக்குமேல் - ஒப்பாக வாத நாடியும், பித்த நாடியும், சேட்பநாடியும், இப்போது உவமானமாக எடுத்துக் கூறிய மூன்றை நிலையாகப் பார்த்து நன்றாய் நிதானித்துக் கொண்டால் அப்போது நல்ல வயித்தியராலே சொல்லப்பட்ட வாகட சாத்திரப்படியே அசாத்தியக் குறிப்புகளுக்கு நன்றாய்த் தெரியவரும்படி வருமேயானால் அந்த நோயாளியினுடைய உயிரை நீ நம்பி வயித்தியத்தைப்பிடித்துப் பார்க்க வேண்டியதில்லை; கை - விட்டுவிடு, கால்வாய் - அந்த வியாதியத்தனுடைய உயிரானது நமனுடைய வசமே அதற்கனுமான மில்லை, நம்பி - ஓ! ராசகுமாரனே (நிகரான பண்டிதனே!

நான் சொல்லுகிறேன் என்னுடைய வார்த்தையைக் கேளு) இராதேவையிலை - அதற்கு மரணக்கெடு வைக்கத்தக்கதாய் இருக்குமேயானால் ஒரு இராத்திரி யென்று ஒரு கெடுவு வைத்துச் சொல்ல வேண்டியதுங் கவையில்லை; அம்மாத்திரஞ்சாவகாசமிராது. நாளிலும் - பகல் மாத்திரம் என்றுஞ் சொல்லக்கூடாது, ஓர் சாமமட்டும் - ஒரு சாமமென்று சொல்லப்பட்ட ஏழரை நாழிகை மட்டுஞ் சொல்லப்போகாது, நம்பியிராதே - மெய்யென்று நிசமாக எண்ணிக்கையாயிருக்க வேண்டாம், வை - ஆனாலுமுன்னை வயித்தியனாச்சுதே யென்று சிலபேர் கெடுவு கேட்பார்களே, அதற்காகக் கருத்தாய்ப் பார்த்துக் கெடுவு வைக்க வேண்டியிருந்தால் வைத்துச் சொல்லு, கன்னல் - நாழிகையானது, நால் - நாலு நாழிகையென்று நிச்சயமாகச் சொல்.

## மரணக்குறிப்புத் துணிவு

*சாமந்தி யானனநேர் சக்கழிஞ்சிற் கொட்டையிரு*
*சாமந்தி யானமெனத் தம்பனைமேற் - சாமந்தி*
*வீமலத்தை யேற்று விழிபோல் விழிப்பையறா*
*வீமலத்தை யேற்கை விடு.* 9

(சொ. பொ.) சா - செத்துப் போவதற்கேதுகரமான மந்தி - பெண்குரங்கினுடைய, ஆனனம் - முகத்தை, நேர் சமான மாகவும், சக்கு - கண்களெல்லாம், அழிஞ்சிற்கொட்டை - அழிஞ்சிலின் கொட்டையைப் போலே வெண்ணிறமாகவும், இருசாமம் - இரண்டு சாமமென்று சொல்லப்பட்ட பதினைந்து நாழிகை மட்டுக்கும், தியானமென - செபம்பண்ணிக் கொண்டிருக்கிறவர்களைப் போல அடங்கி அசைவில்லாமல் தம்பனை - ஸ்தம்பாகாரமா யசைவில்லாமல், மேல் - மேலே (பின்னையும்), சாமந்தி - சாமந்தியான செவ்வந்திப் புஷ்பச் சாதிச் செடியின், வீ - பூவைப் போலேவண்ணமான நிறமாகிய, மலத்தை - மலத்தினுடைய வர்ணத்தையும் பார்த்துக்கொண்டு,

ஏற்றுவிழிபோல் - மீறிய எருதினுடைய பார்வை பார்க்கிற கண் பார்வையைப் போலே, விழிப்பை - பார்க்கிற மருட்சிப் பார்வையைப் போலே பார்வையுமுண்டான வேறான, அறா - விட்டுவிடாத, விமலத்தை - பயங்கரத்தையுடைதான அநேகமநேகமானத்தது ஆபத்துகளுக்கிடமான பொல்லாத மாறாட்ட வித்தியாசம்பட்ட மோசங்கள் மெத்தவும், ஏல-அப்படிக்கெல்லாம் பொல்லாமை இருக்குமே யானால், கைவிடு - அந்த வயித்தியத்தை மாத்திர மெய்யாக நம்பியிருக்கத் தேவையில்லை, அதை அறுதியாய் விட்டுவிட வேண்டியது.

## இதுவும் மரணக்குறிப்புத் துணிவு

*நாகநிற முந்தி நகிலவாகு கால்கையிடை*
*நாகநிற முந்தி நடுங்கவாய - நாகநிறம்*
*வேதியரைத் தேடுவளர் வெண்ணெயென்றக் காலாயுள்*
*வேதியரைத் தேடுவது வீண்.* *10*

(சொ. பொ.) நா - நாக்கும், கம் - தலையும், நிறம் - மார்பும், உந்தி - தொப்புளும், நகில் - முலையும், வாகு - தோளும், கால் - பாதமும்,கை - அத்தமும், இடை - இடுப்பும் இந்த ஒன்பதும், நாகம் - புன்னைப்பூவினது மத்தியிலிருக்கிற மஞ்சளுஞ்சிவப்புங்கலந்து, நிறம் - வர்ணமாகியேற்பாடகத் தக்கதாயும், முந்தி - முன்னேதானே எதிராக, நடுங்க - உதறலெடுத்துத் தத்தளிக்கத் தக்கதாய், வேதனையும் பொருமலு மடிக்கடி யுண்டாக, வாய் - வாயிலே, நாகம் நிறம் - பாம்பினது சுவாசம்போலே புசு புசென்ற மேல்மூச்சு வாங்கத்தக்கக்குண முள்ளதாகவும், வேதி - கழிச்சலுமதிகமா யடிக்கடி கழிய அந்தக் கழிச்சலானது மலம், அரைத்து, நன்றா யம்மியிலே, அரைத்த அரைப்புப் போலே, ஏடுவளர் - பாலிலேயேடு படிந்தது போலேயிருக்கின்ற, வெண்ணெயென்றக்கால் - வெண்ணெயைப் போலே இருக்குமேயானால், ஆயுள்வேதியரை - வயித்தியரை, தேருவது - வயித்தியம் பார்த்து அந்த வியாதியஸ்தனைச் சொஸ்தப்படுத்தலாமென்று

நம்பியழைக்கிறதெல்லாம், வீண் - பிரயோசனமில்லை. அந்த நோயாளியைச் சுத்தமாய் நம்பத் தேவையில்லை யென்று வாகட சாத்திரிகளெல்லாம் பேசிக்கொள்வார்கள்.

## காலம் நாடித்துணிவு அசாத்தியம்

*வைகறையை நண்பகலை மாலையைமே லேலவுயிர்*
*வைகறையை பித்தமுயிர் மாறிமுன்போர் - வைகறையை*
*மாட முறைகொல் வழிமூ நரம்பினை*
*மாடமுறை கொல்சொல் யமன்.* 11

(சொ. பொ.) முன்னாடிவாதத்திற்கும், பித்தத்திற்கும், சேத்துமத்திற்கும் காலமும், அந்த மூன்று நாடி நிதானமுஞ் சொல்லுகிறார்:- வைகறையை - சூரிய உதய காலமும், நண்பகல் - மத்தியான காலமும், மாலையை - சாயந்திரகாலமுமான பகலிலே பத்துப்பத்து நாழிகை விழுக்காடு முப்பது நாழிகையும் மூன்று பங்காக வரன்முறையாய், மேலேல - முன்சொன்னபிரகாரம் இராத்திரிக்கும் அப்படியே சரியாயிசைந்துவரத்தக்கதாய்ப் பங்கீடாக, உயிர் - சீவப்பிராணியானது, வைகு - இருந்து வாசம் பண்ணப்பட்ட, அறை - வீடாகிய சரீரத்தின் கண்ணிலே, ஐ - சேட்பமும், பித்தம் - பயித்தியமும், உயிர் - வாதமும், மாறி - இந்த மூன்றும் முன்னப்படியே ஒன்றைவிட்டொன்று முன்னும் பின்னுமாய், முன் - எண்ணிக்கையாயிருக்கப்பட்ட, போர்வை - மயிருடனே கூடிய தோலும், கறை - உதிரம், ஐ - இவைகளாலே சிலாக்கியப் பட்டிருக்கப்பட்டதான நரம்பினது வழி வசமாகியோடுகிற நாடி நிதானம் எப்படியென்றால், மாடம் - உளுந்து உருண்டு ஓடுகிறது போலவும், உறை - தண்ணீர் மேட்டிலிருந்து பள்ளச்சார்பான நிலத்திலே ஓடுகிறது நிகரானது போலவும், கொல் - அம்புபாய்ந்து மேலாகநின்று தாழ்ந்து சாய்வாகிப் பாய்ந்தொருக்காலே ஓடுகிறது போலவும், வழி - இந்த மார்க்கப்படிக்கு, மூ - மூன்று வகையான நரம்பின் வாத, பித்த சேத்துமமென்று சொல்லப்பட்ட நாடிகளுடைய நிதானமாகிய நடை

கெதியை நன்றாய் அந்தந்த விதத்தை யோசனை பண்ணி, மாடம் - அந்த நோயாளியினுடைய சரீரத்தை, முறை - வயித்தியராலே ஏற்பாடுண்டான வாகட சாத்திரத்தில் சொன்ன கிரமப்பிரகாரம், கொல் - நியமித்து நிச்சயமாய், சொல் - சொல்ல வேண்டியது எப்படியென்றால், இயமன் - நம்முடைய பாத்திரமான சரீரமென்று துணிந்து அவனெப்படியும் பொல்லாங்குடனே இறந்து போவானென்று சொல்க.

## போசனமுதல் குறிப்பும், சகுனமும் அறிந்து துணிதல்

*போசனத்தை நித்திரையைப் போகத்தை யாதரவைப்*
*போசனத்தை நேரறிந்து போற்றல்விட்டுப் - போசனத்தைக்*
*கண்டுமலை யாதி கனவு சகுனமிப்பாற்*
*கண்டுமலை யாதிபிட கா.* 12

(சொ. பொ.) இன்னமொரு வகைக் குறிப்புச் சகுனஞ்சொல்லுகிறார்:- போசனத்தை - சாப்பாட்டையும், நித்திரையை - தூக்கத்தையும், போகத்தை - சுகசவுக்கிய இன்பத்தையும், ஆதரவை - நிலைமையான உறுதித் திண்மையையும், போசனத்தை - இவைகளை யெல்லாம் நல்ல சாத்திர வயித்தியனானவன் நோயாளியைப் பார்க்கிறபோது தானே குறிப்பினாலே போசராஜனுடைய முகத்தைப் பார்த்த பேரெல்லா மெப்படி சாயித்திய கவனஞ் சொல்லுவார்களோ அப்படி மகிமை யுக்தி யூகையுண்டா யிருக்கவேணுமென்கிற லட்சணத்துடனே, நேரறிந்து - சமமாகப் பார்த்துக்கொண்டு மேலே நிராசையாய், போற்றல்விட்டு - பண்டிதம் பார்க்கிற வேலையை அறுதியாய் நிராகரித்துவிட்டு, போ - நோயாளியினுடைய வீட்டைவிட்டு வெளியே துணிந்து போய்விடு, சனத்தை - அங்கே நோயாளியைப் பார்த்து மயங்கிக்கொண்டிருக்கப்பட்ட அவனுடைய உறவின்முறை பந்துசனங்களையெல்லாம், கண்டு - பார்த்து அவர்களுடனே நீயுங்கூடத்தானே மனோதைரியத்தை விட்டு, மலையாதி மருட்சியாய் மருண்டு போய்விடாதே, கனவு - சொப்பனங்களிலேயும், சகுனம் - சகுனங்களிலேயும், இப்பாற்கண்டு மலை - முன்னே போகும்

போது பின்னாலேயிருந்து தும்முகிற தும்மலை, ஆதி - இவைமுதலான துர்க்குண துர்ச்சகுன, உற்பாதங்களினாலேயும், பிடகா - வயித்திய சிரேஷ்டனே! நீ யறிந்து துணிவாயாக.

## வயித்தியம் பார்க்கத் திதியறிதல்

*அஞ்சுபத்து முன்னிருத்தை யாபத் திரைசதமி*
*அஞ்சுபத்து முன்னிருத்தை யட்டமிவி - யஞ்சுபத்து*
*நல்லுவா வாறு நவமி பதினொன்று*
*நல்லுவா வாறுபதி னால்.* 13

(சொ. பொ.) வயித்தியனானவன் வயித்தியம் பார்ப்பதற்காகத் திதிகள் சொல்கிறார் :- (எப்படியென்றால்) அம் - அழகிய, சுபத்து - நல்ல சவுக்கியத்துக்கு, முன் - முதற் பிரதானமாக, இருத்து - வைத்துக் கொள்ளவேண்டியது, ஐயா - என்னய்யனான வயித்தியனே நீ, பத்திரை - துதியை, சதமி - சத்தமி, அஞ்சு - பஞ்சமி, பத்து - தசமி, முன்னிருத்தை - சதுர்த்தி, அட்டமி - எட்டாந்திதியாகிய அட்டமி, வி - இவைகளல்லாத, அஞ்சுபத்து - பயப்படத்தக்க பொல்லாதயுக்தமான, நல்லுவா - கிருஷ்ணபட்சத்துவாவான அமாவாசை ஆறு - அதற்குச் சரியான தான பாட்டிமை, நவமி - ஒன்பதாவது திதியாகிய நவமி, பதினொன்று - ஏகாதசி, நல்லுவா - பருவம் (பாட்டிமை) ஆறு - சஷ்டி, பதினால் - சதுர்த்தசி இவை பொல்லாதன மற்ற மீதியான திரிதிகை, துவாதசி, திரையோதசி இந்தமூன்றும் மத்திமம்.

## வார மறிதல்

*மதியாத வன்மதித்து மத்தியென்று சுத்த*
*மதியாத வன்முதன்மை மைந்தர் - மதியாத*
*பாற்கடலை மானப் பளிங்காண் டனப்பானசேய்*
*பாற்கடலை மானவைப்பார் பார்.* 14

(சொ. பொ.) வயித்தியம் பார்க்குமிடத்திலே வயித்தியனானவன் பார்த்துக்கொள்ளவேண்டிய வாரங்களெப்படி யென்றால் :- மதி - சோமவாரம், ஆதவன் - பானுவாரம், இந்த இரண்டையும் வரிசையாகக் கிரமமாக, மதித்து - உத்தமமாக முதலிலே சகலயோக்கியத்துக்கும் முதலாக வைத்துக்கொள்ளுகிறது சோமவாரமொன்று மாத்திரமே, இரண்டாவது உத்தமமாக வைத்துக் காட்டப்பட்டது. புத வாரமாத்திரம், மத்தியென்று - நல்லதுமல்லாமல் பொல்லாததுமல்லாமல் வித்தியாசமாயிடையிலே மத்திமமென்று வைத்துக்கொள்ளப்பட்டவர்கள் மூன்றுபேர் அவர்களை மேலே சொல்லுகிறோம், சுத்த மதியாதவன் முதன்மை மைந்தர் - பரிச்சதும் உத்தமத்திலேயும் வைக்கக் கூடாதென்று தள்ளத்தக்க பொல்லாங்கையுடைய பொல்லாத தென்று சொல்லப்பட்டது முன்னே நிறுத்தி வைத்துப்பானுவாரமும் அவன் பிள்ளையாகிய சனிவாரமும் பிறகு மத்தியமென்று முன்னே நிறுத்தி வைத்த, மதியாத பாற்கடலை மான - கடையாத திருப்பாற்கடலைப் போல வெண்மையாயிருக்கப்பட்ட பளிங்கு - சுக்கிரவாரமும், ஆண்டளப்பான் - குருவாரமும், சேய் - அங்காரக வாரமும், பாற்கு - இந்த மூன்று வாரமும் மத்திமமென்று சொல்லப்பட்டபடியான பங்குக்கு, அடலை - பலத்தை, மான் - பெருமையையுண்டாக்கத் தக்கதாய், வைப்பார் - அதிலே உத்தம, மத்திம, அதம மென்று வைத்துக் கொள்ளுவார்கள். பார் - எப்படியென்றால் உத்தம மத்திமமாவது சுக்கிரவாரமும், மத்திம மத்திமமாவது குருவாரமும், அதம மத்திமமாவது அங்காரகவாரமுமாகப் பார்ப்பாயாக.

## நட்சத்திர மறிதல்

*அச்சுவதி கேட்டை யரவுபூ ரட்டாதி*
*யச்சுவதி கேட்டை யழிக்குமே - யச்சுவதி*
*கொக்கரிமான் பண்டி கொடுநுகமோ டந்தாசி*
*கொக்கரிமான் மாத்தியிருக் கும்.* 15

(சொ. பொ.) பண்டிதனானவன் பண்டிதம் பார்க்கவேண்டிய தற்கான நட்சத்திரங்கள் பார்த்துக்கொள்ள வேண்டிய தெப்படியென்றால் முதல் உத்தமமான நட்சத்திரங்களிலே உத்தமமானது அச்சுவதி - அஸ்வனி நட்சத்திரமும், கேட்டை - கேட்டை நட்சத்திரமும், அரவு - ஆயிலிய நட்சத்திரமும், பூரட்டாதி - பூரட்டாதி நட்சத்திரமும் இந்த நான்கு நட்சத்திரங்களும் உத்தம உத்தமம், உத்தமமத்திமம், உத்தம அதமம், உத்தம அதமாதமம் இப்படி பார்த்துக்கொள்ள வேண்டியது; அச்சுவதி - பயங்கரமுண்டாயிருக்கப்பட்ட, கேட்டை - பொல்லாங்கு எல்லாம், அழிக்குமே - கெடுத்துப் போட்டு நன்மையைக் கொடுக்கும், அச்சுவதி - அப்பாலே சொல்லப்பட்ட சுவாதி நட்சத்திரமும், கொக்கு - மூலநட்சத்திரமும், அரி - கார்த்திகை நட்சத்திரமும், மான் - மிருகசீரிட நட்சத்திரமும், பண்டி - ரோகணி நட்சத்திரமும், கொடுநுகம் - மகநட்சத்திரமும், ஓடம் - ரேவதி நட்சத்திரமும், தாசி - பரணி நட்சத்திரமும், கொக்கரிமான் - திருவோண நட்சத்திரமும், இந்த ஒன்பது நட்சத்திரமும் பொல்லாத நட்சத்திரங்களிலேயும் உத்தமப்பொல்லாதது மத்திமப்பொல்லாதது, அதமப் பொல்லாதது இப்படி ஒன்றுக்கு மூன்று மூன்று விதமாகப் பார்த்துக்கொள்ள வேண்டியது. மற்ற பதினாலு நட்சத்திரங்களும் மத்திமம். பொல்லாததிலே கூடினதுமல்ல நன்மையிலே கூடினதுமல்ல ஒரு விதமாகப் பார்த்துக் கொள்ள வேண்டியது. இப்படி இந்த இருபத்தேழு நட்சத்திரங்களையும் பண்டிதன் அனுபோக சித்தியாக வழக்கத்திலேயும் நடத்தையிலேயும் பார்த்துக்கொள்ளக்கடவனாக.

## மாதங்க ளறிதல்

*சித்திரைவை காசிதிறமானி யாடிமத்தி*
*சித்திரைவை காசி சிதைக்குமே - சித்திரைவை*
*யங்கார கன்போ லனுகூல மாகவதி*
*யங்கார கன்மகிமை யை.* 16

(சொ. பொ.) வயித்தியனானவன் வயித்தியம் பார்க்க வேண்டியதற்கான மாதங்கள் பொதுவுஞ் சிறப்புமாகச் சொல்லுகிறார். எப்படியென்றால் :- சித்திரை - சித்திரைமாதமும், வைகாசி - வைகாசி மாதமும், (இந்த இரண்டு மாதங்களும்) திறம் - உறுதியான நன்மையைக் கொடுக்கும், ஆனி - ஆனி மாதமும், ஆடி - ஆடி மாதமும், ( இந்த இரண்டு மாதங்களும்) மத்தி - ஒன்றுமில்லை பிரயோசனப்படாது. (அப்பாலே ஒழிந்த ஆவணி, புரட்டாசி, ஐப்பசி கார்த்திகை, மார்கழி, தை மாசி, பங்குனி, இந்த எட்டு மாதங்களும் பொல்லாததாம்.) சித்து - அஷ்ட அயிசுவரிய பாக்கியயோக்கியங்களும் வைகு - இருக்கப்பட்ட, ஆசி - வரப்பிரசாதத்தை, சிதைக்குமே - கெடுத்து மருந்தைப் பலிக்கவொட்டாமற் கெடுத்துப் போடும். (மிதமில்லாமல் மெய்தானது எப்படியென்றால்), சி - கடலின், திரை - அலையுடனே, வை - பொருந்தியிருக்கப்பட்ட, அங்காரகன் - அக்கினியானதெப்படி, போல - கூட்டி அனுகூலமாகக் கலப்பாகியிருந்துகொண்டுதானே அந்தக்கடலினது நீரைத் தானே எப்படித் தகித்துப் போடுமோ அப்படி, வதி - இந்த மாதமான காலங்களுமிப்படிக்கூடத்தானே ஒப்பாயிருந்துகொண்டு, அங்க - நோயாளியினது தேகத்தில், ஆர் - நிறைந்து, அகன் - பரந்திருக்கப்பட்ட, மகிமையை - நன்மையாகிய பலத்தை யெல்லாம்.

## லக்கினங்க ளறிதல்

*மாடா டரிவை மகரமுங் கோல்வின்மீன்*
*மாடா டரிவையரிமை துனந்தேள் - மாடாடு*
*கும்பங் கடகங் குறிப்பிலிவை மூன்றா*
*கும்பங் கடகமெனக் கொள்.* 17

(சொ. பொ.) பண்டிதனானவன் பண்டிதம் பார்க்கத் தொடங்குவதற்காகப் பார்த்துக்கொள்ளவேண்டிய வோரை லக்கினங்கள் சொல்லுகிறேன். எப்படியென்றால்:- மாடு - ரிஷப லக்கினமும், ஆடு -

மேஷ லக்கினமும், அரிவை - கன்னியா லக்கினமும், மகரமும் - மகர லக்கினமும், கோல் - துலாலக்கினமும், வில் - தனுசு லக்கினமும், மீனம் - மீன லக்கினமும், (இந்த லக்கினங்களேழையும்), மாடாடு - மத்திம மாக நடுவே வைத்துக் கொள்க, அரி - சிங்கலக்கினமும், மைதுனம் - மிதுன லக்கினமும், தேள் - விருச்சிகலக்கினமும், அரிவை - சுத்தமாயிந்த மூன்று லக்கினங்களும் பொல்லாத லக்கினங்களான படியினாலே தள்ளிப்போடுக; கும்பம் - கும்பலக்கினமும், கடகம் - கடக லக்கினமும், வை - இந்த இரண்டு லக்கினங்களும் மெத்த நல்லது (உத்தமமானபடியினாலே எல்லாத்துக்கும் முதன் வைத்துக் கொள்ளென்பதாம்), குறிப்பில் - சாடையாலே பார்த்து, இவை - இந்த, மூன்று - மூன்று பிரிவான உத்தம, மத்திம, அதமமென்கிற, ஆகும் பங்கு - பங்கிடாயிருக்கப்பட்ட, அடு - நெருங்குகின்ற அகமெனக்கொள் - பொல்லாங்கு மத்தி நன்மை யென்றறிந்து கொள்க.

## வயித்தியம் பார்க்கிறதற்குப் பொல்லாத சகுனம்

*பாக்க னிருளி பணிகுறுக்கு முன்னிகலன்*
*பாக்க னிருளி பனவனயில் - பாக்கன்*
*குசவன் கனவட்டன் கொல்லன் கணக்கன்*
*குசவன் கனவட்டன் கொள்.* 18

(சொ. பொ.) பண்டிதனானவன் பண்டிதம் பார்க்கிறதற்காக நோயாளியின் வீட்டுக்குப் போகும்போது சகுனம் பார்க்க வேண்டியதில் பொல்லாத சகுனங்கள் எப்படியென்றால் :- பாக்கன் - பூனையும், இருளி - பன்றியும், பணி - பாம்பும் இந்த மூன்றும், குறுக்கு - குறுக்கு ஓட்டமாய் வரலாகா, முன் - எதிரிலே பார்க்கத்தக்கதாய், இகலன் - நரியும், பாக்கன் - செம்படவனும், இருளி - வேடச்சியும், பனவன் - பார்ப்பானும், அயில்பாக்கன் - போசனம் பண்ண வேண்டிய மனிதனும், குசவன் - குசவனும், கனவட்டன் - குதிரைக்காரனும், கொல்லன் - கருமானும், கணக்கன் - கணக்கப்பிள்ளையும், குசவன் -

வெட்டுக்கத்திக்காரனான விறகுக்காரனும், கனவட்டன் - தோட்டிப்பறையனும், இவர்களெல்லாம் வரலாகாது; கொள் - எதிரே கண்டால் மெத்தப் பொல்லாங்கென்று அறிந்துகொள்க.

## நல்ல சகுனம்

*மந்திரி தந்தன் மகிபாலன் கைக்கோளன்*
*மந்திரி தந்தன் மடையனிறை - மந்திரிநாய்*
*வாரணமான் முன்பால் மயில்காரி நாரைவன்னி*
*வாரணமான் பாறணில்நல் வாய்.* 19

(சொ. பொ.) பரிகாரியானவன் பரிகாரம் பார்க்கப் போகிற போது வழியிலே காணவேண்டிய நல்ல சகுனங்கள் எப்படி யென்றால், எதிரிலே முன்னாக வரவேண்டியது மிகநாடிச் சொல்லுகிறார்:- மந்திரி - கள்விற்கிறவனும், தந்தன் - விக்கினேஸ்வர பூசைக்காரனும், மகிபாலன் - பூமியையுழுது பயிர் செய்கிற வேளாண்மைக்காரனும், கைக்கோளன் - நெய்யக்காரனும், மந்திரி - குதிரைக்காரனும், தந்தன் - சேனாபதியும், மடையன் - சுயம்பாகியான சமையல்பண்ணுகிறவனும், இறை - அரசனும், மந்திரி - ஆலோசனையிலே அரசனுக்கு சமானமான அமைச்சனும், நாய் - நாயும், வாரணம் - யானையும், மான் - மானும் ஆகிய இவைகளெல்லாம், முன் - எதிரிலேயும், பால் - பால்குடமும், மயில் - மயிலும், காரி - காக்கையும், நாரை - நாரையும், வன்னி - கிளிப்பிள்ளையும், வாரணம் - கோழியும், ஆன் - பசுமாடும், பாறு - பருந்தும், அணில் - அணிப்பிள்ளையும், நல்வாய் - கரிக்குரிமான் பட்சியும் ஆகிய இவைகளெல்லாம் இடப்பக்கத்திலிருந்து வலப் பக்கத்திலேயும் வர வேண்டியது. இப்படி வந்தால் நல்ல சகுனம் என்றறிந்து கொண்டு போய் வயித்தியத்தைப் பார்க்கவேண்டியது.

## வயித்தியனை அழைக்கவேண்டிய தன்மை

*வந்தவ னிசத்தன் மகுடன் கிரகத்தன்*
*வந்தவ னிசத்தன் மழன்சேயன் - வந்த*
*உடலன லங்கார னுன்மத்தன் யோகி*
*உடலனலங் காரனவி யோன்.* 20

(சொ. பொ.) வயித்தியம் பார்க்கவேண்டி யிருக்கிற பண்டிதனண்டைக்கு வயித்தியம் பார்த்துக்கொள்ளத் தக்கதாக நோயாளி வரவேண்டிய நல்ல லட்சண மெப்படியென்னில் :- வந்தவன் - வயித்தியனை அழைக்கவந்தவன், நிசத்தன் - சத்திய பத்தியுடைய மெய்யனாகவும், மகுடன் - தலையிலே தலைப்பாகை தரித்துக்கொண்டிருக்கப்பட்டவனாகவும், கிரகத்தன் - விவாகமான பத்தினியுடனே இருக்கப்பட்டவனாகவும், வந்தவனிசத்தன் - பூமியின் கண்ணிலே பெருங்காற்றடிப்பது போலச் சத்தத்தையுடையவனாகவும், மழன் - சிறுபிள்ளை வயசுடையனாகவும், சேயன் - சிவந்த நிறத்தையுடையவனாகவும், வந்தவுடலன் - சீரத்திலே கவசமான சட்டை சொக்காயிட்டுக் கொண்டிருக்கிறவனாகவும், அலங்காரன் - பிரகாசிக்கப்பட்ட முத்துமாலை அணிந்திருக்கப்பட்டவனாகவும், உன்மத்தன் - மதுபானம் முதலான லாகிரிவஸ்துவை உண்டதனாலே வெறியனாகவும், யோகி - தெய்வபூசை செய்யப்பட்ட மகா விரதனாகவும், உடலன் - கோபக்குரோத முடையவனான யுத்த சன்னத்தனாகவும், அலங்காரன் - இயற்கையாய்த்தானே நல்ல சுந்தரத்தையுடையவனாகவும், அளியோன் - தயாபரனாகவும், இப்படிக்கெல்லாம் உள்ளவன் அழைக்க வந்தால் வயித்தியானானவன் அந்த வயித்தியத்தை நம்பிப் பார்க்கவேண்டியது.

## வயித்தியனை அழைக்கவொண்ணாத் தீது

கண்டவரை யத்தர் கரியமுது வர்முண்டர்
கண்டவரை யத்தர் கரிதவர் - கண்டவரை
உள்ளவரா காத்தொனியோர் கதையரீ னர்துனி
யுள்ளவ ராகாத்தீ யோர். 21

(சொ. பொ.) பண்டிதனானவன் தன்னை அழைத்துக்கொண்டு போகத்தக்கதாய் நோயாளியிடத்தே இருந்துவந்த மனிதரைப் பொல்லாதவர்களல்லாமற்படிக்குப் பார்த்துக்கொள்ளவேண்டிய தெப்படியென்றால், கண்டவர் - தம்மை வந்து பார்த்தவர்கள், ஐயத்தர் - அனுமானசிந்தையுடனே கூடினவர்களாகார், கரிய(ர்) - கருத்த நிறமானவர்களாகார், முதுவர் - பெரிய வயதுடைய கிழவர்களாகார், முண்டர் - மொட்டத்தலையாய் இருக்கப்பட்டவர்களாகார், கண்டவர் - நேத்திரமில்லாத குருடராகார், ஐயத்தர் - பிச்சையெடுக்கிற வறுமையுண்டான பேர்களாகார், கரி(யர்) - சாட்சிசொல்லப்பட்ட சாட்சிக்காரராகார், தவர் - துறவிகளான தவசிகளாகார், கண்டவரையுள்ளவர் - மூங்கிலினுடைய வில்லைக் கையிலே பிடிக்க உண்டான பேர்களாகார், ஆகாத் தொனியோர் - பேசுகின்ற பேச்சு மெத்த ஆழமான கிணற்றிலே பேசுகிறாப்போலே ஈனசுரமான பேச்சுப்பேசுகிற பேர்களாகார், கதையர் - கையிலே தடிக்கோலைப்பிடித்துக்கொண்டிருக்கப்பட்ட பேர்களாகார், ஈனர் - சண்டாளராகார் (சாதியிலே கீழான சாதியையுடைய புலையர் முதலான சண்டாளராகார்), துனியுள்ளவர் - மனதிலே மெத்த துக்கத்தினாலே விசார விதனமுண்டான பேர்களாகார், ஆகாத்தீயோர் - இவர்களெல்லாம் அழைக்கவருகிறதற்கு யோக்கியமல்லாதவர்க ளானபடியினாலே அறிந்து வயித்தியனானவன் தப்பித்துக்கொள்ள வேண்டியது.

## இடங்களின் நன்மை தீமை யறிதல்

*காற்படையான் பாலாழிக் கண்படையான் பச்சிமனூர்*
*காற்படையான் கோவெறிபுண் கண்ணயனோர்-காற்படையான்*
*வச்சிரத்தன் வாசநல்வாண் மாதிட மாந்துரு*
*வச்சிரத்தன் வாழ்வருமை வாழ்.* 22

(சொ. பொ.) வாத, பித்த, சேத்துமமான மூன்று வியாதிகளுக்கும் பொருந்திய இடமும் பொருந்தாத இடமும் பிரித்துக் கூறுகின்றாரெப்படியென்றால்:- காற்படையான் - சுப்பிரமணியசுவாமியார், பாலாழிக்கண்படையன் - மகாவிஷ்ணு, பச்சிமன் - வருணராசன், ஊர் - இந்த மூன்றுபேர்களுடைய வாசமான மலையைச் சேர்ந்த நாடென்னும் குறிஞ்சி நிலமும், காட்டைச் சேர்ந்த நாடென்னும் முல்லை நிலமும், கடலைச் சேர்ந்த நாடென்னும் நெய்தல் நிலமும், காற்படையான் - முறையே கிரமப் பிரகாரம் பொல்லாத நமனைப் போலும் குரூரியான படைத்தலைவனான சேத்துமத்திற்கும், வெறி - பித்தத்திற்கும், கோ - ராசனான வாதத்திற்கும் பொருந்திய தானமாகிய இடங்களை இந்த மூன்றிலேயும் இவர்கள் மூன்றுபேருக்குஞ் சொந்தமான தானங்களானபடியினாலே பலப்பட்டிருப்பார்கள், புண்கண் - வியாதியாகிய நலியென்கிற உபத்திரவத்தை, அயன் - பிரமதேவனானவன், ஓர்கால் - ஒரு காலங்களிலேயும், படையான் - உண்டு பண்ணமாட்டான், வச்சிரத்தன்வாசம் - (அது எங்கேயென்றால் தேவேந்திரனுடைய ஆதிக்கியச் சொந்தமான நாட்டைச்சேர்ந்த நாடென்னும் மருத நிலத்தினிடத்திலே மேலே, சொன்ன மூன்றுபேர்களுக்கும் பக்குவப்படாத விடமான படியினாலே நோயாளிக்கு ஒருநோயும் வராதென்பது குறிப்பு, நலிவாண்மாதிடமாம் - நல்லகுணத்தையுடைய வீரமாதாவாகிய துர்க்கியினுடைய இடமான வெப்பத்தைச்சேர்ந்த பாலை நிலத்தினிடத்திலே எந்த வியாதிகளும் அணுகாதபடியினாலே நோயாளியானவன் வாசம் பண்ணுகிறதுக்காம், துருவச்சிரத்தன் - அப்படியந்த நிலத்திலே இருப்பானேயானால் துருவனைப் போல

சிரஞ்சீவியா யென்றைக்கும் அழியாமலிருப்பான், வாழ் வருமை - அந்த நிலத்திலே வாசம்பண்ணுகிறது மெத்தப் பிரயாசமாயிருக்கும், வாழ் - இருந்தால் நல்லது. இருக்கச் சம்மதியாயிருந்தா லிருப்பாய்.

## நல்ல மார்க்கத்துக்குண்டான நன்மை

*வைவச் சுதனை மதியே மினிப்பாரில்*
*வைவச் சுதனைநிகர் வாழ்ந்திருப்போம் - வைவச்சு*
*யாமினிப்பா லோடறன்மூ வென்றூ ழிளவனிதை*
*யாமினிப்பா லோமவறி யேம்.* 23

(சொ. பொ.) நல்ல மார்க்கத்துக்குண்டான நன்மையாவ தெப்படியென்றால், வைவச்சுதனை - எல்லாருயிரையும் வாங்கப்பட்ட எமதர்மராஜனான நமனை, மதியேம் - நாங்கள் அலட்சியமாகப் பார்ப்போமே தவிர இலட்சியமாகப் பார்க்கிறதில்லை, இனி - இனி மேலைக்கு, பாரில் - பூமியினிடத்திலே, வைவு -வாழ்ந்திருப்பது எப்படியென்றால், அச்சுதனை நிகர் - மகாவிஷ்ணுவாகிய நாராயணனைப்போல, வாழ்ந்திருப்போம் - சௌக்கியத்துடனே நிலையாக நெடுநாள் செல்வத்துடனே இருப்போம், வைவச்சு - ஒருவர் திட்டுகிறதற்கு மெத்தப் பயத்தைத்தானே தருவதாகிய, யாமினிப்பால் - ராத்திரிக்காலத்தில் என்றென்றைக்கும் ஒரு கடைப்பிடியான ஒரேவழியாய் நல்ல பசுவின் பாலைப் போசனமாகப் பொசிப்பதும், ஓடறன் - பெரிய நதிப் பிரவாகங்களிலே வெள்ளமாயோடப்பட்ட நல்ல தண்ணீரிலே விடாமற் குளிக்கவும் குடிக்கவுமாக வழக்கப்படுவதும், மூவென்றூழ் - முதுமையான வெய்யிலென்கிற சாயங்காலம் காயும் வெய்யிலும் விருப்பத்துடனே காய்வது, இளவனிதை - தனக்குப் பிந்தின இளையவளான வயதையுடைய சிறு பெண்ணைக் கூடிப்புணர்ச்சி செய்வதும், யாம் - நாங்கள், இனிப்பால் - மகாசந்துஷ்டியுடனே கூடி, ஓமவறியேம் - விசு வாசமாகச் செய்யப்பட்ட எக்கிய ஓமப்புகையை விரும்பிப் படப்பண்ணிக்கொள்வதும், மேலே சொன்னபிரகாரம் செய்யக் கடவேமாகையால் என்றைக்கும் பயமில்லாமல் நிர்ப்பயமாயிருப்போம்.

## பொல்லாத மார்க்கத்துக்குண்டான பொல்லாங்கு

*காலமென்று வைகார்முக் காலரா கித்திரிவார்*
*காலமென்று தின்னார் கயராவார் - காலமென்று*
*மாலையளை யூறா மயானப் புகைமுதிய*
*மாலையளை யுந்தழுவு வார்.* 24

(சொ. பொ.) பொல்லாத மார்க்கத்துக்குண்டான பொல்லாங்குகளெப்படியென்று சொல்லுகிறார்:- காலமென்றுவைகார் - மனிதருக்குண்டான வயது நூறு வருஷ மென்று மப்படிக்கு நூறு வருஷமான பிற்பாடு மரணத்தை யடையவேண்டுமென்று மிருக்கமாட்டார்கள், அகால மரணமா யற்பாயுசாகப் பிரமாணமில்லாமலிறந்து போவார்கள், முக்காலராகித்திரிவார் - நடக்க மாட்டாமலே தடியை யூன்றிக்கொண்டு தள்ளாடித் தள்ளாடிக்கொண்டு நடந்து திரிவார்கள், தங்கள் காலிரண்டும் தடிக்கோலொன்றுமாக மூன்று கால்களுடனே நடக்கிறவர்களைப் போல, காலமென்று தின்னார் - பால வயதுடனேயிருந்த போதுந் தாங்கள் நடக்கிற நடத்தை பொல்லாத தானபடியினாலே நோயினாலே பல்லுகள் அசைவு கொடுத்து விழுந்துபோம், ஆகையால், ஒரு பண்டத்தைத் தின்ன வேண்டுமென்றால் ருசிகரமுண்டாக்கத்தக்கதாய்ப் பல்லாலே மென்று தின்னுகிறதற்கு நிருவாகமில்லாமல் தவிப்பார்கள், கயராவார் - காசரோக மேலிட்டுச் சீரணிக்கத்தக்க பலவீனராகிப் போவார்கள். காலமென்று - இப்படிக்கெல்லாம் போகிற பேர்கள் ஆரென்றால் கூற்றுவனைப் போலே கூற்றுவத்துவம் பண்ணப்பட்ட காலத்தால் காயப்பட்ட குரூரமான இளவெய்யில் சரீரத்திலே படத் தக்கதான பேர்களும், மாலையளை - ராத்திரிகாலத்திலே தயிரைப் பொசிக்கிற பேர்களும், ஊறாம் - சரகிலையூறிக்கொண்டு சொஞ்சமாகிலும் போக்குவரத்தில்லாமலிருக்கிற தண்ணீரைப் புசிக்கப்பட்ட பேர்களும், மயானப்புகை - சுடலையிலே பிரேதம் வேகிற புகையைச் சரீரத்திலே படும்படி செய்கிற பேர்களும், முதியமாலையளையும் தழுவுவார் - வயதிலே தனக்கு மூத்த கிழவிகளான

பெண்களைத் தாமே எப்போதுங் கூடிப் புணர்ச்சி செய்யப்பட்ட துன்மார்க்க நடத்தையுண்டான பேர்கள்.

## வயித்தியம் பார்க்கத் திடமில்லாதவர்

*பயந்தவரை மூத்தவரைப் பாலரைப்பெண் டீரைப்*
*பயந்தவரை மைத்துனரைப் பாறப் - பயந்தவரை*
*நட்டவரை வாகடத்தி னாட்டினா லோட்டில்விதை*
*நட்டவரை நேர்குவர்வீ ணாள்.* 25

(சொ. பொ.) வயித்தியம் பார்க்கத்தக்க திடமில்லாதவர்களிட அப்பிரயோசனத்தைப் பார்க்கக் கூடாதென்பது சொல்லுகிறார் : பயந்தவரை - நோயாளியானவனுடைய தாய் தந்தையான பேர்களையும், மூத்தவரை - தனக்கு மூத்தவர்களான தமையன் தமக்கை முதலான பேர்களையும், பாலரை - தனக்குச் சின்னவர்களான தம்பிமார், தங்கைமார், பேரன்மார், பேத்திமார், பின்னும் சிலர்களையும், பெண்டிரை - தனக்கு மிகவும் பாத்தியப்பட்டவர்களானாலும் சரியே அல்லாத பேர்களான போதைக்கும் பெண்களாகப் பிறந்தவர்களான பேர்களையும், பயந்தவரை - மெத்த மெத்தப் பயங்காளிகளாய் அடிக்கடி பயப்படப்பட்ட பேர்களையும், மைத்துனரை - தனக்கு மிகவும் பாத்தியமான மாமன் பிள்ளை, அத்தைப் பிள்ளை, சகோதரிகள் புருஷர்கள், பாரியையுடனே பிறந்த பேர்கள், இப்படிப்பட்ட பேர்களையும், பாறப்பயந்தவரை - வெகு வேகமாயோடப்பட்டதான ஆற்றுத் தண்ணீர், தடாகத்தண்ணீர், கிணற்றுத் தண்ணீர், இவைகளிலே தவறி விழுந்தந்தத் தண்ணீர் மேலே நனைந்தபோது, தானதை விட்டு வெளியே வந்ததுபோலே வியர்வை வேர்க்கத்தக்கதான பித்த சயித்திய தேகத்தையுடைத்தான பேர்களையும், நட்டவரை - சிநேகிதம் பண்ணவர்களான நண்பரான பேர்களையும், வாகடத்தில் - இப்பேர்ப்பட்ட பேர்களையெல்லாம் வயித்திய சாத்திரத்திலே வயித்தியம் பண்ணச் சொல்லிய பிரமாணந் தப்பாமற்படி செய்யச் சொல்லி, நாட்டினால் - தப்பித்து ஏற்படுத்திப் பார்க்காவிட்டால்,

ஓட்டில் விதை நட்டவரை நேர்குவர் - (பிரயோசனமில்லாமல் வயித்தியம் கெட்டுப்போம்; எப்படியென்றால்) - வரையோட்டிலே நல்ல விதைகளைப் பயிர் செய்யவேண்டிய நிமித்தமாக விதை விதைத்ததுபோல அப்பிரயோசனமாகக் கெட்டுப்போம்; ஏனென்றால், அவர்களுடைய வாஞ்சையினாலேயும் இரக்கத்தினாலேயும் அறியாமையினாலேயும் பயத்தினாலேயும் துணிவுபெற மாட்டாமல் தயங்குவார்களானபடியினாலே, வீணாள் - அதிலேயுழைக்கப்பட்ட காலம் பிரயோசனமில்லாமற்போகும்.

## வயித்தியம் பார்க்கத் திடமுண்டான சாமர்த்தியர்

*தாயத் தவனும் தபதியுமே னாதியுமா*
*தாயத் தவனுந் தறுகணனுந் - தாயத்*
*தவனும் பரிசன னுஞ் சட்டகனுங் கோனுந்*
*தவனும் பரிகாரி தான்.* 26

(சொ. பொ.) வயித்தியம் பார்க்கிற சாமர்த்தியத்திலே திடமுண்டான நல்ல வயித்தியனானவன் இலக்கண மெப்படியென்று சொல்லுகிறார்:- தாயத்தவனும் - கியாதியான பங்காளியாவது அவனுடைய வமிசத்திலே யிருக்கப்பட்ட மித்திரபோத வக்கிரத்துவமான மனிதனாவது இவர்களும், தபதியும் - கம்மாளச்சாதியில் மரவேலைபண்ணப்பட்ட தச்சனும், ஏனாதியும் - வேட்டையாடப்பட்ட வேடச்சாதியான இருளனும், ஆதாயத்தவனும் - வாணிபஞ் செய்வதினாலே பருவமறிந்து இலாபசம்பாத்தியம் பண்ணப்பட்ட செட்டி வர்க்கத்தானும், தறுகணனும் - நல்லதண்டு தளங்களிலே போயநேகஞ் சண்டைகள் பண்ணி அஞ்சாமலிருந்து இரத்தத்திலே பழகித் தாட்சணியமில்லாமல் உயிர்க்காசைப்படாத சுத்தவீரனான சேவகனும், தாயத்தவனும் - சூதையே எந்நாளும் விரும்பி யதிலேதானே சீவனம் பண்ணிக் கொண்டிருக்கப்பட்ட சூதக்காரனான சூதமாடுகிறவனும், பரிசனனும் - வேலைக்காரனாகியு மிக்க நம்பிக்கையுமுடையவனான பரிசாரகனும், சட்டகனும் - ஒரு குடியிலே சம்பந்தம் பண்ண வேண்டியிரண்டு பெண்களிருந்தா லதிலே ஒவ்வொருத்தர் ஒவ்வொரு பெண்ணைக் கலியாணம் பண்ணிக்

கொண்டவர்களான சகலனும், கோனும் - இராசரீகம் பண்ண வல்லவனான அரசனுமாகி அதிகாரம் பெற்றவனும், தவனும் - தவம் பண்ணியதனால் மகிமையுண்டான தெய்வ வரப்பிரசாதம் பெற்றவனும், பரிகாரிதான் - இவர்களெல்லாம் பண்டிதர்களான படியினாலே சத்தியமும், பத்தியும், அன்பும், விசுவாசமும், பாகநிதானமும், விற்பத்தியும், துணிவும், தெளிவும் மிகுந்தவர்களாகி யிருப்பார்களாகையால் இவர்கள் வயித்தியராவார்கள்.

## வயித்தியர் நிசமாக நம்புதல்

*மருத்துவரை நோயினர்தா மாதா பிதாவா*
*மருத்துவரை யென்னவருள் வைக்க - மருத்துவரை*
*கையடையா ளந்தந்தக் காரியத்தி லென்றுநம்பிக்*
*கையடையா ளந்தந்தக் கால்.* 27

(சொ. பொ.) வயித்தியம் பண்ணப்பட்ட பண்டிதரை வினையைப்போக்கிக்கொள்ளப்பட்ட நோயாளிகள் உண்மையாக நிசத்துடனே நம்பவேண்டிய தென்கிற முறைமையைச் சொல்லுகிறாரெப்படி யென்றால்:- மருத்துவரை - வயித்தியம் பார்க்கப்பட்ட பண்டிதரை, நோயினர் - வியாதி கொண்டிருக்கப்பட்ட நோயாளிகள், தம் - தங்களுடைய, மாதா - தாயாரைப் போலவும், பிதா - தகப்பனாரைப்போலவும், ஆம் - அப்படியே மெய்யாய், மருத்துவரை - அமுர்தசஞ்சீவி இருக்கப்பட்ட மகாமேரு பருவதத்தைப் போலவும், என்ன - என்று சொல்லிக்கொள்ளத்தக்கதாக, அருள் - அவர்களிடத்திலே விசுவாசத்தை, வைக்க - நம்பிக்கையெண்ணத்தை நன்றாய் வைக்கவேண்டியது. மருத்துவரை - வாதபித்த சேட்பமென்று சொல்லப்பட்ட மூன்றுவித நாடிகளான அவர்களுடைய எல்லைப்பிரமாண இலட்சணங்களை நன்றாயறிந்து பார்க்கத் தக்கதான, கையடை - அடைக்கலமாகத் தேகத்தை உங்கள் கையிலே ஒப்பித்தோம், ஆள் - நீங்கள் வழக்கமாகப் பாருங்கள், அந்தந்தக் காரியத்தில் என்று

- எப்போது எப்படி எப்படியான கவைகளிலே என்னென்ன விதமாகப் பார்க்க வேணுமோ அப்படிக்கெல்லாம், என்று - இந்த விதமாகச் சொல்லி, நம்பிக்கை - நம்பப்பட்டதாகிய, அடையாளம் - ஒரு பிரமாணிக்கமான சாட்சியை யுறுதியாக, தந்தக்கால் - கொடுப்பார்களே யாமாகில்.

## வயித்தியன் முன்னிலை

*ஈரமதி மித்திரனா ரெல்லைவரு நோயாளி*
*ஈரமதி மித்திரரென் னில்வினை - ஈரமதி*
*பண்டிதரு மைத்தொழினீ பார்நன்மை பண்டிதரும்*
*பண்டிதரு மெச்சுமகி பா.* 28

(சொ. பொ.) வயித்தியம் பார்க்கப்பட்ட வயித்தியனைப் பார்த்து முன்னிலையாகச் சிறிதுபுத்திமதிகள் அவர்களைக்காட்டிலும் பெரியவர்கள் சொல்லுகிறார்கள் எப்படியென்றால் - ஈரமதி - குளிர்ச்சி பொருந்திய சந்திரனும், மித்திரனார் - சூரியபகவானும், எல்லை - அவர்களிருக்கப்பட்ட நாள்வரைக்கும், வரும் - உன்னைத் தேடிக்கொண்டு வரப்பட்ட, நோயாளி - பிணியாளனானவன், ஈர - அன்புடனே கூடின, மதி - புத்தியையுடையவனாகயிருப்பானேயானால், மித்திரன் - பின்னும் நண்பனாகவும், என்னில் - இப்படிக் கெல்லாமிருப்பானேயாமாகில், வினை - அவனுடைய வியாதியை, ஈரமதி - அறுந்துப் போகத் தக்கதாய் நீ கெட்டியாய் நிதானித்துக் கொள்ள வேண்டியது, பண்டு - முன்காலத்திலே, இது - இந்த நடக்கைகளுண்டு; அருமை - இப்போது தற்காலத்துக்கு மெத்த பிரையாசமாயிருக்கும், தொழில் - அப்படியான பிரையாசமான காரியமாயிருக்கும், நீ பார் நன்மை - அப்பா! நன்றாயாராய்ந்து சோதித்து நல்ல குணத்தை விசாரணை பண்ணிப் பார்க்க வேண்டியது, பண்டிதரும் - நல்ல விற்பனரான புலவர்களாலேயும், பண்டிதரும் - நல்ல வைத்தியத்திலே யோக்கியமான பேர்களாலேயும், மெச்சுமகிபா - எண்ணிக்கையான கண்ணியப் பட்டிருக்கப்பட்ட பண்டித சிலாக்கிய மகாராஜனானவனே.

## நோயாளி முன்னிலைப் புத்தி

*பாணித் தலத்தைப் பரிகாரி தீண்டுதற்குப்*
*பாணித் தலத்தைப் பரிகாரித்துப் - பாணி*
*அமுதத்தை யொவ்வியபோ லாதரித்துப் போற்றி*
*அமுதத்தை நேர்வதியை யா.* 29

(சொ. பொ.) வயித்தியனானவன் பிணியாளனைப் பார்த்து முன்னிலையாகச் சில புத்திமதி சொல்லுகிற தெப்படியென்றால்:- பாணித்தலத்தை - அப்பா, பிணியாளனே! உன்னுடைய கையை, பரிகாரி - உனக்கு வயித்தியம் பார்க்கத் தக்கதாய் வந்த வயித்தியனானவன், தீண்டுதற்கு - பிடித்து நாடிநிதானித்துப் பார்க்கவந்த போது, பாணித்தல் - அதற்குத் தாமசம் பண்ணிக்காலத்தை நீடித்தல் பண்ணுதற்குச் சாலம் பண்ணல், அத்தை - அந்த துர்க்குணமான பொல்லாங்கையெல்லாம், பரிகரித்து - பரிகரித்துப் போட்டு, பாணி - (அப்பாலே நீ எப்படி இருக்க வேண்டியதென்றால்) தண்ணீரானது, அமுதத்தை - பாலிலே, ஒவ்வியபோல் - ஏகமாய்க்கலந்து கொண்ட மரியாதையைப்போலவே நீயும் 'க்ஷீரோதக ஞாய' மென்கிறதுபோலே, ஆதரித்து - வயித்தியனுடைய தயவைத்தானே தாயகமாக மெத்த நம்பிக்கொண்டு, போற்றி - அந்த வயித்தியனைச் சகலவிதத்திலேயும் வணக்கமாகப் பூசை மரியாதைகளுபசாரங்கள் செய்து, அமு - அப்பாலே அந்த வயித்தியனுடைய அனுமதி அனுக்கிரக அனுகூலமான அதிகாரம் பெற்று, தத்தைநேர் - கிளிப்பிள்ளையைப்போலே, வதியையா - அடங்கி எவ்வளவு பண்டிதர் சொன்னாரோ அவ்வளவிலேதானே இருந்து விடத்தக்கதான புத்தியுடனே இருந்துவிடுவாயாக.

## பிணியாளனுக்குப் புத்திசொல்லுதல்

*பத்தியத்தை நோயையனு பானத்தை லங்கணத்தைப்*
*பத்தியத்தை முன்மருகன் பண்ணலிற்கொள் - பத்தியத்தை*
*ஏகமா யார்த்தாலு மேறாச் செவிபோலே*
*ஏகமா யார்த்தாலு மெய்.* 30

(சொ. பொ.) வயித்தியனானவன் வயித்தியம் பார்த்துக் கொள்ளப்பட்ட பிணியாளனுக்குப் புத்திமதிகள் பின்னுஞ் சில சொல்லுவா ரெப்படியென்றால், பிணியாளனே! உனக்குறுதியானது சொல்லுகிறேன் கேள்:- பத்தியத்தை - பிணிநீங்குகிற வரைக்கும் பரிகாரி சொன்னபடி நடந்துகொள்ள வேண்டிய பத்தியமும், நோயை - பிணியினுடைய வகையும், அனுபானத்தை - அவிழ்தத்திற்குக் கூடக்கூட்டுறவாக் கூட்டிப்பொசிக்கப்பட்டதும், லங்கணத்தை - நோய் சவுங்கிப்போகத்தக்கதான போசனப் பொசிப்பில்லாமற்படி பட்டினி உபவாசமாக இருப்பதும், பத்தி - உபசார மன்பு, அத்தைமுன் - மாமியார் முன்னே வந்தனத்துடனே மருமகள் செய்கிற விதத்துடனே செய், மருகன் பண்ணலிற்கொள் - மருமகனானவன் செய்கிற மரியாதை உபசாரத்தைப்போல அங்கீகாரம் பண்ணிக்கொள்ளவும், பத்தியத்தை - பலவிதமான மேளவாத்தியச் சத்தத்தை, ஏகமாயார்த்தாலும் - ஒரு முகமாக முழங்குவிக்கிறபோது அந்த முழக்கத்தினாலே யுண்டாகிற சத்தங்கள் வெகுவாக முழங்கினபோதைக்கும், ஏறா - ஏற்றுக்கொள்ளாத, செவிபோல் - காதைப்போலே, வியாதிகளெல்லாம், ஏக - போய் விடத்தக்கதாய், மாய் - அதம் பண்ணிப்போட்டு, ஆர்த்து - ஆரவாரத்தைப் பண்ணிக்கொண்டு, ஆலும் - கூத்தாடும், எய் - ஆனபடியினாலே பட்டினிகளெல்லாம் முள்ளம் பன்றியைப் போல்.

## கற்பங்கள் வரலாறு
## எருக்கு

*கற்பமுறை பெண்போற் கணவனெனும் பண்டிதன்சொல்*
*கற்பமுறை முக்க டுகுணவி - கற்பமுறை*
*மூவருக்கங் கட்டை முதலொடுநென் மாத்திரமன்*
*மூவருக்கங் கட்டையது முன்.* 31

(சொ. பொ.) கற்பங்களினுடைய வரலாற்று விவரம் பொதுவுஞ் சிறப்புமாகச் சொல்லத் தொடங்கினார். அஃதெவ்வாறெனில்:-

கற்பு - பதிவிரதைத் தனத்தை, அம் - அழகிய, உறை - வாசகமாக வைக்கப்பட்ட, பெண்போல் - பத்தினிகளைப்போலச் சமானமாக, கணவனெனும் - புருஷனென்று உவமானஞ்சொல்லப்பட்ட பண்டிதன்.

சொல் - வயித்தியனாலே சொல்லப்படுவதான புத்தியைப் பிணியாளனென்கிற பத்தினி, கற்பமுறை - உண்ணப்பட்ட கற்பங்களினது உண்மையான மார்க்கத்தைப்பார்க்குமிடத்திலே வரலாறாகச் சொல்லப்பட்டது. முக்கடுகு - சுக்கு, திப்பிலி, மிளகு என்று சொல்லப்பட்ட திரிகடுகுகளும், உண் - உணவுகளினது நெருக்கமும், (அ - சாரியை), விகற்பமுறை - வித்தியாசமான சலத்தினது பேதமும், மூவருக்கங்கட்டை முதலொடு - வெகுநாளாகப் பழகியதினாலே முதிர்ச்சியான பழைய எருக்கங்கட்டை முதலொடு - வெகுநாளாகப் பழகியதினாலே முதிர்ச்சியான பழைய எருக்கங்கட்டை வேர் முதலான சமூலமும் வரிசைப்படியே ஒரு மண்டலம் வரைக்கும், நெல் மாத்திரம் - ஒரு நெல்லளவும் பிரமாணத்திற் கிரமாலங்காரமாக, மன் - அவ்வளவு முதல்பட்டையும் அம்மாத்திரஞ் சுக்கும் நல்ல தண்ணீரிற் கற்பமாக உண்டால் வாதப் பிணிப்பறும். அப்படியே திப்பிலியுடன் மேற்படியை உண்டால் பயித்திய மறும், அப்படியே மிளகுடனே யுண்டால் சேட்டமறும், மூவருக்கங்கட்டையது முன் - வாதமுதலான மூன்று பேருக்கு மிருக்கவொட்டாமல் அவ்விடமான தேகத்திலொழிக்கச் செய்வ ததுவே. அந்தக் கற்பமகிமையையன்றி வேறொன்றில்லை.

## அழிஞ்சில் - சீதேவியார் செங்கழுநீர்

*அங்கோல வித்தை யயின்றான்முன் போலவினை*
*அங்கோல வித்தை யடங்குமே - யங்கோல*
*முண்டா மரைவாசி யுற்பலமே லாகியதை*
*உண்டா மரைவாசி யுள்.* 32

(சொ. பொ.) அழிஞ்சில் கற்பமும் சீதேவியார் செங்கழு நீருடைய கற்பமும் பொதுவாகச் சொல்வதிலே முதல் சிறப்பாக முதல் அழிஞ்சில் கற்பம் சொல்லுகிறா ரெப்படியென்றால்:- அங்கோல வித்தை - அழிஞ்சிலினது கொட்டையை, அயின்றால் - முன்போல் மேலே சொல்லியிருக்கப்பட்ட கற்பப் பிரகாரம் மிளகு முதலானவைகளுடனே புசித்தால், வினை - வாத முதலான மூன்று வகைப்பட்ட பிணிகளினாலே வரப்பட்ட உபத்திரவ வேதனைக் கூரலினா லவ்விடத்திலே உண்டாகப்பட்ட மாரீசங்கள் எல்லா மொருக்காலே, அங்கோல வித்தையடங்குமே - மேலு முண்டாக்கப்பட்ட கொட்டாலை யெல்லா மடங்கிப் போய்விடும், அங்கோலம் - அழகிய சிங்கார வேடிக்கையெல்லாம், உண்டாம் - கிடைக்கும், மரைவாசி - மகாலட்சுமியான சீதேவி, உற்பலம் - செங்கழுநீரான செங்கழுநீரை, மேலாகியதை - எல்லாத்திலேயும் மேன்மைப்பட்டிருக்கப்பட்டதானதை, உண்டாமரைவாசியுள் - பாதி மாத்திரம் புசித்து வருகிறதற்கு முன்னேதானே.

## இஞ்சி, தேன், நென்மா, நெய்

*இருந்தே னலங்கார மெய்தயின்று மீறி*
*இருந்தே னலங்கார மெய்தி - இருந்தேனு*
*நீவி ரகசியமா நென்மா வுடன்கலந்து*
*நீவி ரகசியமா நெய்.* 33

(சொ. பொ.) இஞ்சிக்கற்பமு மதற்கினமான தேனும் நெல்லரிசிமாவின் கற்பமு மதற்கினமான பசுவினது நெய்யும் கிரமமாகச் சொல்லுகிறார், எப்படியென்றால் :- இரும் - பெருமை பொருந்திய, தேன் - தேனிலே, அலம் - இஞ்சியை நறுக்கிக் கீற்றுக் கீற்றாகக் கீறிப்போட்டு ஊறவைத்த ஊறின பிற்பாடு, காரம் - நல்லறம் பொருந்தின பின்பு, எய்து - மனம் ஒருமித்தபலத்துடனே அயின்று - அதை யுண்ணவேண்டிய கற்பமுறைப் பிரகாரம் புசித்து, மீறி - அதனாலே சரீரசவுக்கியத்தைப்பெற்று விளங்கி மகத்தான வெற்றித்திற வல்லாண்மையுடனே, இருந்தேன் - நான் வெகுகாலம் திறமான வாழ்வுடனே நரை திரை மூப்பு முதலான துர்க்குணத்தைத் தள்ளி வசித்தேன், அலங்காரமெய்தி - சிங்காரரூப லாவண்ணிய விலாசமெல்லாம் படைத்ததினாலே பிரதிபிம்பத்தைப்போலே விளங்கி, இர - உங்களுடைய ஒருமையல்லாத மாறு பாடான பொல்லாப்பையெல்லாம் பாராட்டப்பட்டதான, உம் - எல்லாக் குற்றங்களுக்குமிடமான தேனு, திருட்டிக்கபடப் பட்டித்தனத்தை, நீவி - தள்ளிப்போட்டப்பாலே, ரகசியமாக - மிகவும் மர்மமாகத்தானே வைத்து வேறே, நென்மாவுடன் கலந்து - நல்ல லட்சணமான நீர் நெல்லினது வெண்மைபொருந்திய அரிசியிடித்தரைத்த மாவைக் கூடத்தானே பிரமாணமாகத்தானே கற்ப முறைமை தப்பாமற்படிக்குப் புசிக்க வேண்டியது, நீவிர் - நீங்களெல்லாரும் வேண்டிய பேர், அகசியம் - எப்படியும் உண்மையாய், ஆ - பசுவினது, நெய் - நெய்யை.

## கீழாநெல்லி, சுரைக்கஞ்சா, கச்சூர்

*ஆமலகை வானா ளசிகமளை யோடுகுறை*
*யாமலகை யுண்ணோ யனலெங்கே - ஆமலகை*
*சாகச் சுரையா தனுவாயு மார்வலிகஞ்*
*சாகச் சுரையானா சம்.* 34

(சொ. பொ.) கீழாநெல்லியினது கற்பமும் சுரையினது கற்பமும் கஞ்சாவினது கற்பமும் கச்சூரான பேரீச்சங்காயினது கற்பமும் முறையாகச் சொல்லுகிறா ரெப்படியென்றால் :- ஆமல - மனிதருக்கிவ்வுலகின் கண்ணிலே வியாதிகளினாலே நொந்து சரீரம் மெத்த மெலிந்து, கை - வெளுக்கத்தக்கதான காலத்திலே, வாணாள் - ஆயுசுநிலைமையான வயது, அதிகம் - நிரம்பப் பூரணாயுசு வளர்ந்து, சிரஞ்சீவியாயிருக்க வேண்டி யிருந்தால், அளையோடு - நல்ல பசுவின் தயிருடனே, குறையாமலகை - கீழாநெல்லிச் சமூலத்தை, உண் - அரைத்துக் குழப்பிக்கலந்து தினமுங் கற்பமுறையுண்டால், நோயனலெங்கே - அப்பாலே மேக வியாதியினாலே வரப்பட்ட, வெட்டை முதலான துர்க்குணப் பிணிகளெல்லா மெவ்விடத்திலே யோடிப் போய்விடுமோ தெரியாது; (வேறே), ஆமலகை - நீரேத்த மென்று சொல்லப்பட்ட பிசாசமானவியாதிகளெல்லாம், சாக - போக்கடிக்கவேண்டியிருந்தால், சுரையா - சுரைக்காயொன்று தவிர மற்றக் கீரையை சமைத்து அதிலுள்ளிப் பூண்டுடனே பொசித்துக் கொண்டொரு மண்டல மாத்திரமிருந்தாலுமல்லது கொடியை மாத்திரம் பிரமாணப்படிக்குக் குடிநீர் போட்டுக் காய்ச்சிக்குடித்தாலும் நல்லதே.

(வேறே) தனுவாயு - தனுர்வாயுவானது வந்திருந்தாலது போகவேணுமென்றால், கஞ்சா - கஞ்சாவினது விதையை மிளகுடனே வரிசைக்கிரமப்படிக்கு நித்தியமும் பெருக்கி ஒன்றுமுதலாகப் பொசித்து ஒரு மண்டலம் பார்க்கவேண்டியது. (வேறே) மார்வலி - மாரிலே நொந்து கடுக்கப்பட்ட அடைப்பு வாயுவானது வந்திருந்தால் அது போகவேணுமென்றால், கச்சுரையால்நாசம் - கச்சுரமென்று சொல்லப்பட்ட பேரீச்சங்காயைப் பருப்பை நீக்கி அதை மாத்திரம் முழுரூபத்துடனே தேனிலூறவிட்டு அதை நித்தியம் கடைப்பிடியாகப் பொசித்துக் கற்பமுறைமையாய் வந்தால் மேலே சொன்ன வியாதிகளெல்லாங் கெட்டுப்போய் விடும்.

## கடுக்காய் - நாணலிவைகளின் கற்பம்

*மாலைக் கடுக்காய் வருணமாத் துடனுண்கா*
*மாலைக் கடுக்காய் மகோதரம்போம் - மாலை*
*அடக்குஞ் சரவணநீ ரால்பித்த மாமெய்*
*அடக்குஞ் சரவணமே யாய்.* 35

(சொ. பொ.) கடுக்காயினது கற்பமும் நாணலாகியதெர்ப்பையினது கற்பமும் வரலாறாகச் சொல்லுகிறார் எப்படியென்றால்:- மாலைக் கடுக்காய் - பொழுது சாய்வதான சயானப்பட்ட சாயங்கால வேளையிலே கடுக்காயை மாத்திரம் தூள்பண்ணுங் கிரமப்பிரகாரம் பண்ணிவைத்துக் கொண்டொரு நிலைக்கடையாய், வருண மாத்துடன் - நல்ல தண்ணீருடனே எப்படிப் புசிக்க வேண்டியதோ அப்படி, உண் - உண்டு வருவையேயாமாகில், காமாலைக்கடுக்காய் - காமாலையென்று சொல்லப்பட்ட பிணியினாலே அகப்பட்டு வருந்திடமாட்டாய், மகோதரம் போம் - பின்னும் மகோதரம் வாராது. வந்திருந்தாலும் அது சுத்தமாய் வாங்கிப் போய்விடும். மாலையடக்கும் - பின்னேயும் அந்தக் கடுக்காய்க் கற்பம் பிரமை முதலிய பயித்திய வியாதியைக் கெடுத்துப்போடும், சரவணநீரார் - நாணலாகிய தெர்ப்பையினதுவேர் மாத்திரங் குடிநீர் காய்ச்சிக் குடித்தால், பித்த மாமெய் - பயித்திய காங்கை முதலான பிணிகளெல்லாந் தேகத்தை விட்டுப்போகத்தக்கதாய், அட - அதம் பண்ணுவதற்கு, குஞ்சரவணமேயாம் - ஆனையைப் போலவே சாமர்த்தியத்தைச் செய்யுமென்று வாகட சாத்திரங்களுரைக்கும்.

## தாரோட்டம், சீரகம்

*தாரோட்ட மப்பாலார் சட்டகத்தே யுட்டணப்போர்*
*தாரோட்ட மப்பாலார் சாட்சிசொல்லத் - தாரோட்டம்*
*வீக்கப் பிணியசன வேதிபுல்ல மெய்க்கதையே*
*வீக்கப் பிணியசன மெய்.* 36

(சொ. பொ.) பச்சை (காய்ச்சாத) பசுவின் பாலாகிய தாரோட்ட கற்பமும் போசன குடோரி என்கிற சீரகக்கற்பமும் சொல்கிறார் எப்படியென்றால்:- தாரோட்டமப்பாலார் - தாரோட்டமென்றெடுத்துச் சொல்லாநின்ற பசுவினது பச்சைப்பாலை மாத்திரம் ஒரு பிரமாணமாகக் காலமே பானம்பண்ண வேண்டியது; அப்படி யாதாமொருவர் பண்ணுகிறார்களோ அவர்களுடைய தேகத்திலிருக்கப்பட்ட பிணிகளெல்லாம் பக்குவப்படும், சட்டகத்தே யுட்டணப்போர் - அவர்கள் சரீரத்தின்கண்ணிலே முன்னமே பழக்கப்பட்டிருக்கப்பட்ட காங்கைப்பிணியென்று சொல்லப்பட்ட நோய்ப்பிணிகள் செய்யாநின்ற சண்டைப்போருக் குடைந்து முன்சொன்ன பலவகைப்பட்ட நோய்க்கூட்டத்தினது தூசிப்படையென்னும், தாரோட்டம் - அப்பேர்ப்பட்டநோயின் முதற்படைமுறிந்து ஓடிப்போவது மெய்யாம், அப்பாலார்சாட்சி சொல்ல - அதைப்பார்த்து நிசத்தைச் சொல்லுவதற் கெவர்களுங்கிடையாது (வேறு) தாரோட்டம் - இரண்டு சோடான மேலுதடுங் கீழுதடுமான இரண்டுதடுகளும், வீக்கப்பிணி - வீங்கிப்போய் அதனாலே அதிகமான நோயுமுவத்திரவமும் அதிகமாயெப்போதும் வாதிக்கும்.

இப்பேர்ப்பட்டது நீங்கத்தக்கதாய், அசனவேதி - போசனகுடோரியென்று பேர் பெற்ற சொல்லுக்குப் பிரீதியாய் அசனவேதியென்பதனான சீரகத்தை, புல்லம் - நாட்டுச்சர்க்கரையுடனே யொத்த பிரமாணப்படிக்கு நித்தியமும் விடாத கடைப்பிடியாகப் புசித்துக்கொண்டு வரவேண்டியது. மெய்க்கு - உன்னுடைய சரீரத்துக்கு, அதையே - அந்தச் சீரகமும், நாட்டுச்சர்க்கரையுங் கூட்டிக் கற்பமான மருந்தைத்தானே, வீக்கப்பிணி - சீரத்தைப்பந்தமாகக் கட்டப் படுவதான பெரிதான கட்டை கட்டத்தகுமாம், அசனமெய் - நிர்வாகமில்லாத அசேதனமாகப் போகப்பட்ட தேகமும் பலப்படுவது நிசமாம்.

## ஆலம்பால் புளியாரை

*பூதச் சுதைபோற் பொருபாண்டு வைக்கறுகு*
*பூதச் சுதையுண் புளியாரை - பூத*
*விரைவாத மேகமற வெட்டுமுகின் மேலே*
*விரைவாத மென்றவதின் மேல்.* 37

(சொ. பொ.) ஆலம்பாலினது கற்பமும் புளியாரையினது கற்பமும் சொல்லிக்கொண்டு வருகிறார் எப்படியென்றால்:- பூதச்சுதை போல் - சுண்ணாம்பினாலே பண்ணினதொரு பிரமராட்சதையைப் போலே, பொரு-மெத்த உபத்திரவத்தை வாங்காமல் செய்யப்பட்ட பொல்லாத, பாண்டுவைக்கு - வெண்குட்டமான நிறம் வெள்ளையான அங்க ஈனமான சோகத்திற் பெரிதான அந்தப்பிணிக்கு எப்படியென்றால், அறுகு - அறுகங்கட்டைச் சமூலமும் பொடித்துச்சூரணம் பண்ணி வஸ்திரகாயமாக வைத்துக்கொண்டு அதற்குப் பிரமாணமான அளவுப் படிக்கு, பூதச்சுதை - ஆலம் பாலைக்கறந்து சுருக்கிலேதானே ஆறிப்போகாமற்படிக்கு முன் சொன்னதூளுக்குச் சரியாய்க் கற்ப முறைபடிக்குப் பிறழாமற்படியே நித்தியப்படி ஒரு மண்டலம் (நாற்பத்தெட்டு நாளைக்கு) இடைவிடாமற்படிக்கு, உண் - புசித்துக்கொண்டு பத்தியப்படியே தவறாமல் வரவேண்டியது. அப்படிவந்தால் முன்னே சொன்ன வியாதியெல்லாம் ஓடிப்போய் விடும், புளியாரை - புளியாரையென்று சொல்லப்பட்ட வஸ்துவின் சமூலத்தையும் மேலே சொல்லிய அருமையான கற்பப்படியே துவையலான முதலிய கறிப்படியே மிளகு, சீரகம், இலவணம் இவைகளொரு பிரமாணமாகப்போட்டதை மத்தித்துப் போசனத்துடனேயாவது வேறேயாவது புசிக்க வேண்டியது, பூத - முன்னிறந்த காலத்திலே அதிகமான கிரீடைவெப்பத்தினாலேயாவது மேலூழினாலாவது வந்து நிகழ்ச்சியான இக்காலத்தில் வருத்தப்பட்டதான பிணியென்கிற, விரைவாதம் - அண்டங்கள் ஒருக்காலே பருத்ததினால் உபத்திரவப் படுத்துவதான அண்டவாதப் பிணியையும், மேகம் - மேகவெட்டையினால் வரப்பட்ட பிணியையும், அற - ஒழிந்துபோய் விடத்தக்கதாக, வெட்டும் - அடித்துச்சேதனப்படுத்தும்,

(எப்படியென்றாலுவமானம்) முகின்மேலே விரைவாதமென்ன - மழை காலத்திலே யொருக்காலே வருஷிக்கத்தக்க வேகமாய் நீருண்டெழுந்த காளமேகத்தினது கும்பலின் மேலே அதிகவேகமாக வராநின்ற பிரசண்ட மாருதமாகிய பெருங்காற்றானது பாய்ந்தடித்துப் பரந்த மேகத்தையெல்லாம் கெடுத்துப் போட்டாலெப்படியோ அப்படித்தானே, அதில் மேல் - அந்த அண்டவாதமென்கிற மேகக்கூட்டத்தின் மேலே இந்தக் கற்பமென்கிற பெருங்காற்று மோதியடிக்கவே அடிப்பட்டுப் பறந்துபோய் விடுமாதலானட்டி பண்ணாமலிதைக் கடைப்பிடியாய்ப் புசிக்க வேண்டியது.

## நொச்சில் - வள்ளைக்கொடி

*சிந்தார்த் துணருமிச் சீதக் கழிச்சலறச்*
*சிந்தார்த் துணருமின் சீனிநெய்யுண் - சிந்தார்வார்*
*மாமுத் திரந்தொடு வாய்ப்பிலையட் டுண்டக்கால்*
*மாமுத் திரந்தோடு வார்.* 38

(சொ. பொ.) நொச்சிலினது கற்பமும் வள்ளைக்கொடியினது கற்பமும் வரிசைக் கிரமமாகச் சொல்லிக்கொண்டு வருகிறார், எப்படியென்றால் :- சிந்து ஆர்த்துணரும் - பெரிய கடலினது நீரெப்படி ஆர்ப்பரித்து அதிகக் குளிர்ச்சியைக் கொடுக்குமோ அப்படியாகப் பார்த்து நியமிக்கத்தக்கதான வயித்திய சாத்திரத்திற் சொல்லா நின்ற, சீதக் கழிச்சலற - சயித்திய உட்டிணசந்தியால் வருகின்ற பேதியானது கடுப்பில்லாமலாகிப் பக்குவப் படவேணுமென்றால், சிந்தார்த்துணரும் - நொச்சியினது கொழுந்து பறித்துக்கொண்டு வந்து அந்தப்படி சுக்குப்பொடி சேர்த்துக்கொண்டு இரண்டுஞ்சமமாக அடிபற்றாமல் மத்தித்து, சீனி - சர்க்கரையுடனே பக்குவமாகப்போட்டு, நெய் - பசுவினது நெய்யிலே கிளறி ஒரு மண்டலம் வெகுநிலமையாய், உண் - புசித்துக்கொண்டு வந்தால், சிந்தார்வார் - எப்படியும் அப்பேர்ப்பட்ட பிணி எக்காலமும் வராமற் படிக்குச் சரீரம் மெழுகு மலையைப் போலே இருக்கத்தக்கதாய் வந்த வினையெல்லாம் ஓடிப்போகப் பலம் பெறுவார்கள்.

மாமூத்திரம் - வெகுமூத்திரமென்று சொல்லப்பட்ட அதிகமான நீரிழிவு பொல்லாமையைச் செய்வதொழிய வேணுமென்றால் வரிசையாய்ச் சொல்லுகிறார், தொடுவாய்ப்பிலையட்டுண்டக்கால் - வள்ளைக் கொடியிலைச் சமூலத்தையுங் கீரை சமைக்கிற வரிசைப் படியே பக்குவமாகச் சமைத்ததைப் போசனத்துடனேயாவது தனியேயாவது புசித்துக்கொண்டு ஒரு மண்டலம் வரைக்குங் கடைப்பிடியாய் நற்பத்தியநெறியாய் வந்தால், மா - குதிரையைப் போலே அதிகவேகமாய் வந்த வியாதியானது, மூத்திரந்து - விருத்தாப்பியமான கிழவனைப் போலே மெலிந்து பலமுங்குறைந்து, ஓடுவார் - ஓடிப்போய் விடுமாகலானப்படியே அதைப் புசிக்க வேண்டியது.

## மூக்கிரட்டை - குப்பைமேனி

*கோணத் தடைவாதக் கொட்டாலை மாறவிணைக்*
*கோணத் தடைமுழுதுங் கொள்ளட்டுக் - கோணத்தை*
*அட்டியிலை மேனி யயிறிவிளக் கெண்ணெயின்மெய்*
*அட்டியிலை மேனியை யா.* 39

(சொ. பொ.) மூக்கிரட்டையினது கற்பமும், குப்பைமேனியினது கற்பமும் வரிசையாகச்சொல்லுகிறார் எப்படி யென்றால் :- கோணத்தடைவாதக்கொட்டாலைமாற - மனிதற்கிரண்டு நாசித்துவாரத்திலும் சுவாசத்தைப் பந்தித்துக்கொண்டு எப்போதுந் துன்பப்படுத்துவதான வாதப்பிரஷ்ட வியாதியினது பொல்லாங்குகள் எல்லாம் கெட்டுப்போகத் தூரத்தவேணுமென்றால், இணைக்கோணத்தடை - மூக்கிரட்டைக்கீரையைச் சமமானதாய்க்கொண்டு வந்து அதைத்தான், முழுதுங் - சமூலமும் விட்டுவிடாமல், கொள்ளட்டு - பாகம் பண்ணிக் கீரையாகத்தான் அல்லவென்று ஆணமாகத்தான் கடைப்பிடியாயொரு மண்டலம் புசிப்பாயாக. அப்படிக்குப் புசித்தால் பிணி எல்லாம் ஓடிப்போகும்.

கோணத்தை - மாறுபாடான வாள்போலே உபத்திரவம் பண்ணப்பட்ட வாயுவுடனே சேர்ந்த பொல்லாத சேட்பப்பிணியெல்லாம் போக்கடிக்க வேண்டியதானால், அட்டி - நன்றாய் வேகவைத்துப் பாகம் பண்ணிகொள்ளு, இலைமேனி - என்னத்தையென்றால் குப்பை மேனிக்கீரையை, அயிறி விளக்கெண்ணெயில் - ஆமணக்கு முத்தினது எண்ணெய்த் தாளிதம் பண்ணியதை நீ புசிப்பாயாக. ஒரு மண்டலங் கற்பமுறையாய் அப்படிப் புசிப்பாயானால், மெய் - சத்தியமாகச் சொல்லுகிறேன், அட்டியிலை - தடையில்லாமற்படிக்கு, மேனியையா - உன் சரீரமெல்லாம் பொல்லாப்பு நீங்கி நன்மையடையும்.

## தூதுவளைக் கற்பம்

*திருக்குளத்தை நன்றாக்கித் தின்னுவையே னல்ல*
*திருக்குளத்தைப் போலே திருந்துந் - திருக்குளத்தை*
*எல்லா மிரவுவினை யென்னவருந் தூதுவளை*
*எல்லா மிரவுமினி யென்.* 40

(சொ. பொ.) தூதுவளைக்கற்பத்தினது மகிமையைச் சொல்லுகிறார் எப்படியென்றால்:- திருக்குளத்தை - மாறுபாடான நெஞ்சினது குற்றத்தைப் போகச்செய்து, நன்றாக்கி - நன்மைப்படுத்திக்கொண்டு, மேலே தின்னுவையேல் - கற்பத்தினது முறைமையைத் தப்பாமற்படிக்குப் புசிப்பையே யாமாகில் (என்னத்தையென்றால்மேலே சொல்லப்படும்), நல்ல - நன்மைபொருந்திய, திருக்குளத்தைப்போலே - பெரிய தடாகமான இலட்சணம் பொருந்திய ஏரிக்குளத்தை நேராகத் துல்லியமான களங்க மில்லாமல், திருந்தும் - விளங்கிப் பிரகாசமாயிருக்கும், திருக்குளத்தை - கண்ணுக்குளத்தையான நேத்திரத்திலே இருக்கப்பட்ட பித்த நீர் முதலான மலினங்களை யெல்லாம் ஒருக்காலே போக்கடிக்க, எல்லாம் - சகலமான கண்ணிலே இருக்கப்பட்ட பங்கத்தை எல்லாம் ஒருக்காலே, இரவு வினையென்னவரும் - பிணிகளுள்ளதெல்லாம் பிச்சைக்காரருடைய வேலையான

பிச்சைத்தொழிலைப் போலே இரந்து பயந்தோடிப் போகத்தக்க தானத்தைச் செய்து கண்டிக்கும், தூதுவளை - அதுவென்னவென்றால் தூதுவளையென்று சொல்லப்பட்ட நன்மையான மூலிகையினது சமூலமும், பின்னும் பன்னிப்பன்னிச் சொல்ல வேண்டியது என்ன அந்த தூதுவளைக்காயைக் கறி, வற்றல், ஊறுகாய், கீரை இப்படிப் புசித்துக் கொண்டு நெய் அனுகரணமாகக் கூட்டிக்கொண்டு கிரமமாக ஒரு மண்டலம் மட்டுக்கும் வந்தால், எல்லாம் - பகல்காலத்தைப்போல விளங்கிக் காணப்படும், இரவும் - இராத்திரிகாலமும், இனியென் - இனிமேல் தாமசம் பார்க்கவேண்டியதென்ன.

## பொன்னாங்காணிக் கற்பம்

*பொன்னாங்கா ணிக்கீரை போற்றியுண் கற்பமுறை*
*பொன்னாங்கா ணிக்கீரை போதுமோ - பொன்னா*
*யிருப திலக்கமதி யேற்பத் தியத்தை*
*யிருப திலக்கமதி யே.* 41

(சொ. பொ.) பொன்னாங்காணிக்கற்பத்தினது பெருமையைத் தானே வர்ணமுறைக் கிரமமாகச் சொல்லிக்கொண்டு வருகிறார் எப்படியென்றால்:- பொன்னாங்காணிக்கீரை - நல்ல வயலிலே செழிப்பாக வளர்ந்த பொன்னாங்காணியினது இலைக்கறியைச் செம்மையாகப் பறித்து வந்து செம்மையாக நெய்யிலே வதக்கிப் பாகமாக மிளகு, உப்பு மூலமான சம்பாரமிட்டுப் புளியை நீக்கிப்போசன முதலிய உணவாக, போற்றியுண்கற்பமுறை - கற்பங்கொள்ளுகிற கிரமப்பிரகாரம் மண்டலம் அரை மண்டலம் எவ்வளவு வேண்டியதோ அவ்வளவும் பக்குவமாக மகாபத்தியத்துடன் போசனத்துடனே புசித்துக்கொண்டு வரவேண்டியது, பொன்னாங் காணிக்கு - சொர்க்காதி போக பாக்கியங்களை அனுபவிக்கிற சுகத்தினது நன்மைக் காணியாட்சியினது பங்கு பத்து மடங்கதிக மென்றாலுமது, ஈரைபோதுமோ - அதுவும் நிரம்பாதாகையால் அஃதிடமாமதனை விட்டுவிடாமற் பண்ண வேண்டியது. பொன்னாய் -

அழகுடனே கூடிக் கொண்ட மணியைப் போலே, இரு - நீ திறமாக என்றைக்கும் நிலையாயிருப்பாய், பதில் - பிரதியுவமானத்துடனே, அக்கம் - கண்களிருக்கத்தக்கதாய், மதி - நினைத்துப்பார். ஏற்பத்தியத்தை - இசைவான பத்தியத்தை நித்தியமாய், இருபது - இருபதென்று சொல்லப்பட்ட, இலக்க - தொகையுடன் சேர்ந்த, மதியே - மாசபலத்தைக் கொடுக்குமாதலால் என்றைக்கும் உண்மையான புத்தியுடனே செய்தால் அப்படியேயிருக்கும்.

## சேராங்கொட்டைக் கற்பம்

*காற்பாச மாகக் கடுகடுப்புக் கால்முன்னே*
*காற்பாச மாகக் கதலுமே - காற்பாசஞ்*
*சேரா விரைக்கற்பஞ் சீராவா மெய்க்கதனாற்*
*சேரா விரைக்கற்பந் தின்.* 42

(சொ. பொ.) சேராங்கொட்டையின் கற்பத்தைக் கிரமமாகச் சொல்லுகிறார்:- காற்பாசம் - வாதமுங்கபமுந் தொந்தித்துக் கொண்டு மேலிட்டபடியினாலிரண்டு காலிலேயும் விலங்கிட்டாப்போலே பந்தப்பட்டு மிகவுங் கடினமாய், ஆகக்கடுகடுப்பு - மாரிலே வாங்காமல் கடுக்கிற நோயுமிகுந்திருக்கத்தக்கதாயுடைய வியாதியானது, கால் முன்னே - பெருங்காற்றென்கிற பிரசண்டமாருதத்தின் முன்னேயகப்பட்டதனாற் பறக்கப்பட்ட, காற்பாசமாக - பருத்திப் பஞ்சினது கூட்டத்தைப்போல, கதலுமே - பறந்தோடிப் போய்விடுமே, கால் - உண்டாக்கப்பட்டதான, பாசம் - அன்பானது, சேரா - அண்டாமற்கொடுரந்தானே சேர்ந்திருக்கத்தக்கதாய் வன்கண்மையுண்டான, விரை - சுருக்கிலே தீவிரமாய் வரப்பட்ட, கற்பம் - முடிவான மரணத்துயரமாகிய விதனம் வராமற்படிக்கு காயசித்தியுண்டாய் அதனால் திட காத்திரம் பெற்றுறுதியாய், சீராவாம் - உல்லாசமான சரீரத்துக்கொரு வச்சிரகவசம் போட்டுக் கொண்டிருக்கிறாப்போல வெகு திட்டமாயிருக்கப் பண்ணும், மெய்க்கு - கொண்டவனுடைய தேகத்திற்கு, அதனால் -

ஆனபடியினாலே, சேராவிரை - சேராங்கொட்டையினது. கற்பம் - கற்பத்தை, தின் - உண்ண வேண்டிய முறைமைப்படிக்கு அதை இலேகியமாகிலும் கிருதமாகிலுஞ் சூரணமாகிலும் பண்ணிவைத்துக் கொண்டு ஒரு மண்டலம் மாத்திரம் பக்குவமாய் ஒரு பிரமாணத்துடனே கடைப்பிடியாய்ப் புசிக்க வேண்டியது. அப்படி உண்பையேயாமாகின் மிகவும் நன்மையை அடைகுவை; அதனால் இந்தச் சேராங்கொட்டைக் கற்பத்தை மிகவும் நம்பு.

## வேம்பு பனைஇவைகளின் கற்பம்

*பாண்டியன்றா ரோமமுவர் பண்ணியமா கத்தொடங்கிப்*
*பாண்டியன்றா ரோமமுவர் பண்ணியதாம் - பாண்டியன்றார்*
*நேத்திரத்தான் மாலையற நீர்குடியட் டானகரு*
*நேத்திரத்தான் மாலையற நீ.* 43

(சொ. பொ.) வேம்பினது கற்பத்தையும் பனையினது கற்பத்தையும் முறைப்படி சொல்லலுற்றா ரஃதெவ்வாறெனில்:- பாண்டியன்றார் - வேப்பமரத்தினது துளிரையும் முதிர்ச்சியான இலையையுங் கொண்டுவந்து அதை இடித்துக்கொண்டபடி இடிக்கப்பட்ட பொடி அரைவாசி, ஓமம் - ஓமமும், உவர் - உப்பும் போட்டிடித்ததை, பண்ணியமாக - பட்சணத்துக்கேதுவான அதிரசப் பொடிபோலே பக்குவப்படுத்தி வைத்துக்கொண்டு, தொடங்கி - ஒருகடைப்பிடி நிர்ணயமாக ஒரு நல்ல நாள் பார்த்து ஆரம்பம் பண்ணிக்கொண்டு, பாண்டி - வயிறு நிரம்பவும், அன்றார் - அதற்கு மேலாகத்தானே நிரம்பவும், ஓமம் - எக்கியாதி மகா யாகங்கள், மூவர் - திரிமூர்த்திகளுக்குங் குறித்து மெத்தத்தானே, பண்ணியதாம் - செய்தாலதனாலே என்ன பலனுண்டாகுமோ அந்தப்பலன் வந்து சேருமாதலான், பாண்டியன்று - ரோகிணி - நட்சத்திரத்திலே நாள் கொண்டு நல்ல நாளாக ஆரம்பித்துக் கொண்டு அன்றைய தினத்திலே, ஆர் - புசிக்க வேண்டியதாகையால் அப்படித்தானே செய்யக்கடவை

(மேலேவேறு ஒரு விதஞ்சொல்லுகிறோம்) நேத்திரத்தான் மாலையற - கண்ணிலே இருக்கப்பட்ட பயித்திய வெட்டையினது கொட்டாலையினால் வரப்பட்ட பீடானநோவான பித்தசல மந்திப்பான படல மறைப்பு முதலான துர்ப்பிணிக்காமாலை, மாலைக்கண், புழுவெட்டருகல் இவைகளெல்லாம் கெட்டுப்போகத் தக்கதாய், நீர் - தண்ணீரை, குடி - பானம் பண்ண வேண்டிய தப்படி நீ குடிப்பாயானால், அட்டான - காய்ச்சியாகிய குடிநீரான கஷாயத்தை (அது யாதென்று சொல்லுகிறார்) கருநேத்திரத்தான் மாலை - பலபத்திர ராமருடைய மாலையாகிய பனைமரத்தினது வேரை கஷாயத்திட்டமாகப் புதுப்பாண்டத்திலே வேரை நறுக்கிப் போட்டு அதற்கிரட்டி நல்ல தண்ணீரை வார்த்து, அதைச் சூரிய புடமாக முன்னே வைத்ததன் பிறகு அதையெடுத்து அடுப்பிலே வைத்து லகுவாய் விளக்குப் போலே தீபாக்கினியாகக் காய்ச்சியதை இறக்கிக் கொண்டந்த நீரை, அற - வயித்தியசாத்திரக் கிரமப்படிக்கு உண்மையாகத்தானே நெத்திமுச்சட்டைப்பிரகாரங் காலை, மாலை, உச்சியென்று சொல்லப்பட்ட முப்பொழுதும், நீ - பிணியாளனென்று சொல்லப்பட்ட மாணாக்கர் இனத்தனான மைந்தனே.

## தேத்தான் - நெல்லி - கற்றாழை

*இல்லா மலக மிரண்டு மயின்றானோ*
*யில்லா மலக மிருக்குமே - இல்லாமல்*
*வாழைக் கனியும் வடையு மிழுதுமுண்பான்*
*வாழைக் கனியுள்வைத்த வன்.* 44

(சொ. பொ.) தேத்தான்கற்பமும், நெல்லிக்கற்பமும், கற்றாழைக்கற்பமும் கிரமமாகச் சொல்லிக்கொண்டுவருகிறார்:- இல் - தேத்தான் மரத்தினது வேர், விரை, பட்டை, இலை, கனி, காயென்று சொல்லாநின்ற இவைகளையெல்லாம் வேறுவேறு பக்குவமாகவும், ஆமலகம் - நெல்லிமரத்தினது வேர், விரை, பட்டை, ஈர்க்கு, காய், கனி, வற்றல் இவைகளெல்லாம் வேறுவேறு பக்குவமாகவும், இரண்டும் -

இந்த இரண்டு வகையானவைகளை, ஊறுகாய், துவையல் முதலாகவும் பானகமான குடிநீர் கஷாய முதலாகவும் எப்படி நேராகத் தகுமானதாய் வாய்க்குமோ அப்படிக்கெல்லாம், அயின்றால் - ஒருவன் கற்பமுறைப் பிரமாணந் தப்பாமற்படிக்குக் கடைப்பிடியாய்ப் புசித்துக்கொண்டு கண்டிதமாய்ப் பத்தியபங்கம் வாராமற்படி சாதிப்பானேயாமாகில், நோயில்லாமல் - பல்லை (வல்லை), மாமகோதரம், சூலை, வலி, மேகஉட்டிணம், பாண்டு, சோபை, பெருவயிறு, மூலம், பெரும்பாடு, சோகை, மூர்ச்சை, வாயு, தனுர்வாயு முதலான துர்ப்பிணிகளொன்றுமிராமலும், இனி மேலே எதிர்காலத்தில் வாராமலிருக்கவும் பருபக்குவங்கள் மென்மேலுமுண்டான வன்மைப்படியே, அகம் - உள்ளமான தேகங்களங்கரகிதமாய் மாசில்லாச்சந்திரனைப்போலே பிம்பஞ் சொலிக்கத்தக்க மாட்சிமையுடனே, இருக்குமே - இருக்கத்தக்க திடகாத்திர சம்பத்து வருமெப்படியு மதனுக்கட்டியில்லை.

வேறே யோசனை பண்ண வேண்டியதில்லை, இல்லாமல் - பலமானது வாசமாயிருக்கிறதற்கு ஒரு மனைவாழ்க்கை வீட்டைப்போலே நன்மையுண்டாயிருக்கச்செய்யும் வேறே எப்படியென்றால் பின்னொருவிதமாய், வாழைக்கனியும் - வாழைக்கனி, பலாக்கனி, மாங்கனி முதலான கனிவர்க்கங்களும் மிகுதியான, வடையும் - அப்பம், மோதகம், இலட்டு கம்பூப முதலிய பலகாரமும், இழுதும் - நெய்யும், உண்டான் - இவைமுதலான சிற்றுண்டி பல பண்ட, இரச வர்க்கங்களும் புசிக்கிறவல்லமையுடைய சாமர்த்தியபரனாக வாழ்பவனாவான் அவனாரெனில், வாழை - தன்னுடைய தேகத்துடனேயுயிர் கூடியிருக்கத்தக்க வயசை, கனியுள்வைத்தவன் - கனியென்கிற குமரியாகிய கற்றாழைமடலினிடத்திலே ஆசை வைத்து உறுதியாகப் புசிக்க வேண்டிய கற்பமுறைப் படிக்குத் தானாகிலுமின்றி ஊறுகாய், வற்றல் முதலிய உணவு விதமாகிலும் புசிக்க வல்லவனெவனோ அவன்.

## ஓரிதழ்த் தாமரை - ஏலம் இவைகளின் நன்மை

*புண்டரிக நன்மை பொருந்தவென்றா லேடேகப்*
*புண்டரிக நன்மை புனைதிநீ - புண்டரிக*
*நாலுதிர மூக்கு நலிக்கேல நாவியோடு*
*நாலுதிர மூக்குபத்து நாள்.* 45

(சொ. பொ.) ஓரிதழ்த் தாமரையின் கற்பமும், ஏலத்தினது கற்பமும் விவரமாகச் சொல்லிக்கொண்டுவருகிறார் எப்படியென்றால், புண் - மேக வெட்டைப் புழுக்கவேகத்திலே ஊர்த்த முகமாக மேலிட்டுக் காங்கை பொங்கியதனாலே புண்ணிரணமாய்த்தலைமுகங் கண்டமுரமுதலிய தானங்களிலளிந்து பச்சைப் பிசினிபோலே எங்குங் குதறித் துர்க்கந்த மதிகப்பட்டதை, தரி - சேர்த்துக்கொண்டிருக்கப்பட்ட, கம் - கபால மண்டை உபத்திரவ வியாதிகளையெல்லாஞ் சுத்தப்படுத்திப் போக்கடித்து, நன்மை - நல்ல சவுக்கியத்தை நிலைமையாய்த்தானே, பொருந்தவென்றால் - கூடிக்கலந்து வாழ வேணுமென்கிற எண்ண மிகவு மிருக்குமேயானால், ஏடகப்புண்டரிக நன்மை - ஓரிதழ்த்தாமரையினது சமூல சர்வாங்கத்தினாலே பச்சைக் கர்ப்பூரங் கோரோசனையுடனே பசுவினது நெய்யிலே பண்ணப்பட்ட கறுத்த மையாகிய மருந்தை, புனைதி - உத்தமாங்க முதலாக முன்னே சொன்ன தானங்களிலே இதமாகத்தடவித் திமிர்ந்திட வேண்டியதைச் செய்துக்கொள்ளக் கடவாயாகவும், நீ - முன்னிலையான நோயாளியாகிய மாணாக்கனே, புண்டரிகம் - புலியைப்போல மீறிக்குரூரத்தைச் செய்யப்பட்டதான தலைப்பிணி யறுத்திட அதனால், நாலுதிரம் - வழிந்து ஒழுகப்பட்ட இரத்தமானது தொங்கப்பட்டதான, மூக்கு - நாசியில் வேதனைபண்ணுவதான பீனிசம் என்கிற பொல்லாத வியாதியினாலே வருகிற, நலி - பிணிகளெல்லாமொரு மிக்கவே ஒழிந்து போகத்தக்க தண்டஞ்செய்ய வேணுமென்றால், ஏலம் - ஏலமும் மிளகுஞ்சீரகமும் படிப்படியாகத்தான் குறையும் படி கூட்டி ஒன்று முக்கால் அரை என்கிற விகிதப்படிக்குச் சேகரித்துக்கொண்டதற்கு முத்திப்புப்பாகம் பங்கீடாக,

நாவி - பச்சைப் புனுகு கூட்டி இப்படிக் கூட்டினத்திற்கிரட்டி பசுவினது நெய்யுங்கலந்து அதைப் பஞ்சில்தோய்த்துக்கொண்டு, ஓடு - அனு கூலமாகத்தானே, நாலுதிரழுக்கு பத்து நாள் - பத்து நாள் வரைக்கும் நித்தியமும் ஒரு நாளைக் கொருக்காலே நாலுதரம் உறிஞ்சி ஆக்கிராணம் பண்ணிக்கொள்ளவேணும்.

## துளசி - மணத்தக்காளி இவைகளின் கற்பம்

*விருந்தா வனமே விலக்கு வராபித்த*
*விருந்தா வனவை விடத்த - விருந்தா*
*மணத்தகளி யென்னவுடல் வாழவுயிர் நல்கு*
*மணத்தகளி யுண்ணவெகு வாய்.* 46

(சொ. பொ.) துளசியினது கற்பத்தையும் மணத்தக்காளியினது கற்பத்தையுங் கிரமாலங்காரப்படிக்கு முறையாகச் சொல்லுகிறார் எப்படியென்றால் :- விருந்தா - துளசியினது, வனம் - இரசமாகிய சாறு, மே - ஒருவன் விரும்பியுண்டாலுஞ்சரியே கற்பமுறையாய் அதனது பத்தியத்தைமாத்திரம் பத்திரமாகப் புசிக்கினும் நல்லதே, இரண்டு மன்றிலே அதனது வேரையாவது முன்னே கூறின, இரசத்தையாவது எண்ணெயுடன் கூட்டித் தைலமாக முழுகினுஞ் சரியே, விலக்க - அதுவந்தநடுவே மத்தியஸ்தமாகத் தடுக்கவே, வரா - அப்பாலே வரமாட்டாது அது என்னவென்றால், பித்த - பயித்தியத்தை நண்பாக்கிக்கொண்டு கலந்த வாதப்பிணியாவது கபப்பிணியாவது சம்பந்தப்பட்டு ஒன்றுக்கொன்று, விருந்தாவன - புதுமையான விருந்தைப்போலே ஆகியது, ஐவிடம் - அதுதானெது வென்றால் விடமித்தசேட்ப வியாதியாகிய சன்னிகளாதியானது அப்பேர்ப்பட்ட பொல்லாங்குகளெல்லாம், தவிரும் - தெரித்துப் போகத்தக்கதாகச் செய்யும் அவிழ்தமென்னப்பட்டதானது.தா - சாமர்த்தியம் பொருந்தினதாம் (வேறு), மணத்த - உண்ட பிணியாளனுக்கு எப்படி ஆனந்தத்தைக் கொடுக்குமென்றால் கலியாணம் பண்ணிக்கொண்டவனுக்கு

அக்கலியாணத்தா லென்ன மகிழ்ச்சி வருமோ அப்படி, களியென்ன - சந்தோஷமென்று சொல்லிக் கொள்ளத்தக்கதாய், உடல் - சரீரமானது நெடுநாள், வாழ - உயிருடனே கூடி வாழ்ந்திருக்கத்தக்கதாய், உயிர் நல்கும் - பிராண சஞ்சீவியைப்போலே சவுக்கியத்தைக்கொடுக்கும், மணத்தகளி - மணத்தக்காளியினது காய், கனி, இலை, வேர் முதலானவைகளை ஊறுகாய், வற்றல், கறி, குடிநீரிப்படியாக இதிலெந்த விதமாகிலும், உண்ண - புசிப்பார்களேயாமாகில், வெகுவாய் - அவர்களெக்காலமும் எப்பேர்ப்பட்ட வருத்தமுமில்லாமல் மிக நன்றாயிருப்பார்கள்.

## வில்வம் - விளா - இவைகளின் கற்பம்

*மாலூரத் தாலை மடக்கஞர்போ மாந்தவரா*
*மாலூரத் தாலை மடிவபோன் - மாலூரம்*
*வெள்ளியிலை யாக்கமுதல் வேண்டினவர்க் கெப்போதும்*
*வெள்ளியிலை யாக்கவரு மேல்.* 47

(சொ. பொ.) வில்வத்தினது கற்பத்தையும், விளாவினதுகற்பத்தையும் கிரமாலங்காரமாகச் சொல்லிக்கொண்டு வருகிறார் :- மால் - மயக்கத்தினது தியக்கத்தை மெத்தத்தானே கொடுக்கப்பட்ட பொல்லாத பிணியினுடைய, ஊர் - பலத்தினாலதிகவேகமாய், தாலை - பிணியாளனுடைய நாக்கை, மடக்கு - வளைத்ததனாற் பேச்சுகள் பேசுகிறபோது குளறிப்போகச் செய்யும், அஞர் - உபத்திரவ வேதனை, போம் - அதமாயடிபட்டுப் போய்விடும், மாந்த - பானம் பண்ணினவுடனே அப்போதே, அரா - (அது எப்படி யென்றால்) பாம்பானது எப்படி, மாலூர்த்தால் - மகாவிஷ்ணு வாகனமான கெருட பகவானைப் பார்த்தவுடனே பயந்து நடுங்கி ஒடுங்கி விடுமோ அப்படி ஒடுங்கிப்போய் விடும், ஐ-சேட்ப வினையும், மடிவபோன் - அதமாகிப் போகிறது போலே வில்வத்தினது காய், கனி, இலை, வேர் முதலானவை உணவு, ஊறுகாய், குடிநீர், தைல முதலெந்த விதமாகிலும் புசித்துப் பாளித கற்பங்கியத் தானஞ் செய்வார்களுக்கெப்போதும், மாலூரம்

- உண்டபேர்கள் சரீரத்திற்குப், பெருமையான நகரம் போலழகையும் ஆண்மையையுங் கொடுக்கும்.

(வேறு) வெள்ளிலையாக்கமுதல் - விளாமரத்தினது இலையையும் காயையும் பழத்தையும் பட்டையையும் வேரையும், வேண்டினவர்க்கு - குடிநீராகவும் உணவான கறியாகவும் புசிப்பாகவுந் தாக நீராகவும் விரும்பிக்கொண்ட பேர்களுக்கு, எப்போதும் - எக்காலங்களிலேயும், வெள்ளியிலையாக்கவரு மேல் - மரணத்தை இல்லாமற்படிக்குச் செய்யு மென்பதற்குக் குறிப்பாகச் சொல்லுகிறார். எப்படியென்றால் பூமியின் கண்ணிலே இறந்து போன மானிடப்பிரேத மென்கிற பிணத்தை எடுத்துக்கொண்டு மசானத்துக்குப் போகிறதற்குப் பாடைகட்ட வேணுமென்ப துலகவழக்கம்; அதனை இல்லையென்னத் தக்கதாய்ப் பண்ணுமெனவே மரணத்தைத் தள்ளுமென்பது பெற்றாம்.

## காய்ச்சின பாலின் நன்மை, கள்ளினது தீமை

*பாலைக் குடியானாள் பார்வையென வட்டநிசிப்*
*பாலைக் குடியானாள் பற்றுமெயிற் - பாலைச்*
*சுரையையுண்டா மெய்யென்றுந் துன்பந் துனைக்கச்*
*சுரையையுண்டா மெய்யென்று சொல்.* 48

(சொ. பொ.) நல்ல பசுவின் பாலைக்காய்ச்சி இராத்திரி காலத்திலே உண்ணப்பட்டவனுக்கு நன்மையும் மதுவான கள்ளைக் குடிக்கிறவனுக்குப் பொல்லாங்கும் வருமென்று விவரமாகச் சொல்லுகிறார் எப்படியென்றால்:- பாலைக்குடியானாள் - பாலை நிலத்தினிடத்திலே நித்தியமும் வாசம் பண்ணப்பட்ட துர்க்கியாகிய வீரமாதாவினது, பார்வையென - குரூரமான யுத்த களத்தினது வெப்பமான பயங்கரத்தைப்போலே தேகத்திலுண்டான பித்த காங்கையாலே, அட்ட - நன்றாய்க் காய்ச்சின, நிசி - இராத்திரி காலத்திலே, பாலைக்குடியானாள் - பாலையுண்டியாகப் போசனத்துடனே பானம் பண்ணாதவனுடைய சுதின மெப்படியும்

வீணாகக் கெட்டுப்போம், பற்று மெயில் - சரீரத்திலே எப்படியும் வெப்பச்சூடுண்டாம். பாலை - குடத்திலேயிருக்கும், சுரையை - கள்ளை, உண்டு - குடித்து, ஆம் - அதனால் வளர்க்கப்பட்ட, மெய் - சரீரமானது, என்றும் - எக்காலத்திலேயும், துன்பம் - வியாதிப்பிணியானது நாடோறும், துளைக்க - துளைத்துக் கொண்டுவரல் போல் பண்ண அதனாலே, சுரை - உள்ளே யொன்றும் உதிரம் மாமிச மில்லாமற்படிக்குத் துவாரமாகப் போலாகப்போம் பின்னும், ஐயுண்டாம் - சேட்பமுமிகவளரும், மெய்யென்றுசொல் - நிசந்தானென்று சொல்ல வேண்டியது.

## வாட்கோரை - கிட்டிக் கிழங்கு

*நரையானை யான்சதியி னாடான் சசியை*
*நரையானை யான்சதியி னட்பான் - நரையானைக்*
*கிட்டிக் கிழங்கையடல் கேட்டுணில்வெண் குட்டமறக்*
*கிட்டிக் கிழங்கையுண்டு கெல்.* 49

(சொ. பொ.) வாட்கோரைக்கிழங்கினது கற்பத்தையும், கிட்டிக்கிழங்கினது கற்பத்தையும் கூறுகின்றார் :- நரையால் - நரை, திரை, மூப்பு, சாக்காடென்று சொல்லப்பட்ட துன்பங்கள் வருத்தப்படுத்த அதனாலே, நைய்யான் - மெலிந்து வருத்தப்படமாட்டான், மெலிவதொன்று மிராமலிருப்பான், சதியினாடான் - அவமானமென்று சொல்லப்பட்ட வஞ்சனைப்பிணியினாலே அகப்பட்டுக் கொள்ளத்தக்க நேர்பாட்டிலே மேவான், சசியை - தேவேந்திரனுடைய பெண்சாதியான இந்திராணியை, நரை - மானிடப் பெண்ணானவள், ஆனையான் சதியின் - தேவேந்திரனுடைய பாரியாளாக வேணுமென்று நினைத்தாலப்போது எப்படி மனம் கிலமாகிப் போவாளோ அப்படிப் போலே, நட்பான் - அப்படியாகத் தன்னை மெத்தத் தானே விரும்பி அபேட்சித்து வேண்டிக்கொள்ளத் தக்கதாய்த்தான் மேம்பாட்டுடனே தேவேந்திரனுக்கு மேலான தேவேந்திரனானது போலே வீற்றிருப்பான்.

நரையானை - அது எப்படி வருமென்றால் வயலிலே மேயப்பட்ட பட்சிகளிலே ஒரு பட்சியான நாரையென்று சொல்லப்பட்ட பட்சியினத்தை, கிட்டி - தான் சேரத்தக்கதா யதுவிரும்பித் தன்னையே உண்ண வேண்டி யுண்ணவதனாலே, கிழம் - முதுமை விருத்தாப் பியத்தையும், கை - பொல்லாத வருத்தத்தையும், அடல் - கெடுத்துப் போட்டென்றைக்கும் ஒரு தன்மைத்தான பாலவயசுடனே இருக்கப் பட்டதையும் கொண்டிருக்கிறதை விசாரணைபண்ணி, கேட்டுணில் - வாகடசாத்திரிகளுடைய நூலின் வரலாறாகக் கேட்டபடியே கற்பமுறைமை தப்பாமற்படிக்கு உண்பானேயாமாகில், (வேறு), வெண்குட்டமற - வெண்மையான நிறத்தையுடைத்தான வெள்ளைக் குட்ட வியாதிகளெல்லாம் வாங்கிப் போக வேணுமென்றால், கிட்டிக்கிழங்கையுண்டு - நெய்மிகுந்து மணக்கப்பட்டதான நெய்ச்சிட்டிக் கிழங்கென் றுலகவழக்கமாகச் சொல்லப்பட்டதான கிட்டிக்கிழங்கைக் கொண்டு வந்து ஒரு கடைப் பிடியாகத்தான் கறி, வற்றல், பட்சணமிப்படி நேர்ப்பாகப் புசித்து, கெல் - வியாதியில் முன்னமே சொன்ன நோயைப்பற்றித்தானே வேரோடே போக்கடிக்க வேண்டியது.

குறிப்பு:- கிட்டிக் கிழங்கு - சின்னிக் கிழங்கு என அகராதியில் கூறும். நோய், நோய்க்கு மருந்து ஆகிய இதன் தன்மையை ஆயும் போது கொட்டிக் கிழங்கு என்பது கிட்டிக் கிழங்கெனத் தவறுதலுக்குட்பட்டிருக்கலாம்.

## கோரைக் கிழங்கு - அமுக்கினாங் கிழங்கு

*கோல வுணவைக் குமர னடலிவடு*
*கோல வுணவைக் கொடுகயத்தைக் - கோல*
*நகுடவே ருண்டுதிற நாட்டுவையேன் மேவை*
*நகுடவே ருண்டு றுவாழ் நாள்.* 50

(சொ. பொ.) கோரைக்கிழங்கினது கற்பமும் அமுக்கினாங் கிழங்கினது கற்பமுங் கூறுகிறார் :- கோல - அம்புபோலக்கொடும்

பாவஞ் செய்யப்பட்ட, அவுண - அசுராதிகளுடைய, வை - பொல்லாத வாழ்க்கையையெல்லா முன்னாலே, குமரன் - சுப்பிரமணிய சுவாமியார், அடலில் - சங்காரம் பண்ணினது போலே, அடு - நீயுமப்படியே அறுத்தெறிந்துபோடு என்னத்தையென்றால், கோல உணவை - வராகபட்சணியென்னப்பட்ட கோரைக்கிழங்கை விவரமாயெப்படிப் புசிக்கவேண்டியதோ அப்படி, கொடு - கற்பமாக நித்தியப்படி மாவாக்கி நெய்யுடனே அக்காரமும் கூட்டி உண்டுகொண்டு, கயத்தை - காசரோக மென்கிற பொல்லாததான க்ஷய ரோகத்தை.

கோல - புதிதாகத்தொடங்கிக் கட்டிக்கொள்ளுகிற தானமான, நகுட - காட்டிலிருக்கப்பட்ட, வேர் - கிழங்கை - (சொன்ன பதத்தை மொத்தமாகக் கூட்டிப்பார்க்குமிடத்திலே), நகுட வேரெனவே - அமுக்கிராக் கிழங்கென்று பேராச்சுது அப்படியான அமுக்கிராக்கிழங்கை; உண்டு - சூரணம், கிருதம் பண்ணு முறைமையாய்ப் பண்ணி எப்படியாகிலும் ஒரு முறையாகக் கடைப் பிடியாயுண்டு பார்த்து, திரம் - உறுதியை, நாட்டுவையேல் - உறுதியாய்ப் பத்தியப்பழுது வராமலிருப்பையே யாமாகில், மேலை - வருங்காலமாகிய முன்னுக்கு, நகுட- தேவேந்திரனுக்கு நிகரான ஒரு ராசாவினுடைய, ஏருண்டு - அழகுண்டாம், உறுவாழ்நாள் - பின்னும் ஆயிசுமுண்டாம்.

## வசளை - கானான் - சிறுகீரை - உருளைக்கிழங்கு

*வசளை யடையுண் வயமீறுங் கானான்*
*வசளை யடையுண் மறமாம் - வசளை*
*யுருளை யடியிழுதை போஞ்சில்வி மைந்தா*
*யுருளை யடியிழுதை யுண்.* 51

(சொ. பொ.) வசளையினது கற்பத்தையும், கானானினது கற்பத்தையும் சிறுகீரையினது கற்பத்தையும் உருளைக்கிழங்கினது கற்பத்தையும் வரிசைக்கிரமமாகச் சொல்லுகிறார். வசளை - வசளையாகிய பெயரையுடைத்தான கொடி வசளை, கொத்து வசளை ஆகிய கீரைகளை,

அடை - இலைகளை நன்றாயாய்ந்து இலைக்கறியாக உண் - பாகமாகச் சமைத்துக் காலந்தப்பாமற் படிக்கு ஒருகடைப் பிடியாகப் போசனத்துடனே புசித்துக்கொண்டு வருவார்களே யாமாகில், வயம் - பராக்கிரமமானது, மீறும் - நாளுக்கு நாளதிகமாய் வளர்ந்து மேலிடும், ஓங்கியிருக்கப்படும்.

கானான் - கானானென்று சொல்லப்பட்ட கீரைகள் இரண்டு வகைப்படும்; அவைகள் என்னவென்றால் பெருங்கானான், முட்டைக்கானான். இவையிரண்டிலே பெருங்கானான் மாத்திரம் பக்குவமாய்ப் பாகம்பண்ணியதைப் போசனத்துடனே புசித்துக்கொண்டு ஒரு மண்டல மாத்திரம் கடைப்பிடியாய் வருவார்களேயானால் நன்று. பின்னும் இதைத்தானே, வசளை - ஒரு சட்டிமாத்திரங் குறைவில்லாம லட்டு, அடையுண் - உள்ளேயிருக்கத்தக்கதாய்ப் புசிப்பார்களேயானால், மறமாம் - சவுரிய சாமார்த்தியத்தொருமிக்க வாழ்வார்கள், வசளை - பின்னும் அவர்களுக்கதிகாரம் பொருந்திய தெய்வ மகிமை சேரும்; எப்படியென்றால் வீர மாதாவாகிய தைரியலட்சுமியானவள் வசப்பட் டினிதான தாஷ்டீகத்தைக் கொடுப்ப ளென்றைக்கும்.

உருளை - வண்டியின் காலாகிய சக்கரத்தினது அடி - அது தேய்ந்தோடுகிற மார்க்கத்திலெப்படி சுவடானது மழுங்கிப்போயிருக்குமோ அப்படியே, இழுதைபோம் - மழுங்கின புத்தியானது போய் நல்ல புத்தியானது கூர்மையாகத்தானே நாளுக்கு நாள் அதிக வீரபத்திகளுண்டாம், சில்லி - சிறுகீரைச்சமூலத்தையும் அதைக்கொண்டு மிளகுப்பொடி லவணம்போட்டு நெய்ததும்ப விட்டுப் பாகம் பண்ணியதைப் போசனத்துடனே ஒரு நிலையாய் நித்தியப்படி ஒருமண்டலம் வரைக்கும் பிரமாணம் பண்ணிக் கொண்டு புசித்து வந்த பேர்களுக்கு அதிக சவுக்கியமும் தேகதிடகாத்திரமு மென்மேலுங் கொடுக்கு மென்பதாம், மைந்தாய் - மிகுந்த திடகாத்திர பல முண்டாகத்தக்க மார்க்கத்தை விசாரிப்பாயே ஆனால், உருளையடி - உருளைக்கிழங்கைத்தானே நல்லதாய்ப் பழுதில்லாமற் கொண்டுவந்து அதை முன்னே அரியாமற்படி முழுதும் வேகவைத்தந்த வெந்நீரை விட்டாற்றி அதனது மேல் தோலைப் போக்கி உரித்து அரிந்து கொண்டு பிறகு, இழுதை - நெய்யிலே தானே சம்பார முதன்மையான வெங்காயம்,

மிளகு, உப்பு முதலியன திட்டமாய்ப் போட்டு அந்த நெய்யிலே நன்றாயிட்டுத் ததும்ப நெய்யுடனே எடுத்தாற்றிப் புசிப்பாகப் போசனத்துடனே புசிப்பார்களேயெனில் ஒருமண்டலம் புசிப்பதற்கு முன்னேதானே, உண் - புசிக்க உடலுக்குண்டாம் நல்லபலமும் பெருமித பராக்கிரமமேம்பாடும் அதிகமான வீரிய புஷ்டியும் எப்படியென்றால் இந்தக்கிழங்கு இறைச்சிக்கதிகம் வன்மையென்ப தெப்படியென்றால் அபிசிதமூலமென்றும் முன்னாலே இது பேர் பெற்றிருந்ததென்ப தானபடியினாலே இதைப்புசித்தால் பராக்கிரமத்தைக் கொடுக்கும், தோஷமில்லாமல் பராக்கிரமத்தை அடையலாமென்பது கருத்து, தன்வந்திரி முதலான தெய்வ வயித்தியர்களுக்கெப்படியென்றால், பிசிதாசனரென்பது ராட்சதர்க்குப்பேர். அமுதாசனரென்பது தேவர்களுக்குப்பேர்.

அப்படியிருந்தும் தேவர்களெல்லாரு முன்னாலே எதிராளிகளான பகைச்சத்துரு வென்னும் ராட்சதரைச் செயிக்கத் தக்கதாய் அவர்கள் உணவான பிசிதத்துக் கதிகமான இந்த உருளைக்கிழங்கைப் புசித்து இறைச்சியுண்ட பலத்துக்கு அதிகமான பலத்தைப் பெற்று இகலான பகையைச் செயித்தார்களென்பது கீர்வாண வாகடசாத்திரமான தன்வந்திரிய மென்கிற கிரந்தத்தினிலே பஞ்ச மாத்தியாயத்திலே கூறுகின்ற வரலாறெல்லாமறிந்தவரு மிதையே கூறினார் இதை மதனகாமியாதிமூலமென்றுஞ் சொல்லுவார்கள்.

## நன்னாரி - உத்தாமணி - ஆல்

*அங்கா ரிகைமூலி யாச்சியத்தொ டுண்ணநித்தி*
*யங்கா ரிகைமூலி யாறுமே - அங்காரி*
*பற்றாது வேலிப் பருத்திமுழு தாலாலால்*
*பற்றாது வேலிப் பரு.* 52

(சொ. பொ.) நன்னாரியினது கற்பத்தையும் உத்தாமணியினது கற்பத்தையும் ஆலினது கற்பத்தையும் கிரமமாகக் கூறுகின்றார் :-

அங்காரிகை - வாகட சாத்திரிகளுடைய ஆக்கினையாற் சொல்லப்பட்ட நன்னாரியினது, மூலி - வேர் முதலான சமூலமான இலை, கொடி, காய், பூ, சமஸ்தமானதும், ஆச்சியத்தொடு - நெய்யுடனே வதக்கி வறுத்துக்கொண்டு அதைத் துவையல் வடகமான மிப்படியாகச் சிறு புளி, மிளகு லவணமிட்டுக் கடுகு மாத்திர வற்சிதமாய் பாகம் பண்ணி, உண்ண நித்தியம் - உண்டாலொரு மண்டலமாத்திரம் பத்தியமாகத்தானே தினமும் விடாமற்படிக்கு மேலே, காரி - பித்தமேகவுட்டணக்காரகக் காங்கையினால் வருகிற பொல்லாமையான தென்கிற, கைமூலி - அக்குளென்கிற வாகு மூலத்திலே ஒருவிதமாக நாறுகிற தூர்க்கந்தநாற்றமானது, ஆறுமே - உள்ளே உண்டான மேகவெப்ப மாறிப்போயதினாலே வெளிப்புழுக்க வாசிப்பான நாற்றமும் வாங்கிப்போய்விடும். அதனாலே அறிந்துகொள்ள வேண்டியது, (வேறு) அங்காரி - சலதோஷத்தினாலே விடமித்த சன்னிகளுடைய பேதங்களான தோஷ விடங்களுள்ளதெல்லாம், பற்றாது - பலஞ்செய்து சிரசிலே தொடுத்துத் தேகமெல்லாம் பிடிப்பாக வளரமாட்டாது, வேலிப்பருத்தி - உத்தாமணிஎன்று சொல்லிய ஒரு நல்ல மூலிகையானது, முழுதால் - வேர், கொடி, இலை, பால் மேலுமுண்டான இப்படியான சமூலமும், ஆலா - இவைகளினாலே குடிநீர் (கஷாயம்) கற்சுண்ணாம்பு முதலான இவைகளிலே எடுத்து இசைந்தாலும் நல்லெத்தனமென ஒன்றைக்கடைப்பிடியாக வைத்துக்கொண்டு ஒரு மண்டலம் விடாமல் பத்தியமும் பங்கப்படாமல் புசித்தால் மெத்த நல்லது. சந்நிகளெல்லாம் பற்றற்றுப் போய்விடும்.

ஆலால் - ஆலமரத்தினது விழுது, வேர், கொம்பு, பால் இவைகளிலே எதுவாகிலும் இசைந்து வைத்துக்கொண்டு ஒரு மண்டலமாத்திரங் கடைப்பிடி நிபந்தனைப்பிரகாரம் பற்றுலக்கலாகிலும் பாலைப்பருகுதலாகிலும் இலையை மாத்திரம் போசனத்துக் காசனமாகவாகிலும் ஒரு நிபந்தனையாகக் கூட்டிக் கொண்டு வந்தால் பல்லினுடைய வரிசை முப்பத்திரண்டு தந்தங்களும், தாது இரத்தம் முதலிய பலப்பட்ட வேரினாலுறுதிப்பட்டு அசைவில்லாம லிறுகி உரப்பட்டுக் கல்லைப்போலே கெட்டிப்படும்படி பல்லுறுதியாகுமெனவே

தேகமுறுதிப்படு மென்பது சொல்ல வேண்டியதில்லை; வீரிய புஷ்டியுண்டாம், வேலிப்பரு - சரீரத்துக் குறுதியானது எப்படியுண்டாகப் பண்ணுமிந்த ஆலின் கற்பமென்றால் கோட்டையான தொரு பட்டணத்திற்குச் சூழப் பலத்த பத்திரமாக அகழியுடனே சமைத்து வைத்தது போலேயு மிருக்கும்.

## ஆயில் பட்டை - களிப் பறட்டை

*ஆயி லுரியை யடுநீ ருணித்தியமெய்*
*ஆயி லுரியையெனி லாவிமிசை - ஆயில்*
*வரிசையாக் கற்குநிகர் மல்லியட்டுண் மெய்க்கு*
*வரிசையாக் கத்தையுறு வை.* 53

(சொ. பொ.) ஆயில் பட்டையினது கற்பத்தையும் களிப்பறட்டையினது கற்பத்தையுங் கூறுகின்றார் :- ஆயிலுரியை - ஆயிலென்று பேர் சொல்லப்பட்ட மரத்தினது பட்டையாகிய ஆயில்பட்டையைப் பிரமாணமாகக் கொஞ்சம் சூட்ச மாகத்தானே நித்தியப்படிக்கு, அடு நீருண - காய்ச்சத்தகும் புதுப்பாண்டத்தின் கண்ணிலே நல்ல தண்ணீ ரொரு படிக்கு ஒரு பலம் பொடியைப் போட்டு வெய்யிலிலே ஒரு நாள் முன்னாடிச் சூரிய புடமாக வைத்ததிலே முக்கடுகுப்பொடி வகைக் கரைக்கால் பலமாகக் கூட்டிய கால் அரைக்கால் பலம் பொடியும் போட்டுக் கமலாக்கினியாகக் காய்ச்சியதை முக்காலாழாக்குத் தண்ணீரிலிறக்கிக் கொண்டு உதயகாலத்திலே நித்தியப்படிக்குப் புசித்து வந்தா லதனாலே தேகத்திலுண்டான வாதமுதலான முப்பிணிகளுந் தத்தமது நிலையிலே நடக்கும். நித்திய மெய் - அப்பாலே சுரமுதலான வெப்பப்பிணி யெல்லா மடங்கி யிறந்துபோம். சரீர மெல்லாந் திடம்பெற்றுரமாயிருக்கும். மேலே, ஆயில் - பெற்ற தாயைப் போலே, உரியை எனில் - பாத்தியப்பட்ட நீயெனி லிதற்குச் சற்றே அனுகூலமா யிருப்பையே யானால், ஆவிமிசை - உன்னுடைய சீவப்பிராணியை மேலே காப்பாற்ற வேண்டிய பொறுப்புண்டாகும்.

ஆயில் - பழம்பட்டதனாற் கட்டிட மெல்லிதாய்த் தளர்ச்சியாய் விழுந்து பொலிவிழந்து போய்விட்ட வீட்டை வரிசையாக்கற்கு நிகர் - புதிதாகக் கட்டித் திடமான வீடாகக் கட்டிக்கொள்ளுகிறதற்குச் சமானமாகி யிருக்கு மனிதருடைய சரீரம் மெத்தவும் பிணியினாலே நொந்து மெலிந்துபோன உடம்பைத் தேறத்தக்கதா யுடனே வன்மைப் படுத்திக்கொள்ளுகிறது எப்படியென்றால், மல்லியட்டுண்-களிப் பறட்டையென்கிற மூலிகையைச் சமூலங்கொண்டு வந்து அதைப் பாகம் பண்ணி (எப்படி யென்றால் மாடத்தூள், மிளகு இலவணப்பொடி இவைகளெல்லாம் பொடியாகப் பொடித்துக் கொண்டுடனே நெய்யும்விட்டுத் தாளிதமுங் காயம் முதலிய சம்பாரமுமிட்டுப் பண்பாகச் சமைத்ததை) நித்தியப்படியாய்ப் புசித்துக்கொண்டு பத்தியத்துடனே ஒருமண்டலமாத்திர மிருந்தால் அப்பாலே, மெய்க்கு - சரீரத்துக்கு, உவரி - சமுத்திரத்தைப்போலவும் சை - பருவதத்தைப்போலவும், ஆக்கத்தை - பராக்கிரமத்தை மெத்தவும், உறுவை - உண்டாயிருப்பாய்.

## எலுமிச்சம் பழம்

*கோணத் துளையுங் குறியுளையுங் கொக்காகிக்*
*கோணத் துளையுங் குருளைபோற் - கோணச்*
*சடமதியுண் மாறாமற் சம்பீரக் கற்பஞ்*
*சடமதியுண் மாறாமற் சண்.* 54

(சொ. பொ.) எலுமிச்சம் பழத்தினது கற்பத்தைக் கூறுகின்றது. (எப்படியென்றால் வரலாறு - அதிகமான பித்தகாங்கையென்கிற வெப்பத்திலே அதிக சீதளக் கபவேதனை யுண்டாவதனாலே மிகவும் புழுக்கப்பட்டு அதிலே நெல்லினது புழுக்கத்திலே ஆவி புறப்படுகிறாப்போலே சீதளஉட்டிணப் புழுக்கவேக மேலிட்டு உடலந்தளர்ச்சியாய் அதனாலே வெற்றிலைக்கட்டிடையிறுக்கி வெற்றிலைகளெல்லாம் பழுக்கிறது போலே) கோணத்துளையும் - மூக்கிலேயிருக்கப்பட்ட மயிரும், குறியுளையும் - கோசத்தானமாகிய இரகசியத் தானத்திலே இருக்கப்பட்ட மயிரும், கொக்காகி - வெளுத்து

நரைத்துப்போய் ஆனபோதே மற்ற தலைமயிர் முகத்துமயிர் எல்லாம் நரைத்துப் போமென்பதற்குச் சொல்ல வேண்டியதில்லையென்பதற்காக உம்மை கொடுத்தார், கோணத்து - வாளையுருவிக்கொண்டு வெட்டவரும்போது, உளையுங் - அதைப்பார்த்துப்பயப்படப்பட்ட, குருளை போல் - ஆட்டுக்குட்டியைப்போலே, வியாதியினுடைய கொடூரத்துக்குப் பயந்து உயிரானது நடுங்கத்தக்கதாய் உடல் மெலிந்து வாட்டமாகவும், கோண - மாறாட்டமான வித்தியா விபரீதங்களான உற்பாதங்களுண்டாக, சடம் - சரீரமும், மதி - புத்திச் சித்தமும் என்னவே பிடிப்பு, மகோதரம், பக்கசூலையும், முடமும், பயித்தியமும், பிரமையும், உன்மத்தமும் என்பதாம். ஆகையா லிவைகள் வாங்கிப்போக, உள்மாறாமல் - இடைவிடாமல் ஒரு மண்டலமட்டுக்கும், சம்பீரம் - எலுமிச்சம்பழத்தை, ரசமும் ஊறுகாயுமாக நித்தியப்படி, கற்பம் - கற்பமுறைமையாகப் பத்தியத்துடனே, சடமதியுண் - ஆறுமாசமாத்திரம் புசிப்பாயேயானால், மாறா - அது பிரம்பு போலேயாம், மல் - நோயினது பலத்தை, சண் - அப்பாலே அடித்து அதம் பண்ணிப்போடுவாய்.

## தாமரை - பிரமதண்டு

*சண்டனையுஞ் சண்டனையுந் தள்ளமல ருள்ளுறையுண்*
*சண்டனையுஞ் சண்டனையுஞ் சார்மதிபால் - சண்டனையும்*
*வையாரா யுண்மறைய வைகுவார் வாகடத்தை*
*வையாரா யுண்மறைய வர்.* 55

(சொ. பொ.) சண்டனையும் - செவிடனென்கிற பொல்லாங்காகிய செவிட்டுத்தனமான காது கேளாமையையும், சண்டனையும் - அலியனென்கிற பேடித்தனத்தையுடைய நபுஞ்சகத்தையுமான புருஷத்தனமல்லாததையும், தள்ள - போக்கடித்து நன்மையை அடைய வேண்டியிருந்த பேர்களுக்குச் சொல்லுகிறோம், சண்டனையுஞ் சார்மலருள்ளுறையும் - சூரியனை நண்பனாகக் கொண்டு நம்பியிருக்கப்பட்ட மலரான தாமரைப்பூவினது மத்தியிலிருக்கப்பட்ட மகரந்தப்பொடியான தாதுவை, வெண்மையுடனே பொன்மையுங் கலந்த

நிறம் பெற்ற வண்ணமாயிருக்கும் அதையெடுத்துச் சர்க்கரையுந் தேனுங்கூட்டிக் கடைப்பிடியா யுதய காலத்திலே நித்தியப் படியாய்ப் புசித்துக் கொண்டு பத்தியத்துடனே தப்பாமல் நல்ல நெறியாய் வரவேண்டியது; வரவே முன்னே செவிட்டுத்தனமான பிணியானது கெட்டுப்போம்.

சண்டனையுஞ் சார்மலருள்ளுறையும் - எமதர்மராசனென்கிற நமனை நண்பனாகக் கொண்டு நம்பியிருக்கப்பட்ட மலரான பிரமதண்டுப் பூவிலிருக்கப்பட்ட மகரந்தப் பொடியான தாதுவைச் செம்மையும் பொன்மையுங்கலந்த நிறமாயிருக்கப் பட்டதை குறிப்பாயறிந்து பார்த்துக்கொண்டு அதைக் காலமே காலமே முருங்கைப் பிசின் பொடியும் பசுவின் நெய்யும் ஒருவராகனெடை யொருவராக னெடையாக இரண்டு வராகனெடைக்கு முதல் கற்பங் கால் வராக னெடையாகக் கூட்டிப் புசித்துக்கொண்டு பத்தியத்துடனே கிரமப்படியே நல்ல நியதியாக வரவேண்டியது; வரவே பின்னேசொன்ன நபுஞ்சகத் தனமான புருஷத்தனமில்லாமலிருக்கின்ற பிணிகெட்டுப்போய் மன்மதவிம்பமான வீரிய புஷ்டியுண்டாம், சார்மதிபால் சண்டனையும் - அதற்குப் பருவமான ஆறுமாசத்திலே பாதியான மூன்று மாசத்திலே தானே வாசியாக வேணுமென்கிற தவணை, கூடிவையார் - தேவையென ஒன்றும் அதுவுந்தேவையில்லை, ஆயுண்மறைய - அதற்குள்ளே தானே மறைந்து போகத்தக்கதாய்ச் சொஸ்தப்பட்டுப்போகத்தானே செம்மைப்பட்டு, வைகுவார் - சுகிர்தத்திடமாயிருப்பார்கள் (மேலே), வாகடத்தை வயித்திய சாத்திரத்தை யெல்லாரு மறியத்தானே, வையார் - திட்டார்கள் சும்மாயிருப்பார்கள், ஆயுண்மறையவர் - ஆயுள்வேதியரென்று சொல்லப்பட்ட வயித்தியர்.

## மலட்டின் குணம்

*சொற்கப் படிவிலகித் துண்டமுளைக் கண்ணிணையேன்*
*சொற்கப் படிவிலகித் தோளுயர்ந்து - சொற்கப்புச்*
*செவ்வந்தி யம்மையுறழ் சேகரியேன் மாகரியாய்*
*செவ்வந்தி யம்மையென்று தேர்.* 56

(சொ. பொ.) மலடி யென்னும் பெண்பாலிலுண்டாகிய மலட்டினது குணத்திலக்கணத்தைக் கூறுகின்றது :- (எப்படியென்றால்) சொற்கப்படி விலகி - மேலாகிய தெய்வலோகத்துப் பெண்களுடைய ரூபமெப்படியோ அப்படியான லட்சணங்களுண்டானவளைப் போலே பிரகாச மென்மேலு மொருக்காலே யுண்டாயதுக் கொத்ததான, துண்டமுளை - மூக்கு நாசிக் குழைக ளிரண்டு மொன்றுக் கொன்று வித்தியாசப்பட்டுச் சரிப்படாமலும், கண்ணிணையேல் - நேத்திரத்தின் சோடு மேற்படியே யொன்றுக்கொன்று சரிப்படாமலும், சொற்கப்படி - முலைகளினுடைய சோடுகளுமேற்படியே ஒன்றுக்கொன்று சரிப்படாமல் வித்தியாசமாகவும், விலகி - மாறுபட்டும், தோளுயர்ந்து - புசங்க ளொன்றுக்கொன்றுயர்ந்தும் தாழ்ந்தும், சொற்கப்பு - ஒருவர் பேசப்பட்ட பேச்சுக்கு ஒவ்வியிருக்கத் தக்கதாயுண்டான, செவ்வந்தி - சிவந்த செவ்வானமானது மாலைப்பொழுதிலேயிட்டுச் செகப்பு மேலாகத் தோற்றச்சே, அம்மையுறழ் - அதிலே கூடத்தானே மழைபெய்யவந்த மேகத்தைப்போலே கருப்புங் கூடக் கலந்திருக்கிற செம்பட்டைமயிருங்கூடிய கூந்தலையுடைத்தான, சேகரியேல் - முடியையும் படைத்தவளாயிருப்பாளே யாமாகில், மா - பெரிதான, கரியாய் - பிரமாணிக்கமாக நிச்சயித்துச் சொல்லுகிறேன், மெய்யாய் நம்பிக்கையாய்க் கேட்டுக்கொள்ளு வாய், செவ் - செம்மையாயறிந்து வாகடசாத்திரங்களிலே சொல்லப்பட்ட, வந்தியம்மையென்று தேர் - மலடி யென்கிற முன்னாளிலே பேர்பெற்ற ஒரு கிழவியென்கிற குறிப்புச்சொல் வெளிப்படையாக வழங்கவேண்டி அம்மை யென்றாரென்று அறிய வேண்டியது.

## மலட்டுக்குக் கற்ப மருந்து

*மாயா மலட்டு வலிக்கமைவேல் சம்படிநீர்*
*மாயா மலட்டு மடலட்டு - மாயா*
*பகரணமண் டாமலொரு பங்கீடாய் நாளும்*
*பகரணமண் டாமலுண்டு பார்.* 57

(சொ. பொ.) வெகுநாளாய் வாங்காமலிருக்கப்பட்ட மலட்டு வியாதிக்குக் கற்பம் சொல்லுகிறார் :- மாயாமலட்டுவலிக்கு - பொல்லாத வசப்படாத வஞ்சனை பண்ணத்தக்கதாய் வந்த மலட்டு வியாதிவாசியாக வேண்டினபேருக்குக் கற்பமுறையான ரகசிய மருந்து சொல்லுகிறோமெப்படியென்றால், அமை - மூங்கில் வேரும், வேல் - கருவேல மரத்தினது வேரும், சம்படி - நாவல் மரத்தினது வேரும், இந்த மூன்று வேர்வகையும் வகையொன்றுக்கு அரைப்பலம் விழுக்காடு, நீர் - நல்ல தண்ணீர் முக்கால்படி ஒரு புதுப்பாண்டத்திலே போட்டுக் குடிநீர்விகிதமாய், மாயாமலட்டு - ரசங்களொன்றுங்காய்ந்து அதனாலே சுண்டிக் கருகிப் போகாமறபடிக்குக் காய்ச்சி அந்தக் குடிநீரை இறக்கிக் கணக்குப்பிரகாரம் கால்வாசி பார்த்துக்கொண்டு அதிலே, மடலட்டு - பனைவெல்லம் நல்லதா யரைப்பலம் போட்டு மேலே பின்னும், மாயாப கரணம் - விஷ்ணுவினுடைய திருட்டுடைமையென்று சொல்லப்பட்ட வெண்பசுவினது வெண்ணெயு முன்னேயெப்படிச் சொன்னோமோ அப்படி அரைப்பலமும் போட்டு, மண்டாமல் - அதிகமாய் மிஞ்சிப் போகாமறபடிக்கு, ஒரு பங்கீடாய் - ஒரே விதமாய்க் கூறுகளொன்றுக்கொன்று ஏற்றத்தாழ்ச்சிவராமறபடிக்குச் சரியாகப் போட்டு, நாளும் - நித்தியப்படி யொருநாளும் விட்டுவிடாம லொரு மண்டல மட்டுக்கும், பகர் - சொல்லப்பட்ட அவயவமாகியதான, அணம் - உண்ணாக்கு மேல்வாய் கீழ்வாயான இவைகளிலே, அண்டாமல் - உண்ணப்பட்ட மருந்து படாமறபடிக்கதிக சாக்கிரதையாய், உண்டு பார் - ரொம்பப் பக்குவமாகப் புசித்தப்பாலே என்னுடைய அவிழ்த குணத்தை நீ பரிட்சைபார். மேலே உன்னுடைய மலடு நீங்கிப் புதல்வனைப் பெற்றிருப்பாயென்பது குறிப்பெச்சமான நல்ல வார்த்தை.

## விநோதம் - அக்கினிக்கட்டு

*கலியாணப் பூசினிக் காயிரத மெய்யிற்*
*கலியாணப் பூசினிக்காய மெய்யார் - கலியாணப்*
*பாவகத்தை மீறாமற் பண்ணு மனல்செயமாம்*
*பாவகத்தை நீயறிந்து பார்.* 58

(சொ. பொ.) விநோத மென்கிற வேடிக்கையிலே ஒருவிதமான அக்கினித் தம்பனமென்று சொல்லப்பட்ட அக்கினிக் கட்டு வரலாறாகக் கூறுகின்ற தெப்படியென்றால் :- கலியாணப் பூசினிக்காயிரதமெய்யில் - கூழ்ப்பாண்ட மென்றும் பெரும்பூசினிக் காயென்றும் மாட்டுப்பறங்கிக்கா யென்றும் பலபலவிதமாய் வழக்கமாகப் பேர் சொல்லப்பட்டதான கலியாணப்பூசினிக்காயினுடைய ரசமானத்தை நித்தியப்படி அதனது சக்கையை உள்ளுக்குக் கறியாகவு மதனுடைய ரத்தமான சாற்றை மேலே உடம்பில் சந்தனக்குழம்பு போலே நிதமும் பூசிக்கொண்டு வர வேணுமென்று ஒரு நிபந்தனையான கடைப்பிடி பண்ணிக்கொண்டு அப்படியே, கலியாணப்பூசில் - தடவாமற் போய்விட்டோமென்கிற கருப்பு நீங்கிப் போய்விடத் தக்கதா யுடலிலே யூற நித்தமும் பூசிக்கொண்டு வந்தால் அப்பாலே, இக்காயம் - இந்தத் தேகமெல்லா முரம்பெற் றுறுதியாய், மெய்யார் - உண்மையானது நிரம்பியதான மிகு கலியாணமான, ஆர்கலியாண - பெரிய சமுத்திரத்தைப் போலே மகிமையுண்டாகவும், பாவகத்தை - அக்கினியை, மீறாமற் பண்ணும் - அதிகப்படுத்தாமற்படிக்குச் செய்யும், அனல்செயமாம் - அக்கினியைச் செயிக்கும் படிக் குண்மையான மகிமையை யதிகமாகக் காட்டும், பாவகத்தை - பாவித்துக் கொள்ளப்பட்ட பாவனையை, நீ - மாணாக்கனான மகனே, அறிந்துபார் - நன்றாயறிந்து விசாரித்துப் பார்த்துக்கொள்ள வேண்டியது.

## பிள்ளைபெறமாட்டாத பேருக்கு

*மாதவத்தை யாற்றி வருகருப்ப மானபத்து*
*மாதவத்தை யாற்றி மகவினா - மாதவத்தை*
*நீவலிகு சக்கனியா னேர்வாள நெஞ்சுதொட்டு*
*நீவலிகு ச்க்கனிமார் நேர்.* 59

(சொ. பொ.) பொறையுயிர்த்தலென்கிற பிரசவ வேதனையான பிள்ளைபெற மாட்டாதவளான பெண்பாலார்க் கெல்லா முபசாந்தியாயது

முடியத்தக்கதான உபகாரம் எப்படியென்று பாராமற்செய்யென்பதைக் கூறுகின்றது :- மாதவத்தையாற்றி - பிள்ளையில்லை யென்கிற விதனத்தினாலது போய்ப் பிள்ளையைப் பெறத்தக்க மகத்தான தபசு பண்ணியதனாலே, வருகருப்பமான - வரப்பட்ட கெர்ப்பத்தைப் படைத்தந்தக் கெர்ப்பமானது முதிர்ச்சியாய் நன்றாய் முற்றுப்பெற்ற பிற்பாடு, பத்து மாதவத்தை - தசமாசாந்த மென்று சொல்லப்பட்ட பத்துமாதத் தினது கடைசியான பிள்ளை பெறுங்காலத்தினது முடிவினது சமீபத்தை, ஆற்றி - உண்டாகிப் போயும், பிள்ளையைப் பெற மாட்டாமல் அதனாலே வரப்பட்ட பிரசவ வேதனையைப் பொறுத்துக்கொண்டு, மகவினா - மேலேயும் நாள் பட்டும் பிள்ளையைப் பெறமாட்டாம லிருக்கிற போதுண்டான உபத்திரவம் போகத்தக்கதாயும், மாது - பெண்ணினுடைய அவத்தை - வருத்தமெல்லாம், நீவ - போக்கடிக்கவும் பிள்ளை உபத்திரவ மில்லாமல் பெறுவிக்கவும் உனக்கு வேண்டியிருந்தால், லிகுசக்கனியால் - எலுமிச்சம் பழத்தை நல்ல பழமாய்ப்பொறுக்கியெடுத்துவைத்துக்கொள்ளவும்.

நேர்வாளம் - சோபியென்றும் மலபந்தாரி யென்றும் வழக்கமாகச் சொல்லப்பட்ட நேர்வாளத்தை மைபோலரைத்து அதன் சுத்தியு மத்தியிலிருக்கப்பட்ட மலினமும் நீக்காமல் அதற்கு நேராகக் கடுகுரோகணியையும் நன்றாயரைத்துடனே ஆமணக்கெண்ணெயும் வேப்பெண்ணெயும் கொஞ்சமாய் விட்டு இழைத்து, முன்னே சொன்ன எலுமிச்சம் பழத்தில் துவாரம் பண்ணி, அதிலே இப்படி அரைத்திழைத்த மருந்தைத் திணித்தத்தைக் கையிலே மகிமைபோலே வைத்துக்கொண்டு அயலார்க்குத் தெரியாமல் நெஞ்சுதொட்டு மருத்துவச்சியாவது பாத்தியப்பட்டபேரான உரிமைக்காரராவது கேசாதிபாத மென்னப்பட்ட ஊர்த்தாதோமுக மென்கிற மரியாதைப்படி எப்படிக்கிதவோ அப்படி மாதினுடைய மார்பினிடத்திலிருந்து நாபிக்குங்கீழ் வயிற்றடி வரைக்கு மெத்த லகுவிலே இதவாகத்தானே, நீ - மாணாக்கனென்கிற பக்குவனே கெட்டியா யுறுதியாயன்றி, வலி - இழுத்துக்கொண்டு வா, குசக்கனிமார் - முலையையுடைய பெண்ணினது மார்பான நெஞ்சுக்கு மத்தியில் செவ்வையாய் நிதானித்துப் பார்த்து, நேர் - அவ்வளவு காரியத்தை மனது வைத்துப் பிரயாசைப்பட்டுச் செய்.

## சுக்கிலத் தம்பனம்

*சித்தசன மூலந் தினமுமுண வத்துதெரி*
*சித்தசன மூலந் தெரிசிப்பார் - சித்தசனங்*
*காட்டுமாங் காய்வித்தைக் கண்டுநெய்யொ டுண்டுணாக்*
*காட்டுமாங் காய்வித்தை காண்.* 60

(சொ. பொ.) சிறப்பித்துச்சொல்லப்பட்ட சுக்கிலத் தம்பன வினோதவேடிக்கையைக் கூறுகிறதெப்படி யென்றால் :- சித்தசனம் பதினெண்சித்தாதிகள் முதலான சித்த புருஷாளிலே பலப்பட்டு வசியம், மோகனம், தம்பனம், பேதனம், ஆகருடணம், வித்து வேஷணம், உச்சாடனம், மாரணமென்று சொல்லப்பட்ட அறுபத்துநான்கு வித்தையும் பண்ணப்பட்ட பேர்கள், மூலம் - மூலிகையான மருந்தின் கற்பத்தை, தினமும் - நித்தியமும், உண் - புசிக்கவே அதனாலே மேலான, வத்து தெரிசித்து - விண்ணுயர் பரமானசச்சிதானந்த மெய்ப் பரமபத நன்மையை நன்றாயறிந்து, சித்தசனம் மூலம் தெரிசிப்பார் - அன்பு செலுத்துகின்ற யோகிகள் விழுமிய மகிமையினாலே வரா நின்ற மகத்துவங்களெல்லாம் விளங்கப்பட்ட எண்வகைப்பட்ட அஷ்ட கருமங்களெல்லாம் பண்பாகச் செய்யாநின்ற விதங்களிலே வரன் முறையாகப் பண்ணப்பட்ட சுக்கிலத் தம்பனத்தைச்செய்து கொள்ள வேண்டிய முறைமைப்படிக் கெப்படிப் பண்ணவேண்டியதென்றால், சித்தசனம் - மன்மதபீடிகையாகச் சொல்லப்பட்டகோசகுய்ய வுச்ச நீசங்களில்லாமறப்படிக்கு வரன்முறையாய்ச் செய்யாநின்ற சுரதாரம் பந்தெடுத்துச் சுரதாந்த வரைக்குஞ் சரசசல்லாபத்தினது சமாதி வரத்தக்கதாகப் பண்ணிக்கொள்ள வேண்டியது.

காட்டு மாங்காய் வித்தைக்கண்டு - அதற்காகச் சொல்லப்பட்ட முறைமையான முறைப்படி காட்டு மாங்காய்ப்பழத்தினது விதையாகிய பருப்பும் முருங்கைப் பருப்பும் முந்திரிகைப் பருப்பும் வாதுமைப் பருப்பும் விரிசையென்கிற நறுளிப்பழத்தின் கொட்டையான பருப்பும் கோதுமையரிசியும் இந்த ஆறுவகையும் வகையொன்றுக்கு

ஒன்றுபடத்தக்கதாய் ஒரு பல மொருபலமாகக் கூட்டிக்கொண்டு ஆகக்கூடின ஆறுபலத்துக்கு மிரட்டிப்புப் பன்னிரண்டு பலம் அத்திப் பால்விட்டு ஆறு நாளிடை விடாமலரைத்து மேலே ஆறு நாள் வில்லை தட்டி நிழலிலே யுலர்த்தி மேல் நின்ற மருந்துக்குச் சரியாக நெய்யும் சர்க்கரையும் விட்டிழைத்து வைத்துக்கொண்டு அந்த மருந்தை ஒரு மண்டலம் நாற்பது நாள் வரைக்கும் பங்கிட்டுக்கொண்டு பங்கீடாயுண்ண வேண்டியது. பத்தியம், புளியையும் பெண் போகத்தையும் தள்ளிவைத்து மேலே கூட்டிக்கொண்டால் நன்மை பலப்பட்டு இந்திரியம் பிசினைப்போலே இறுகிப்போய்விடும்; பாலெப்போதும் பானம் பண்ணிக்கொள்ளவேண்டியது. மேலே யொரு மண்டலம் வரைக்கு மறுபத்தியமும் பெண், புளி, எள்ளெண்ணெய், எலுமிச்சம் பழரசம், ஊறுகாய், தயிர், மோர், நாவல் பழம், மாம்பழம், நாரத்தைப்பழம், இலந்தைப்பழம் இவைகளெல்லாம் நீக்கி மாதுளம்பழம், விளாம்பழம், வில்வப்பழம்,அன்னாசிப்பழம், பலாப்பழம், வாழைப்பழம், திராட்சைப்பழம், உருளைக்கிழங்கு, வள்ளிக்கிழங்கு இவைகளையெல்லாம் புசித்துக்கொண்டு வந்தால் வன்மையை மிகவும் கொடுக்கும். வீரிய புஷ்டி அதிகப்படும், மன்மத கேளிக்கையில் அதிக வேகத்தைத் தருமாதலான் இந்த மருந்துக்குப் பேர் "காமேசுரக்கற்பாவிழ்த" மென்று நிலைமையான பெயரைக் காண்பிக்கும்.

## சத்தப்பரிட்சை (ஒலித்தேர்வு)

*வீணையிசை நத்தோசை வேயோசை நாயோசை*
*வீணையிசை நத்தோசை வெற்போசை - வீணையிசை*
*தாரையியம் பேரியியந் தப்பாதொன் றாதிலக்கந்*
*தாரையியம் பேர்கனலவீ தான்.* 6

(சொ. பொ.) சத்தப்பரிட்சையின திலக்கணத்தைக் கூறுகின்றா ரெவ்வாறென்றால் :- வாகடசாத்திரிகனான வயித்தியனானவன் பிணியாளனைப்பார்த்து நிதானப்படுத்த வேண்டிய காரியத்திலே

தத்துவசாத்திரப்படியே கிரமமாகச் சொல்லப்பட்ட தெப்படி என்றால் நோயாளி பேசுகிற பேச்சினிடத்திலே, வீணையிசை - தம்புரா, கின்னரி, வீணையினுட தந்திநாதத்தைப்போலே சத்திக்கிறதும், நத்தோசை - சங்கினுடைய சத்தத்தைப்போலே கீச்சென்று சத்திக்கிறதும், வேயோசை - மூங்கிற் குழலான புல்லாங்குழலிசை போல் சன்னமாய்ச் சத்திக்கிறதும், நாயோசை - சொக்கட்டானாடுகிறபோது பாச்சிகையை உருட்டப்பட்ட உழக்கின்கண்ணிலே உருளுகிறபோது அந்தப் பாச்சிகை கடமுட வென்கிற சத்தம் போலே சத்திக்கிறதும், வீணையிசை நத்தோசை - அப்பிரயோசனமான பிரயோசன மில்லாத காரியத்தைக் கூட்டுவிக்கப்பட்டதான பொல்லாத பயனில் முயற்சியான வீண் காரியத்தை உத்தேசித்துத் துர்க்காலத்தில் என்னத்துக்கென்று ஈச்சுக்கொட்டுகிறதான நாவும் பல்லும் நுனிகளும் படத்தக்கதாகச் சத்திக்கிற சத்தமும், வெற்போசை - பெரிய மலையடியவாரத்திலிருந்து கூவினால் சத்தம் பிரதியா யெப்படிச் சத்திக்குமோ அப்படிச் சத்திக்கிற சத்தமும், வீணையிசை - கீழ்ப்பட்டிறக்கமாகத் தொனி உள்ளே வாங்கிப்போகப்பட்டதான கிணத்திலே பேசுகிறாப்போலே சத்திக்கிற ஈனச் சத்தமும், தாரையியம் - பெரிய துத்தாரியாய் நீண்டதான பூரிகை யினது பேரான எக்காள வாத்தியத்தினது சத்தமும், பேரியியம் - பேரிகையினது வாத்தியத்தினது முழக்கத்தைப்போலே சத்திக்கிற முழக்கமும் பரிவாகச்சத்திக்கிற சத்தமும், தப்பாது - இப்படிச் சொல்லில் இவைகளிலே ஒன்றாகிலும் வித்தியாசப்பட்டுப் போகாத படிக்கு எல்லாம் மெய்யாய் நடந்துவரத்தானே.

ஒன்றாதி - தொகையிலே யொன்று முதலாகச் சொல்லப்பட்ட, லக்கம் - கணிதப்படிக்குக் கூட்டுகிற கணக்கிலே ஒன்று, பத்து, நூறு, ஆயிரம், இரண்டாயிரம், மூவாயிரம், நாலாயிரம், ஐயாயிரம், ஆறாயிரம், இப்படி வரப்பட்ட சத்தங்களுக்கும் கணக்குக்கும் பார்க்குமிடத்தில் ஒன்பதுக்கும் ஒன்பது சரி, தாரையியம் பேர்கனல்வீ தான் - வயித்தியம் பண்ணப்பட்ட நீ பார்த்து துணிந்து மரணக்குறிப்பைச் செம்மையாய்த் துணிந்து சொல்லவேண்டிய தெப்படியென்றால் சத்தப்பரீட்சையை நன்றாய்க் கியாபகத்திலே நிதானத்தை வைத்து வீணையிசைக்கு ஒரு

நாழிகையிலே இறுதிவரு மென்றும், நத்தோசைக்குப் பத்து நாழிகையிலே இறுதிவரு மென்றும், வேயோசைக்கு நூறு நாழிகையிலே இறுதிவருமென்றும், நாயோசைக்கு ஆயிரம் நாழிகையிலே இறுதிவரு மென்றும், வீணையிசைந்தோசைக்கு இரண்டாயிரம் நாழிகையிலே இறுதிவருமென்றும், வெற்போசைக்கு மூவாயிரம் நாழிகையிலே இறுதிவருமென்றும்,வீணையிசைக்கு நாலாயிரம் நாழிகையிலே இறுதிவருமென்றும், தாரை யியத்துக்கு ஐயாயிரம் நாழிகையிலே இறுதிவரு மென்றும் பேரியியத்துக்கு ஆறாயிரம் நாழிகையிலே இறுதிவரு மென்றும் பார்த்துச் சொல்ல வேண்டியது. இன்னம் வெளிப்படையாகப் பேசுவதெப்படியென்றால் ஒரு நாழிகையென்றும், ஒன்றரைச் சாமமென்றும், மூன்றேமுக்காலரை நாளாகியதான ஒன்றே முக்காலே யரைக்கால் நாளென்றும், பதினெட்டேமுக்கால் நாளென்றும், முப்பத்தேழரை நாளென்றும் ஐம்பத்தாறே கால் நாளென்றும், எழுபத்தைந்து நாளென்றும், தொண்ணூற்று மூன்றே முக்கால் நாளென்றும், நூற்றுப்பன்னிரண்டரை நாளென்றும் இப்படியாகப் பார்த்துத் துணிந்து சொல்ல வேண்டியது.

## பரிசப் பரிட்சை (தொடு உணர்வுத் தேர்வு)

*இடங்கரா மைமயிலை யிந்துமத்தி வெம்மை*
*இடங்கரா மைமரங்க லித்தை - இடங்காரம்*
*நாள முளியரமு நாலேழெட் டொன்பானை*
*நாள முளியரமா நாடு.* 62

(சொ. பொ.) பரிசப் பரிட்சையாவ தெவ்வாறென்று வினவுவார்க்கு விடைகூறுகின்றார்; எப்படி யென்றால் :- நோயாளியையாவது நோயின்றி இருப்பவனையாவது பண்டிதன் சரீரத்தைத் தொட்டுப்பார்க்கிறபோது அதிகச் சாக்கிரதையாய்ப் பார்த்தாலப்போது இருக்கப்பட்ட குணங்களைப் பார்த்துப் பிரித்துச்சொல்ல வேண்டிய தெவ்வாறென்று மயங்காம லிறுதி சொல்வ தெப்படியெனில், இடங்கர் - முதலையினுடைய முதுகைப்போலே

யிருக்குமானால், மூ நால் - பன்னிரண்டு நாளையிலே இறுதி வருமென்றும் ஆமை - ஆமையினது முதுகுபோலே கடினமும் வறட்சியுமாயிருக்குமே யானால், ஏழெட்டு - அம்பத்தாறு நாளையிலே இறுதி வருமென்றும், மயிலை - மீனினது வாற்புறத்தைப் போலே சுரசுரப்பாயிருக்குமேயானால், ஒன்பானை - நாற்பத்தைந்தான ஒன்றரை மாதக்குறிப்பான நாற்பத்தைந்து நாளையிலே இறுதி வருமென்றும் (பின்னும் வேறு) இந்து - சீதளமான குளிர்ச்சி அதிகமாயிருக்குமேயானால், முன்நால் - பன்னிரண்டு சாமத்திலே இறுதி வருமென்றும், மத்தி - நடுமையான வெப்பமும் சீதளமும் தொந்தித் ததிக வேகத்துடன் இருக்குமேயானால் அம்பத்தாறு சாமத்திலே இறுதிவரும்.

வெம்மை - வெப்பமான அதிக உட்டண காங்கையா யிருக்குமேயானால், நாற்பத்தைந்து சாமத்திலே இறுதிவருவது நிசமென்றும், இடம் - பிரதானமான தானத்திலே யுக்தியாய்ப் பார்க்குமிடத்திலே, கராமை - ஆனையினுடைய தோலைப்போலே மெத்த வன்மையா யிருந்தால் பன்னிரண்டு நாழிகையிலே இறுதி வருமென்றும், மரம் - மரத்தைப்போலே வன்மையா யிருக்குமேயானால் அம்பத்தாறு நாழிகையிலே இறுதிவரு மென்றும், கல் - கல்லைப்போலே வன்மையா யிருக்குமேயானால் நாற்பத்தைந்து நாழிகையிலே இறுதிவரு மென்றும், இடங்கராம் - பண்டிதமல்லாத துஷ்டத்தனமான வார்த்தையான தில்லாமலிருக்கிறபடியான, நாளம் - தாமரைக்கொடியின் முள்ளைப்போலே கண்டக முள்ளை நிகராய் இருக்குமேயானால் பன்னிரண்டு விநாடியிலே இறுதி வருமென்றும், உளி - தச்சுளியைப் போலே கருக்கின கூர்மையாயிருக்குமேயானால் அம்பத்தாறு விநாடியிலே இறுதி வருமென்றும், அரம் - அரத்தைப்போலே ஒருவகையான கருக்குங்கூருமாயிருக்குமேயானால் நாற்பத்தைந்து விநாடியிலே இறுதி வருமென்றும் இப்படியே முறையாக, மூநால் - பன்னிரண்டு, ஏழெட்டு - அம்பத்தாறு, ஒன்பானை - நாற்பத்தைந்து, நாள் முளியரமாம் நாடு - கால முடிவுகளை நிசமாக நாள் முதலால் உன்னி நிதானமாகச் சொல்.

## ரூபப் பரிட்சை (வடிவத் தேர்வு)

*என்றுமதி செவ்வா யிரணியன்சுங் கன்காரி*
*என்றுமதி செவ்வா யிவையோடுமை - என்றுமதி*
*யஞ்சுமா தக்கணமேல் ஆறுதிங்க ளாமினுக்கே*
*யஞ்சுமா தக்கணமே யாம். 63*

(சொ. பொ.) ரூபப்பரிட்சை யென்று சொல்லப்பட்ட உருவினுடைய பரிட்சை பார்க்கப்பட்ட லட்சணத்தைக் கூறுகின்ற தெப்படியென்றால் வரலாறு:- என்று - நோயாளியாவது ஏதிலனாவது பண்டிதனாலே ரூபத்தைப் பார்த்துச் சொல்லுங்காலத்திலே நல்ல நிதானத்தோடும் பருவம் அறிந்து அனுமான வித்தியாச மொன்று மில்லாமற்படிக்குச் சொல்வது சூரியனைப் போலே நல்ல சிவந்த வர்ணமும், மினுக்குங் காணுமேயானால் இரண்டாமாதத்திலே இறுதிவருமென்றும், மதி - சந்திரனைப்போலே வெள்ளைவர்ணமும் மினுக்குமாகக் காணுமேயானால் மூன்று மாதத்திலே இறுதி வருமென்றும், செவ்வாய் - செவ்வாயென்கிற அங்காரக பகவானைப் போன்ற சிவந்த நெருப்பு வர்ணமும் மினுக்கு மிருக்குமேயானால் நான்கு மாதத்தி லிறுதிவரு மென்றும், இரணியன் - வியாழபகவானான பிரகஸ்பதி போலே பொன்னிறமென்றும் மஞ்சள் வர்ணமும் மினுக்கு மிருக்குமேயானால் ஐந்து மாதத்திலே இறுதிவரு மென்றும், சுங்கன் - வெள்ளியாகிய சுக்கிர பகவானைப்போலே சுத்த வெள்ளைவர்ணமும் மினுக்கு மிருக்குமேயானால் ஆறு மாதத்திலே இறுதிவருமென்றும், காரி - சனீச்சுர பகவானைப்போலே கறுத்தவர்ணமும் மினுக்கு மிருக்குமேயானால் ஏழுமாதத்தில் இறுதி வரும்.

என்றுமதி - இப்படியாகத்தானே நன்றா யுன்மனத்திலே திடமாக நினைப்பாயாக, செவ்வாய் - செம்மையாய்ப் பிசகு வராமற்படிக்கு, இவையோடு - இப்போது சொல்லிக்கொண்டுவந்தோமே இவைகளுடனே கூடத்தானே, உமை - பரமேஸ்வரியைப் போலே கறுத்த பச்சை வர்ணமான நீலச் சாமள வர்ணத்துடனே கூட மினுக்கு

மிருக்குமேயானால் எட்டுமாசத்திலே இறுதி வருமென்றும், என் - என்னுடைய புத்தியாலோசனைக் கடக்கமாகச் சொல்லுகிறேன், துமதி - இரண்டுமாதம், அஞ்சுமாதக் கணமேலாறு திங்கள் - அஞ்சுமாத முதல் கூடுகின்ற ஆறுமாதமும் இவைகளெல்லாம் மேலே வந்ததே அர்த்தமாம், ஆமினுக்கே - இப்படி முன்னே சொன்னவர்ணங்களொன்றுமில்லாமல் வேறே மினுக்கு மாத்திரம் வந்து நேரிடுமே யாமாகில், அஞ்சுமா - அப்போது நோயாளியைப் பற்றின வியாதியானது பண்டிதம் பார்க்கப்பட்ட வயித்தியனுடைய மருந்துக்குப் பயப்படுமா? பயப்படுகிறதில்லை, தக்கணமேயாம் - அப்போது தானே அந்த நிமிஷத்திலே அவனுக்கு இறுதியாகிய மரணத்தைக் கொடுக்கும்.

## இரசப் பரிட்சை (சுவைத் தேர்வு)

*கைப்பினிமை யாம்பிரமை காரலுவர் காழ்ப்பாறுங்*
*கைப்பினிமை யாம்பிரமை காண்மாறிற் - கைப்பினிமை*
*வாரமதி பக்கமின்றி வைக றிதியிருத்தை*
*வாரமதி பக்கமாள் வார்.* 64

(சொ. பொ.) இரசப்பரிட்சையாகிற நாவினா லறியப்பட்ட ருசி வர்க்கங்களான சட்சுவையினாலே அறிந்துகொள்ள வேண்டிய பரிட்சையைச் சொல்லுகிறா ரெப்படி யென்றால் :- கைப்பு - கசக்க வேண்டிய வஸ்துவான கசக்கிற பண்டத்தைப்புசித்தால் கசவாமல் வித்தியாசப்பட்டு மற்றபண்டங்கள் எதைப்புசித்தாலும் கசக்குமே யானால், வாரம் - ஏழுநாளையிலே இறுதிவருமென்றும், இனிமை - தித்திக்கவேண்டிய வஸ்துவான தித்திக்கிற பண்டத்தைப் புசித்தால் தித்திக்காமல் வித்தியாசப்பட்டு மற்றபட்சணங்கள் எதைப் புசித்தாலும் தித்திக்குமேயானால், மதி - ஒரு மாதத்திலே இறுதி வருமென்றும், ஆம்பிரமை - புளிக்க வேண்டிய வஸ்துவான புளிக்கின்ற பண்டத்தைப் புசித்தால் புளிக்காமல், மற்றப் பண்டங்கள் எதைப்புசித்தாலும் புளிக்குமேயானால், பக்கம் - பதினைந்து நாளையிலே

இறுதிவருமென்றும், காரல் - காரவேண்டிய வஸ்துவான காருகிற பண்டத்தைப் புசித்தால் காராமல் மற்றப்பண்டங்கள் எதைப் புசித்தாலும் காருமேயானால், இன்றிவைகல் - பின்னும் ஒரு பகலாகிய பாதிநாளையிலிறுதிவரும்.

உவர் - உப்புக்கரிக்க வேண்டிய வஸ்துவான உப்புக்கரிக்கிற பண்டத்தைப் புசித்தாலும் உப்புக்கரியாமல் மற்றபண்டங்களெதைப் புசித்தாலும் உப்புக்கரிக்குமேயானால், திதி - ஒருநாளையிலே இறுதிவருமென்றும், காழ்ப்பாறும் - ஆறென்று சொல்லப்பட்டதி லொன்றான துவர்த்தலான துவராயிருக்கவேண்டிய வஸ்துவைப் புசித்தால் துவரில்லாமல் மற்றபண்டங்களெதைப் புசித்தாலும் துவராயிருக்குமே யானால், இருத்தை - ஒரு நாழிகையிலே இறுதிவருமென்றும், கைப்பினிமையாம் பிரமைகாண்மாறில் - ஒழுங்குபட முன்னேசொன்ன குணங்களுக்கெல்லாம் பிரமையான காலமாக வித்தியாசப்பட்ட விவரமுங் கூடத்தானேயிருக்கும். அதையறிந்த பத்திரமாய்ப் பார்த்தாலுடனே நன்றா யறியலாம். கைப்பினிமை - அது மெத்த நேரமாயிராது ஒரு நிமிஷங் கண்ணிமை, கைநொடியிதுவே பிரமாணம், வாரமதி பக்கமாள்வார் - நோயாளியை வந்து பற்றிக்கொண்ட வியாதியாகிய காலன் உயிரை வாங்கிக்கொண்டு போக நினைத்திருக்கிற காலத்தை இப்படி யறிய வேண்டியது. பண்டிதனுக்கியல்பான சகல குண பண்டிதங்க ளெல்லாவற்றிலும் அதிகமான சாமர்த்தியமான குணப்பிரதாபமென்று வாகட நூல்களெல்லாம் எடுத்துமுறையிடு மாதலானிதை யறிவதே பெருமையான கனம்.

## கந்தப் பரிட்சை (நாற்றத் தேர்வு)

*ஆம்பல் கணிதாழை யார்மதலை சாதிமரை*
*யாம்பல் கணிகடிகை யாமிதிதி - ஆம்பகணி*
*திங்க ளிருதயனஞ் செப்புமர ணக்குறிப்பு*
*திங்க ளிருதயன்றான் சேர்.* 65

(சொ. பொ.) கந்தப்பரிட்சை யென்கிற வாசனை யென்கிறதை உணரும் மூக்கினது பரிட்சையை உபாயமாய்க் கேட்டறிதல் மேலே சொன்ன ரசப்பரிட்சையு மிப்படியே முன்னே சொன்ன சத்த, பரிச, ரூபம் மூன்றும் வேறேதானே யறிதல் ரச கந்த மிரண்டுங் கேட்டறிதலாகையால் இவ்விரண்டும் அருமை :- ஆம்பல் - வியாதியத்தனான நோயாளியைக் கேட்டுப் பண்டிதனான வயித்தியன் கேட்டறிந்து நிதானித்துக்கொண்டதற்கு முடிவு சொல்வ தெப்படி யென்றால் மூங்கிற்பூ முதல் சருவாங்கமும் எப்படி வாசிக்குமோ அப்படிக் கொத்த வாசனை யெல்லாப் புஷ்பமும் வாசித்து அது மாத்திரம் வேறே வாசனையாயிருக்குமேயானால், கணி - ஏழு கணமான ஏழு விநாடிக்குள் மரணம் வருமென்றும், கணி - வேங்கைப் புஷ்பம் முதல் சர்வாங்கமும் எப்படி வாசிக்குமோ அப்படிக்கொத்த வாசனை எல்லாப்புட்பமும் வாசித்து அது மாத்திரம் வேறே வாசனையா யிருக்குமேயானால், கடிகை - ஏழு நாழிகைக்குள்ளே மரணம் வருமென்றும், தாழை - கேதகையென்கிற தாழம்பூவினது புஷ்பமுதல் சர்வாங்கமும் எப்படி வாசிக்குமோ அப்படிக்கொத்த வாசனையெல்லாப் புட்பமும் வாசித்து அது மாத்திரம் வேறே வாசனையாயிருக்குமேயானால் யாமி - ஏழுசாமத்துக்குள்ளே மரணம் வருமென்றும், ஆர் - அத்திப்பூ முதல் சர்வாங்கமும் எப்படி வாசிக்குமோ அப்படிக்கொத்த வாசனை யெல்லாப் புட்பமும் வாசித்து அது மாத்திரம் வேறே வாசனையா யிருக்குமேயானால், திதி - ஏழு நாளையில் மரணம் வருமென்றும், மதலை - கொன்றைப்பூ முதல் சர்வாங்கமும் எப்படி வாசிக்குமோ அப்படிக்கொத்த வாசனை எல்லாப் புட்பமும் வாசித்து அது மாத்திரம் வேறே வாசனையா யிருக்குமேயானால், ஆம்பல் கணி திங்கள் - வெகுவாகக் கூட்டிச்சொல்லப்பட்ட ஏழு மாதத்திற்குள்ளே மரணம் வருமென்றும், சாதி - சிறு சண்பகப்பூ முதல் சர்வாங்கமு மெப்படி வாசிக்குமோ அப்படிக்கொத்த வாசனை யெல்லாப் புட்பமும் வாசித்து அது மாத்திரம் வேறே வாசனையா யிருக்குமேயானால், இருது - பதினாலுமாதத்திலே மரணம் வருமென்றும், மரை - மராமரத்தினது பூ முதல் சர்வாங்கமு மெப்படி வாசிக்குமோ அப்படிக் கொத்த வாசமான வாசனையா யிருக்குமேயானால், அயனம் - மூன்று வருஷத்திலே மரணம்

வருமென்றும், செப்பு மரணக்குறிப்பு - சொல்லப்பட்ட மார்க்கத்தினது லட்சணத்தைக் கேட்ட பேர்களுடைய மனம் சந்தோஷப்படத் தக்கதாய் அறிந்து பார்த்துத் துணிவுடனே சொல்லி மேலே நீ யெப்படி இருப்பையென்றால், திங்கள் - சந்திரனைப்போலே சர்வாங்க உவமானத்துடனே, இரு - உறுதியான பௌத்திர பரிசுத்தத்துடனே இருப்பாயாக, தயன் - கிருபையாளன், தாள் - பாதார விந்தத்தை மனத்திலே, சேர் - தியானம் பண்ணிக்கொள்.

## மலப் பரிட்சை

*சாகப் புழுக்கை தனிலு முறுகுமெனிற்*
*சாகப் புழுக்கையறி சற்றுநன் று - சாகப்பு*
*செம்பாக நன்மை திடமா மதிலுமிகச்*
*செம்பாக நன்மையென் று தேர். 66*

(சொ. பொ.) மலப் பரிட்சை இலக்கணத்தை அறியுமிடத்திலே அதனது விவரத்தைச் சொல்லுகிறார் :- சாகப் புழுக்கை தனிலு முறுகுமெனில் - வெள்ளாட்டுப் புழுக்கையைப் பார்க்கிலும் உலர்ந்து வறண்டு போய்விடுமேயானால், சாகப்புழுக்கையறி - மரணத்தை யடைதலுக்கு அவன் கொண்டு போகப்பட்ட எமபடாளுக்கு அடிமைப்பட்ட வெள்ளாட்டியைப் போலே யென்கிறதற்குச் சம்சயமில்லையென்கிறதை நிசமாகப் பார்த்துக்கொள்ள வேண்டியது, சற்று - கொஞ்சம் நன்மையாயிருக்கும் பருவ பக்குவமான குழம்பு போன்றதா யிருக்குமேயானால், நன்று - மெத்த நன்மையாயிருக்குமெப்படியென்றால், சாக அப்பு - போதுமான நீர்த்தன்மை யுடைத்தாய், செம்பாக நன்மை - மெத்தக் கடினமுமில்லாமல் மெத்தத் தளர்ச்சியுமில்லாமல் ஒருவிதமா யிருக்கு மேயானால் அதுவே, திடமாமதிலும் - வர்ணத்திலே சொல்லுகிறோம், மிக வெண்மையா யொருமிக்கவு மில்லாமலிருந்தால் மெத்தநல்லது, செம்பாகம் - செம்பினது வர்ணமாகச் சொல்லப்பட்ட சிவப்பு வண்ண மத்திய மாயிருக்கும்; கறுப்பு

வண்ணம் ஒருக்காலும் ஆகாது, நன்மையென்றுதேர் - நல்லது எது வென்று ஆராய்ந்து கொள்க.

## மூத்திரப் பரிட்சை

*மாணிக்கம் பால்பிரச மஞ்சளிது நாற்பிர*
*மாணிக்கம் பால்வரிசை மாறாநீர் - மாணிக்கம்*
*உத்தம மாதி யொருநாலு மத்தமுனே*
*யுத்தம மாதிமதி யுன்.* எ

(சொ. பொ.) மூத்திரப்பரிட்சையென்று சொல்லப்பட்ட மூத்திரத்தினது வர்ணபேதங்களை யறிவதெப்படியென்றால் :- மாணிக்கம் - மாணிக்கத்தைப்போலே சுத்தச் சிவப்பாகச் சிவந்த வர்ணமாயிருக்கிறது அசாத்தியம், பொல்லாங்கு மெத்தவும் பொல்லாப்பான அதமாதமம் எப்படியும் மரணம் வருமாதலாற் கெடுதியாம், பால் - வெண்மையான வர்ணமாகிய பாலைப் போலே யிருக்குமேயாகி லதுவும் பொல்லாங்கேயாம். அசாத்தியத்திலிரண்டாவது மரணக்குறிப்புக்கு நிகரானதே தவிர வேறேயல்ல வென்பதாமிது. அதமமாதலாலதுவும் அசாத்தியமே, பிரசம் - தேனைப் போலே வர்ணம் பிரியாமலிருக்குமேயாகில் அது சாத்தியத்திலேசேர்ந்த தரமானபோதைக்கும் பிரயோசனப்பட்டு வருகிறதற்கு நாள்பிடிக்கும், மத்திபம் இரண்டாம் பட்சமென்பதாம், மஞ்சள் - வர்ணமான பொன்மைநிறமா யிருக்குமேயானால் அது சாத்தியமே வேறன்று நன்றென்பதாம், பிரமாணிக்கம் - மெய்யா யுண்மையா யறிந்து கொள்ள வேண்டிய தெப்படியென்றால், பால்வரிசை மாறாமல் - சொன்ன பங்கு விவரங்க ளேற்பாடாகத் தானே, நீர்மாணிக்கம் - நீரென்று சொல்லப்பட்ட கோசத்தினது வழியாறான சலபாதைவாட்டப் பெருக்கும், உத்தம மாதியொருநாலும் - உத்தமமென்றும் அதமமென்றும் அதமாதமமென்றும் பிரித்துச்சொல்லப்பட்ட, அந்த முனே - கடைசியே முதலாகத் தானே வைத்துக்கொள்ள வேண்டிய தென்பதாம், உத்தமமாதி - நீ யுத்தம்

பண்ணப்பட்ட மமதையாளனைப் போலிருப்பாயாக வென்பதாம், மதியுன் - உன்னுடைய அந்தக்கரணத்திலே அறிவை வைத்துப் பார்ப்பாய்

## எச்சில் பரிட்சை

*எச்சிற் பரிவா யிளநீர்பால் வெண்ணெயளை*
*எச்சிற் பரிவா யிலகுநுரை - எச்சிற்*
*களியடைமா நன்றுமுதற் கண்ணான்கு முன்னிக்*
*களியடைமா மேவுபிட கா.* 68

(சொ. பொ.) எச்சில் பரிட்சையை ஆராய்ந்து பார்க்குமிடத்திலே நல்ல கியாபகத்துடனே யறிவினாலே யறிந்து சொல்ல வேண்டியதெப்படி யென்று கூறுகின்றது :- எச்சில் - எச்சிலென்று சொல்லப்பட்ட நோயாளி வாயிலிருந்து வரப்பட்டதான உமிழ்நீரை, பரிவாய் - வயித்தி யனானவன் பார்க்கிறபோது, இளநீர் - இளநீரைப் போலே யிருக்குமேயானாலது முதன்மையான உத்தமமென்றும், பால் - பாலைப்போலே சற்றே குழப்பமும் வெண்மையுமா யிருக்குமேயானா லது இரண்டாவ துத்தமமென்றும், வெண்ணெய் - வெண்ணெயைப்போலே யழுந்தி வெண்மையுமா யிருக்குமேயானா லதுமத்திமத்திலே முதன்மையென்றும், அளை - தயிரைப்போலே யழுத்தமும் வெண்மையுமாயிருக்குமே யானாலது மத்திமமென்று மிரண்டாவதானதென்றும், எச்சிற்பரிவாயிலகு நுரை - மெத்தக்கடினமான குதிரையின் வாயிலேயிருந்து புறப்பட்டு வெளிக்காணப்பட்ட நுரையைப் போலே யிருக்குமேயானாலது அதமத்திலே முதன்மையாமென்றும், எச்சில்கள் - அபுரூபமல்லா மலிருக்கப்பட்ட களியைப்போலே யிருக்குமேயானாலது அதமத்திலே இரண்டாவதென்றும், அடை - ஒட்டிலே சுடப்பட்ட ஓட்டடையைப் போலே யிருக்குமேயானால் அதமா அதமத்திலே முதன்மையாய் அசாத்திய அனுமானத்தைக் கொடுக்கப்பட்டதென்றும், மா - மாவைப் போலே அத்தனை வறட்சியா யிருக்குமேயானாலது அதமாதம மரணத்தை மெத்தவும் சமீபத்திலே கொடுக்குமென்றும், நன்று

முதற்கண்ணான்கு மன்னி - உததமமுதலாகவும் மத்திம மிரண்டாவதாகவும், அதமம் மூன்றாவதாகவும், அதமாதமம் நான்காவதாகவும், அதிலே முதற்றர மிரண்டாந்தரமென்றும் விவரமாகச் சொல்லப்பட்டதாகிய நாலிரண்டெட்டு விதமும் பண்டிதம் பார்க்கப் பட்டவன் மனத்திலே யோசனை பண்ணிக்கொண்டு மெத்தவு மதிமந்திரியாகி யிருக்கவேண்டியது. நீயு மப்படியே வயித்திய சேஷ்ட மானவனே, களியடைமாமேவுபிடகா - சந்துஷ்டியை அடைந்திருக்க வேண்டியது மிகுந்த லட்சுமீகரத்தையுண்டான வயித்தியனேயென்று மகா நன்மையுடனே சொல்லுகிறார்.

## இந்திரியப் பரிட்சை

*ஐயமளை பால்மோர்தே னாச்சியங்கள் கம்மிவையை*
*யையமளை யாதறிந்து கொள்ளுவா - யையமளை*
*யுத்தமத்தை முன்னே ருணரிந்திரி யப்பரிட்சை*
*யுத்தமத்தை நூலதரை யோர்.* 69

(சொ. பொ.) இந்திரியப் பரிட்சையென்று சொல்லப்பட்ட வீரிய ரேதசாகிய சுக்கிலத்தினது பக்குவமான நிலையைப் பரிட்சையைப்பார்த்து ஆயுள்வேத மென்கிற வாகட சாத்திரப்படியே கூற வேண்டுமென்று கூறுகிறார். எப்படியென்றால் :- (வரலாறு) ஐயம் - வெண்வடிவான வெண்மை ரூபமாகிய வெண்ணெயைப்போலே யிருக்குமேயானா லது உத்தமோத்தமமான முதன்மையாகிய உத்தம மென்றும், அளை - தயிர் வெண்மையா யெப்படியிருக்குமோ அப்படி யிருக்குமேயானா லது முன்னே உரைத்த உத்தமத்திலிரண்டாவதான உத்தமமென்றும், பால் - பாலைப்போலே நிறமும் வன்மையமுத்தமும் பெற்றிருக்குமேயானாலது மத்திமத்திலே முதன்மையான முதல்தரமென்றும், மோர் - மோரைப்போலே எவ்வளவு வன்மையழுத்த முண்டாயிருக்குமோ அப்படி உண்டாயிருக்குமேயானா லது மத்திமத்திலே இரண்டாவ தென்றும், தேன் - தேனைப்போலே ஏகதேச உருவகமல்லாமல் எப்படியு

மிருக்குமேயானாலது அதமத்திலே முதன்மையென்று சொல்லப்பட்டதான முதல் தரமென்றும், ஆச்சியம் - நெய்யெப்படி உவமானிக்கத்தக்கதா யிருக்குமோ அப்படியே நிகரா யிருக்குமேயானா லது அதமத்திலே இரண்டாந்தரமென்று சொல்லப்பட்ட நன்மையல்லாததென்றும், கள் - கள்ளைப்போலேதானே தத்சுரூபத்துடனே இருக்குமேயானாலது அதமாதமத்தில் முதன்மையான மிகுந்த பொல்லாங்கென்றும் மேலே அந்தக் குணஞ் சாத்தியப்படுகிறது அருமைப் படமாட்டாது. இதற்கு முன்னே சொன்னது இப்படியே யானபோதைக்கும் பண்டித சாமர்த்தியமும் அவிழ்த சாமர்த்தியமும் இருக்கினுந் தெய்வீகம் வேணுமென்பதுங் கூறப்படும்.

கம் - தண்ணீரைப்போலே சுத்தமாய் நீத்துப் பிரயோசனமில்லாமல் இருக்குமேயானாலது அதமாத மத்திலேயும் அதமாதமம், மேலேயொன்றும் செய்துப் பார்க்கவேண்டியதில்லை. அவனை உயிருடனே கூடியிருக்கிறவனான போதைக்கும் பிணமென்றே சொல்லவேண்டிய தேனென்றால், வாகட சாத்திரப்படிக்கு லட்சணப்படி சொல்ல வேண்டிய ஆகம அளவைப்படி அல்லாமற் போனபோதைக்கும் பரவை வழக்கமான உலகமுறைப்படி காட்சியளவைப் பிரமாணமாக திஷ்டாந்திரப்படி பார்த்த போதைக்கும் ஒருவனுக்குப் பிராணன் விடுகிறபோது தாதுக்களான இரத்த முதலானதும் நீத்துத் தண்ணீரைப்போலேபோம். அப்படிப்போனால் மேலே நம்ப வேண்டிய தில்லையென்றும், இவையை - இவைகளையெல்லாம் பார்த்து யோசனை ஆலோசனையாய்ப் பார்த்துக்கொண்டு, ஐயம் - அனுமானமானது மெத்த மெத்தவும், அளையாமல் - உழைத்துக்கொண்டதனாலே புத்தியானது கலங்கி மனம் பிரமித்து மயங்கிப்போகாமற்படிக்கு, அறிந்து கொள்ளுவாய் - புத்திமிகுதியினாலே நீ நன்றாய்த் தானே இயலான உன்னுடைய சுபாவ குணத்தினாலேயும் செயற்கையான நூலறிவினாலேயும் பார்த்துத் தெரிந்து கொள்வாயாகவும், ஐ - ஒருவருக்கும் வணங்காத வெற்றிப்பாட்டை யுடைத்தான, அமளை - வீர மாதாவாகிய துர்க்கையை, உத்தமத்தை முன்னோர் - சண்டை பண்ணப்பட்ட இரணரங்க பூமியான போர்க்களத்திலெப்படிச் சுத்த

வீரனானவன் போர்க்கோலத்துடனே ஆயுதவன்மைகொண்டு அதிசாக்கிரதையுடன் இருப்பானோ அப்படிக்கே அந்த உவமானப்படிக்கு நீயும் வன்மையுடனே பார்த்து உன்னுடைய நுண்மையென்கிற போர்க்கோலமும் மருந்தென்கிற ஆண்மையும் மதிமந்திரமென்கிற வீராவேசமும், வைத்துறுதியுடனே, உணர் - தெரிந்து நடந்து கொள்வாயாக என்பது, இந்திரியப்பரிட்சை - அது எதிலேயென்று வினாவுவோர்க்கெல்லாம் விடை எப்படியென்றால் இப்போது சொல்லிக்கொண்டு வருகிற இந்திரியப் பரிட்சையினிடத்திலே, உத்தமத்தை - நல்ல முதன்மைக் குணாதிசயமென்கிற உத்தமத்தையும், நூலதரை - சாத்திர சங்கதியென்கிற வாகட சாத்திரமுறை மார்க்கத்தையும், ஓர் - நன்றாய் ஆராய்ந்து பார்த்துக் கொள்ளக்கடவாய் நீயென்று வயித்தியனுக்குப் பெரியோர்கள் புத்திசொன்னதாக முடிந்தது.

## கற்பம்-பத்தியம்-கடைப்பிடி மூன்றன் முடிவும் நடப்பும்

*பத்தியங்க டைப்பிடிகற் பம்பெண்மற வாமைநிலை*
*பத்தியங்க டைப்பிடிநாள் பண்ணவிழ்தம் - பத்தியங்க*
*நாமொழிவோ மேலடலை நன்கியற்று மாறுமத்து*
*நாமொழிவோ மேலடலை நண்.* 70

(சொ. பொ.) இதுவரைக்கும் முன்னே நாமுறுதியாகச் சொல்லிக் கொண்டு வந்த கற்பத்துக்கும் பத்தியத்துக்கும் கடைப்பிடிக்கும் இந்த மூன்றுக்கும் வயணமும் மேலே நடக்கவேண்டிய வாகடசாத்திரப்படி பண்ண வேண்டிய பற்பல மாத்திரை செந்தூர முதலானதுக்குஞ் செயப்படுபொருளுக்கு வரலாறுங் கூறுதனுதலிற்று; - பத்தியம் - பத்தியத்துக்கெல்லா முதன்மையான பிரதான நற்பத்தியம் பெண் போகத்தைத் தள்ளிப்போடுகிறது; மற்ற பத்தியங்களிலே எது தப்பிப்போனாலும் அவபத்தியமன்று; பெண்போகம் மாத்திரம் தள்ளாமற் போனாலதுவே அவபத்தியமாம் என்றும், கடைப்பிடி -

கடைப்பிடிக்கெல்லாம் முதன்மையாவது ஆரம்பத்திலே முதல் முதலென்ன வுத்தியோகிச்சு வைத்துக்கொண்ட குறிப்பை மறவாமலிருப்பது. ஒருவராலே பேதித்த போதைக்கும் அந்தப் பேதிப்புக்கெல்லாம் அசையாமல் நிர்ப்பயமாயிருக்கிறது, கற்பம் - கற்பமென்று சொல்லப்பட்டது தான் கொள்ளப்பட்ட மருந்தை நாளுக்கு நாளதிகப்படும்படியாய் விருத்தியாக வொரு நிலையாகி வரத்தக்கதா யுறுதிப்பட மகா ரகசியமாய்ப் புசித்துக் கொண்டு வருவது, பெண்மறவாமைநிலை - பெண் போகத்தை மாத்திரம் நீக்கி மறவாமையைப் பிடித்துறுதியாகி நிலைமையைப்பிடித்துறுதியாகிப் பரிபாலனம் பண்ணிக்கொண்டு வரப்பட்டவனே உருவகமாகிய நல்ல புருஷோத்தம மாணாக்கனானவன்.

பத்தியங்கு - அப்படிப்பக்குவமான சிஷ்யனிடத்திலே தேசிகனான பண்டிதன் செய்ய வேண்டிய கடனென்ன வென்றால் அன்பினாலே அந்தத் தேகத்திலே பிணியினால் வந்த உபத்திரவ பந்தத்தைப் பிடித்துத் தள்ளிப்போட வேண்டியதாம், நாள் பண்ணவிழ்தம் - வாணாளாகிய ஆயுசு விர்த்தியாகத்தக்கதான மருந்துகளை வயித்தியனானவன் பண்ணிக்கொள்ள வேண்டிய கிரமப்படிக்குப் பண்ணிக்கொள்ள வேண்டியது, பத்தியங்கம் - அது எப்படியென்றால் வரிசை அடுக்கினது போலே வாகட சாத்திரமென்று சொன்ன சிகாமணிநிகண்டு, சேகரப்பா, பதகடை, வண்ணம், வெண்பா, காப்பியம் பின்னுஞ்சொல்லிவைத்த பிரகாரம், நா மொழிவோம் - இனி நாம் பக்குவமாகச் சொல்லுகிறோம், மேல் - மேலைக்கன்று இப்போது தானே, அடலை - பற்ப முதலானவைகளுக்கெல்லாம் உறுதி வயணங்களை, நன்கியற்றுமாறு - இனிநன்றாய்ப் பண்ணிக்கொள்ளுகிறதற்கு விவரங்களை, மற்றும் - பின்னேயு மாத்திரை, செந்தூரம், லேகியம், குளிகை, சுத்தி, சூரணம், நெய், தயிலம் மேலே பின்னும் வரவேண்டிய தெல்லாம், நாம் - நாக்கிலே நீர்வராமல், ஒழி-இல்லாமறபடி கலையத்தக்க தோஷ குணம் பிறந்தபோது, ஓ- அந்த ஆபத்தைத் தள்ளிப்போடத்தக்க மருந்து எப்படியோ அப்படியே, மேலடலை நண் - மேன்மையைக் கொடுக்கப்பட்ட வெற்றிப் பராக்கிரமத்தை நீ யடைய வல்லமையைத் தரும்.

## அயபற்பத்தின் மகிமை

*பொன்னா மயத்தாற் புரமுறுதி யாமெனலுன்*
*பொன்னா மயத்தாற் புகன்முறையுண் - பொன்னா*
*யிருமார்க்கந் தப்பா தயின்றுபத்தி யத்தே*
*யிருமாற்கந் தப்பாநீ யே.* 71

(சொ. பொ.) அயபற்பமென்கிற இரும்பினது பற்பத்தின் மகிமையைக் கூறுதனுதலிற்று. (எப்படியென்றால் - வரலாறு) :-

பொன்னாமயத்தால் - பொன் என்கிற பரியாயப் பேரை யுடைத்தான இரும்பினாலே செய்யப்பட்டதான வஸ்துவை இரண்டு வகையான வெண்மை செம்மை என்கிற பற்பத்தினாலேயும் செந்தூரத்தினாலேயும், புரம் - தேகமானது, உறுதி - திடப்படவும் ஆகவே, ஆமெனலுன் - செம்மைப்படுமென்கிற வாகட சாத்திரத்தை நீ உன்மனதிலே கெட்டியாய் மதித்துப்பார்க்கவேண்டியது. பொன்னாமயத்தால் - கேட்கப்பட்ட பேருடைய செவித்துளையைத் துவாரம் பண்ணப்பட்ட மார்க்கமான பெரிய பண்டிதாளுடைய நாக்கினுடைய பெருமிதத்தினாலே தானே, புகல் - சொல்லப்பட்ட, முறை - கிரமப்பிரகாரமாக, உண் - புசிக்க வேண்டியது. மெய்யாகச் சொல்லுகிறேன், பொன்னாய் - வாரம் பொருந்திய சிங்காரமாக விசாரணை பண்ணுவையேயாகில், இரு - செம்மையிலேயுறுதியாயிருக்க வேண்டியது, மார்க்கந்தப்பாது - நல்லவழியான கெதியிலே பிசகாமற் படிக்கு, அயின்று - புசிக்கவேண்டியதைப் புசித்து பத்தியத்தே - பத்தியப்படிக்குத்தானே நிலையாயிரு, இருமாற்கந்தப்பா - அப்படி யிருப்பையேயானால் பெருமை பொருந்திய வண்மையுண்டான சுப்பிரமணிய சுவாமியைப்போலே வன்மையும் வண்மையு முண்டாயிருப்பாய் நீ.

## தங்கபற்பத்தின் மகிமை

வேங்கை யடலை விபுதருக்குங் கிட்டாநோய்
வேங்கை யடலை மிசைவைக்க - வேங்கை
வருடை யதுவீய மாட்டு தலினோய்
வருடை யதுயர்க்கடலை வாட்டு. 72

(சொ. பொ.) தங்கபற்பத்தினது மகிமையைக் கூறுகின்றதை நுதலிற்று. எப்படியெனில் :- வேங்கை - பொன்னினுடைய, அடலை - பற்பத்தைப் பார்க்க வேணுமென்றால், விபுதருக்கும் - தேவதைக்கும், கிட்டா - சம்பாதிக்க வென்றால் கூடாதாகையால் வெம் - கொடூரம் பொருந்திய, நோய்கை - பொல்லாத துர்வியாதிகளிலே, அடல் - பலம்பொருந்திய, ஐ - சேட்பவியாதியின், மிசை - மேலே, வைக்க - பிரயோகம் பண்ணினா லந்தட்சணமே என்ன செய்யுமென்றால், வேங்கை - புலியானது, வருடையது வீய - ஆட்டுக்கிடாவானது எப்படி மாண்டுபோகத் தக்கதாய்ப் பாய்ந்து கொல்லுமோ அப்படிப்போலே தானே, மாட்டுதலின் - வியாதி சேஷமில்லாமற்படிக்குக் கரிசறுத்து மேலே எங்கெங்கே பார்த்தாராய்ந்த போதைக்கும் பண்டிதருக்கு இல்லையென்று சொல்லத்தக்கதாய், நோய்வருடைய - பிணியைக் கொண்டிருக்கப் பட்டவர்களுடைய துக்கமான சமுத்திரத்தைத் தானாக, துயர்க்கடலை வாட்டும் - விதனத்தையுண்டாக்கப்பட்ட சாகரத்தை வற்றிப்போகத் தக்கதாய்ச்செய்யும்.

## அயனாக பற்ப மகிமை

அயனாக வெண்மை யரியரனா நோய்மை
அயனாக வெண்மை யடலை - அயனாக
நாகமா மேருமண்ணோர் நாயகமா மெய்க்குறுதி
நாகமா மேருசொன்னே னான். 73

(சொ. பொ.) அயனாகபற்பத்தினது, மகிமையைக் கூறுதல்நுதலிற்று:- அயனார் - பிரமதேவனென்று சொல்லத்தகுமான பேரையுடைத்தான வாதமும், எண்மை - தொகுத்துச் சொல்லப்பட்ட கணக்கிலே சேர்ந்த, அரி - மகாவிஷ்ணுவுக்கு நிகரென்று சொல்லப்பட்டதான சேட்பமும், அரன் - பரமசிவனான மகாருத்திரனுக்கு நிகரான உக்கிர மகத்துவ வியாதியென்று சொல்லப்பட்ட தான பித்தமும், ஆம் - இப்படிக்கெல்லா மெண்ணத்தக்கதான, நோய்மை - முப்பிணிகளென்று சொல்லத் தரம்பெற்ற வாத, சேட்பபித்தங்களான தடங்கித் தங்கள்தங்கள் வழியாய் நடக்கப்பண்ணப்பட்டதான, அயனாக வெண்மையடலே - இரும்பிலுண்டாவதான நாகத்தினது பற்பமானது செம்மையாய்ச் செம்மையில்லாமல் வெண்மையாய்க் கிடைக்குமேயானால் அது மெத்தவும் பண்டிதருக்கெப்போது மேம்பாடான பராக்கிரமத்தையே கொடுப்பதற்கு ஐய்யமில்லை, அயல் - திசைகளாகிய திக்குகளிலே இருக்கப்பட்டதான, நாகம் - யானைகளும், நாகம் - பாம்புகளும், ஆம் - அப்படிப் பராக்கிரம சிங்காரரூப லாவணிய திடங்களுண்டா மதை நீ நன்றாகத்தானே, ஏரு - அங்கீகாரம் பண்ணிக்கொள்ளத்தக்கது, மண்ணோர் - பின்னும் வேறு பூமியின் கண்ணிலே இருக்கப்பட்ட பேர்களுக்கெல்லாம், நாயகமா - ராசராச சிகாமணியைப்போலே மேன்மையாக நித்தியமாகி இருக்கப்பண்ணுகிற தொன்று மாத்திரமா? பின்னேயும் வேண்டின படிக்கெல்லாம் முன்னமே யுண்டாகப் பண்ணும், மெய்க்குறுதி - தேகமாமென்கிற உயிர்நிலைக்கு மெத்த மெத்த வன்மையைத்தானே கொடுக்கிற அமிசையிலே, நாகமாமேரு - ஆகாசத்தையு மளாவி மீறி மேம்பட்டிருக்கப்பட்டதான பூதாகாரமான மகாமேருகிரி பர்வதத்தையே நிகர் சொல்லப்படுவதான காத்திரத்துவமுண்டாகும், சொன்னேன் - வாகட சாத்திர பரரான வயித்தியர்களுடைய வழக்கப்படி வசனிக்கிற வார்த்தைகளைக் கேட்டறிந்த வழக்கப் பெருமையைச் சொன்னேன், நான் - அடியேன் மிகவும் வினய வணக்கத்துடன்.

## எஃகு பற்ப மகிமை

*வேத வெகுமகிமை மேலவர்மேற் கொள்ளநற்சு*
*வேத வெகுமகிமை வீறுமே - வேத*
*மருத்து கனலைமுதல் வன்பிணிக்கால் விட்டான்*
*மருத்து கனலையறி வாய்.* 74

(சொ. பொ.) இரும்பிலே கொஞ்சம் பேதமாகி இருக்கப்பட்ட எஃகுவினது, பற்பத்தாலான மகிமையைத்தானே எடுத்துக் கூறுதல் நுதலிற்று. (எவ்வாறெனில் வரலாறு) :- வேதவெகு - மெத்த மெத்தத்தானே பேதித்திருக்கப்பட்டதான, மகி - உலகத்தினது பெருக்க விஸ்தாரத்திலிருக்கிற பெரியோர்களும், மை - இந்தவுலகத்திலிருக்கிற மவுடீகருடைய குற்றங்களை நீக்கி நன்மையுண்டாக்கின, மேலவர் - வாகட சாத்திரிகரான பெரியோர்களால், மேற்கொள்ள - அங்கீகாரமான வெகு உபசாரத்துடனே அதைத்தானே வகிந்து கொண்டாட, நல் - இலக்கணம் பொருந்திய, சுவேத - வெள்ளை நிறமென்று சொல்லப்பட்ட தான பற்பமான வண்ணத்துடனே கூடின, எது - எஃகுவினுடைய பற்பமான எஃகுபற்பத்தினது, மகிமை - பெருமையை, வீறுமே - உலகத்தின் கண்ணிலே விளங்கிப்பிரகாசிக்கத்தக்கின மேம்பாட்டைப் பண்ணுமே; வேத - வாகடசாத்திரத்தினது மார்க்கமாகச் சொல்லப்பட்டதாகி யிருக்கிற வரிசைக்கிரமப்படிக்கு இசையான, மருத்து - வாதமும், கனல் - பித்தமும், ஐ - சேட்பமும், முதல் - இவைமூன்றும் வரிசைக்கிரமத்திலே அரசனென்றும் அமைச்சனென்றும் பிரதானியென்றும் வழக்கப்பட்டிருக்கும், வன்பிணிக்கால் - பொல்லாப்பிணிகளென்கிற சீவராசிகளுக்கெல்லாம் இந்த எஃகு பற்ப மென்கிறதே ஒரு நமனென்றறி, விட்டால் - அப்பேர்ப்பட்ட வலவாயான பற்பத்தை முறைப்படி செய்து வைத்துக்கொண்டு பிரயோகம் பண்ணக்கடவை, அப்படி எல்லாமிருப்பையேயானால், மருத்துகனலை - நீ அவிழ்தத்தின் மார்க்கத்திலே வரப்பட்ட பண்டிதனாகப்போவதில்லை அறிவாய் - மேலே அறிந்து கொள்ளத்தக்க சமத்தனாவாய் அது உனக்கு மேலே தெரிந்துகொள்ளுவாய்.

## இரசித பற்ப மகிமை

*வாயல்குன் மாற்க வயிரிமட வார்குருதி*
*வாயல்குன் மாற்க மடையடைகல் - வாயல்குன்*
*வெள்ளி விபூதி விருச்சிகத்தா றெட்டிலென*
*வெள்ளி விபூதியறி வேன்.* 75

(சொ. பொ.) இரசிதமென்று சொல்லாநின்ற வெள்ளி பற்பத்தினது மகிமையை எடுத்துக் கூறுதல்நுதலிற்று. (வரலாறு) எப்படியெனில்:- வாயல் - வயித்தியம் பார்க்கப்பட்ட பேர்பெற்ற பண்டிதர்க்கெல்லாம் பண்டித மென்கிற இராசாங்கத்துக்கு ஒரு சாம்ராச்சியமான ராச்சிய பாரமாகவே இருக்கும், குன்மாற்கவயிரி - வயிற்றுவலி என்று சொல்லப்பட்ட சூரியார்த்தமான கோடை வெய்யிலுக்குச் சத்துருவான மாரியாகியிருக்கும். பின்னும் வேறு, மடவார் - பெண்களுடைய, குருதி - இரத்தந்தானே பெருக்கமாகிற வாயல்குன்மாற்க - வாயின் வழியாகவும் மெத்தத்தானே பெருகி வழியவும் யோனியின் வழியாகவும் மெத்தத்தானே பெருகிவழியவுமுண்டாகிற சூதகாருணகாசமென்கிற பொல்லாத வியாதி என்கிற, மடையடைகல் - பெரிய வாய்க்காலான நீர்த்தாரையாகிற மதகு அடைக்கத்தக்கதாகிய பலகைக்கல்லாகவும் இருக்கும், வாயல்குன் - நீயடங்கியொடுங்கி வேறே கியாபத்தைப் பரப்பிலே விட்டுப் பாராமுகமில்லாமற்படிக்கு மனதிலே எண்ணிப்பார்க்கவேண்டியது.

வெள்ளி - நவக்கிரங்களிலே யாதிக்கியமென்மேலும் படைத்த சுக்கிரபகவானானவர், விபூதி - அஷ்டாயிசுவரியசம்பத்து மென் மேலும் பெரும்பாலும் மாறாமலிருக்க வேண்டியதாய், விருச்சிகத்து - விருச்சிகப்பேர்பெற்ற ராசியின் கண் கேந்திரப்பண்பு வளமையுண்டாக முழுநோக்கப்பார்வைபார்க்க வாய்ப்பான ஆதாரம் பொருந்திய, ஆறு - சஷ்டமமான ஆறாமிடத்திலேயும், எட்டில் - அஷ்டமமான எட்டாமிடத்திலேயும், என - அப்படிக்கு வாய்ந்த திசைகளில் எப்படிப் பலப்பிராப்தி பலன்களுடைய நன்மையைத்தருவாரோ அப்படித்தான்

புசித்த பேர்களுக் கதிகப் பலப்பிராப்தி நன்மையை மிகவுங் கொடுத்துப் பண்டிதர்க் கதிக வெற்றியைக்கொடுக்கும்; அதுதானெதுவென்றால், வெள்ளி விபூதி அறிவேன் - இரசிதபற்பமென்கிற சீவாமிர்தசஞ்சீவி யென்பது மெய்யாகத்தானந்த மர்ம ரகசிய மார்க்கங்களெல்லாம் நான் வரலாறாகத் தெரிந்து கொண்டேன். எப்படியென்றால் பெரியோர்களான வாகட சாத்திர வல்லபத்தை உண்டான பெரியோர்களுடைய நற்பாண்டித காருணியானுக்கிரக வரப்பிரசாத மகிமையினாலே.

## காந்த பற்ப மகிமை

*காந்தச் சுவேதங் கசியுமைநொய்த் தாமரைக்குக்*
*காந்தச் சுவேதங் கரியாகுங் - காந்தச்சு*
*கூ றுமத்தை யாதனையைக் கொல்லுமெய்யாம் பார்தாங்கக்*
*கூருமத்தை நேருமுன்னிக் கொள். 76*

(சொ. பொ.) காந்தபற்பத்தினது மகிமையைச் சாங்கோ பாங்கமாகச் சொல்லு மார்க்கத்தைக் கூறுதல் நுதலிற்று :- காந்தசரீரத்திலே யுண்டான வெப்பமிகுதி யுண்டாகத்தக்கதான வாதசேட்பத்தின் சம்பந்தப்பட்ட தொந்திப்பினாலே ஆவியேறியதனாலே நெல்லுப்பானை எப்படிப் புழுங்கி வேகுமோ அப்படித்தானே கதகதவென்று மெத்த மெத்தத்தானே வேகமேறவும், சுவேதங்கசியும் - அதனாலே சிரசு முதல் பாதம் வரைக்கும் மயிர்க்காலுக்கு மயிர்க்காலிடை விடாமற்படிக்குக் குறுவேர்வையானது சிறுமணற்கேணியான ஊற்றுக்குழி ஊற்றைப் போலே அதிகப்படாமல் வற்றியிருந்த நதியாகிய ஆற்றிலே நூதனப் பிரவாகம் வருகிறதற்கு முன்னமே யெப்படிக் கொஞ்ச தூரம் பின்னே வருகிற வெள்ளத்தினது குறிப்பை முன்னே எப்படிக் காண்பிக்குமோ அப்படி நோயாளி தேகத்திலே காட்டவும், மை - குற்றத்தைத் தானே அதிகப்படுத்துவதான, நொய்த்தாமரைக்கு - வியாதியென்று எடுத்துக்காட்டப்பட்ட வரிசைக் கிரமத்தைப் பொருந்திய பிணித்தாமரைத்தடாகத்தைக் கலக்கியழித்துப் போடுகிறதற்கு, காந்தச்

சுவேதம் - காந்தபற்பமென்று வாகட சாத்திரிகளான வயித்தியராலே சொல்லிக்கொண்டாடப்பட்ட மகிமையுண்டாகிற பெரிதான காந்த பற்பாமுதமானது, கரியாகும் - சர்வசன சாட்சியாய் எல்லாரும் பார்த்திருக்கத்தான் மதப்பட்ட யானையைப்போலே பிரவேசித்துள்ளே வெகுகாலமாகப் பந்தப்பட்டழுந்தி வளராநின்ற பிணிகளென்கிற தாமரைத்தடாகத்தைக் கலக்கிப் போட்டு மீளும்.

காந்தச்சு - பின்னையு மெப்படியென்றால் வேறே நல்ல கற்புடைய பெண்ணானவள் எப்படித் தன்னுடைய பர்த்தாவைக் கண்டவுடனே அவனிடத்திலே அதிபாதி விரதாதிக்கியத்தைச் செலுத்துமிடத்திலே நாணமென்றும், மடமென்றும் அச்சமென்றும் பயிர்ப்பென்றும் பேர்பெறுவதான நாலு குணாதிசயங்களும் பொன்னைப்போற் பொறுத் தெப்படி யடங்கிப் போவாளோ அப்படி யடங்கி யொடுங்கிப் போய்விடும். அது யெது வென்றால், கூறும் - வெகுகாலமாக வாசம் பண்ணிக்கொண்டு நோயாளி யினுடைய தேகமென்கிற வீட்டிலே சேர்ந்திருக்கப்பட்டதான, மத்தை - பித்த பிரமரபாரமென்கிற பயித்திய சன்னிபாத மென்கிற பிணிகளையெல்லாம், யாதனையைக்கொல்லும் - விடாமற்படிக்கு நோயாளியினுடைய தேகத்தை நாசம் பண்ணப்பட்ட கயநோயை இராம லிறந்துவிடத் தக்கதாய்ச் சங்காரம் பண்ணிப்போடும். விட்டுவிடாது.

மெய்யாம் பார்தாங்க - பிணியாகிய யாதனையை மிகவும் காட்ட வதனாலே நோயாளி தேகமென்றெடுத்து உவமானிக்கப்பட்டதான பூமண்டலமானது வயப்பட்டுப் போகிற காலத்திலொரு விதமும் வேறே யாதரவு இல்லாமற் போகிற வழியற்ற காலத்திலே மகாவிஷ்ணுவானவர் எப்படி ஆதிமகா கூர்மாவதாரங்கொண்டு பூமண்டலத்தை முன்காலத்திலே சுமந்துலகத்தைக் காத்து ரட்சித்தாரோ அப்படிப் போலே லோகாதரவாகி யிந்தக் காந்தபற்பமும் பிணிப்பட்ட தேகியினுடைய உடலான பூமண்டலத்தையும் நசியாமற்படிக்குத் தானே சுமந்து ரட்சனை பண்ணத்தக்கதாய், கூருமத்தைநேரும் - ஆமையைப் போலே நேருக்கு நேராகத்தான் பின்னுக்கிடையாமல் வந்து தாங்கிக்கொண்டு பரிபாலனம் பண்ணுவதற்கு மேற்கொண்டு வரும், உன்னிக்கொள் - நீமனதிலே புத்தியாலோசனைகளானது இயற்கையான உன்னுடைய சுபாவ

புத்தியினாலேயும் செயற்கையான பெரிய சாத்திர சம்பந்தப்பட்ட முன்னோர்களால் எடுத்துக் காட்டப்பட்ட நற்புத்திகளாலேயும், பார்த்து விவரமா யறிந்து கொண்டு மேலே நீ இந்தக் காந்த பற்பத்தை இரண்டு விதமரபினது முறைக்கிரமா லங்காரப்படியே செய்து கொள்ளத் துணிய வேண்டியது.

## தாம்பிர பற்ப மகிமை

*செம்படலை யையெரிகாற் சேத்துமகா சத்தை வெட்டிச்*
*செம்படலை யையமறச் செய்தளிக்குஞ் - செம்படலைப்*
*பாசுபத மாமருத்துபார்த் தர்கைச் சயிந்தனெனும்*
*பாசுபத மாமருத்தப் பன்.* 77

(சொ. பொ.) தாம்பிரமென்று கீர்வாணப் (வடமொழி) பேர் பெற்றுத் திராவிடத்திலே செம்பென்று பேர் பெற்ற அதனுடைய பற்ப மகிமையைத் தொகுத்தும் வகுத்தும் விரித்தும் கூறுதல் நுதலிற்று.

(சொ. பொ.) செம்படலை - சிவந்த வண்ணமாகத் தடித்து உடலிலே பட்டைபட்டையாய்த் தழும்பேறிப்போய் மேலே துருவ அதிகமாய்ப் பந்தனமாகக் (கட்டியாக) கொப்புளமான பிறகு புண்ணாகி உபத்திரவத்தைச் செய்யப்பட்டதான செங்குட்ட மென்கிற பொல்லாத வியாதியை எங்கும் இல்லாதபடி ஓட்டிவிடும். (பின்னும் வேறே) ஐயெரிகால் சேத்தும காசத்தைவெட்டி - அனுமானத்தினாலே அதிகப்பட்ட பொல்லாத பெருவியாதியான பித்தத்திலே சேர்ந்து அதிகப்பட்டதனாலே உற்பாதமான சீவசேதத்துக் கிடம் பண்ணுவதான பயித்தியகாசம் என்கிற க்ஷயரோகம் மேலிட்ட போதைக்கும், அந்த வியாதியை அறுத்துப்போட்டு அதம்பண்ணத் தக்கதான சாமர்த்தியத்தைக் காட்டவும் பின்னும் வேறே வரத்தக்கதான அனுமானத்தினாலே அதிகப்பட்ட பொல்லாத பெருவியாதியான வாதத்திலே சேர்ந்து அதிகப் பட்டதனாலே உற்பாதமான சீவசேதத்துக் கிடம் பண்ணப்பட்டதான வாதகாசமென்கிறது கூடின க்ஷயரோகம் மேலிட்டபோதைக்கும், அந்த வியாதியை

அறுத்துப்போட்டு அதம் பண்ணத்தக்கதான சாமர்த்தியத்தைக் காட்டவும் பின்னும் வேறே அனுமானத்தினாலே அதிகப் பட்ட பொல்லாத பெருவியாதியான சேத்துமத்திலே சேர்ந்து அதிகப் பட்டதானதாய் அதனாலே உற்பாதமான சீவசேதத்துக் கிடம் பண்ணப்பட்டதான சேத்துமகாச மென்கிற க்ஷயரோகம் மேலிட்ட போதைக்கும் அந்த வியாதியை அறுத்துப்போட்டு அதம் பண்ணத்தக்கதான சாமர்த்தியத்தைக் காட்டவும். செம்படலை - செம்மையான நன்மையை அடைவதென்று சொல்லப்பட்டதான வெகு சவுக்கியத்தைத்தானே தேகத்துக்குக்கொடுக்கும் என்பதாம், ஐயமறச் செய்தளிக்கும் - மேலே இப்படிக்கென்று எடுத்துச் சொல்லாமலிருக்கப்பட்ட மற்ற வியாதிகள் எப்பேர்ப்பட்டதான போதைக்கும் அவைகளெல்லாம் வாங்கிப் போகத்தக்கதாய் அவைகளை எல்லாம் வேரோடே அறுத்து அதமாகப் போக்கடிக்கும். பின்னேயும் வேறு வேறு விதங்களையும் அறுத்துப் போட்டு அமரிக்கையைக் கொடுக்கும். மென்மேலும், செம்படலை - இவைகளை எல்லாம் செய்யப்பட்டது தாம்பிர பற்பமாதலால் அதனது பெருமையை எப்படிச் சொல்லி முடியும்? முடியாது. இந்தத் தாம்பிர பற்பம் எப்பேர்ப்பட்டதென்றால், பாசுபதம் - மகா பரம சிவனானவருடைய சர்வ சங்கார காலத்திலே எதிர்தோன்றி எரிக்கப்பட்ட ருத்திராம்சையாய் எரிக்கத் தக்கதான பாசுபதாஸ் திரத்தை நிகரென்று உவமானஞ் சொல்லத் தகுமானதாம், ஆம் - நிசமாகத்தானே உவமானஞ் சொல்லுகிறதற்கு யோக்கியமான, மருத்து பார்த்தர்கை - பண்டிதரென்று சொல்லப்பட்ட அர்ச்சுனன் கைவசப்பட்டிருக்கிறதான இந்தத் தாம்பிர பற்பமென்கிற பாசுபதாஸ்திரமானதென்று உவமானம் பண்ணின போதே முன்னாளிலே அந்த அர்ச்சுனனானவன் மகா வனவாச காலத்திலே அரிதான தவத்தைப் பண்ணி மகாதேவரான பரமசிவனார் கையிலே போராடி வாங்கினது எப்படியோ அப்படித் தானே வயித்தியரென்கிற அர்ச்சுனனானவன் வாகட சாத்திரமென்கிற வனவாசத்திலே ஆராய்தலென்கிற அருந்தவத்தைச் செய்து நாதாக்களென்கிற பரமசிவனுடனே பணிவிடை பத்தியென்கிற போராட்டத்தைச் செய்து மிகவும் பிரயாசையைக் காண்பித்து மேலே அவராலே பெற்றதாம்.

சயிந்தனெனும் - அப்படி வாங்கி வந்த பாசுபதாஸ்திரத்தைப் பாரத யுத்தத்தில் எப்படி அர்ச்சுனனானவன் சிந்துபதியின் மேலே பிரயோகம் பண்ணினானோ அப்படித்தானே சயிந்தவனென்று சொல்லப்பட்டதான, பாசுபதமா மருத்து - வாத சுரத்தினது நலியினால் தோற்றப்பட்ட தோஷித்த சன்னி மேலிட்டதனாலே பாதமென்கிற காலானது சயித்தியத்தினா லீரிச்சிப் போய் மேலே ஆதரவில்லை, இனிமேலே எப்படியும் மரணத்தைக் கொடுத்து விடுமென்று சித்தவயித்தியர் துணிந்து இனிமேல் எந்த விதத்திலேயும் முப்பது நாழிகையிலே இந்தத் தோஷ விஷத்தை எந்த அடைவிலேயும் போக்கடிக்க வேண்டியதென்று சபதம் வைத்துக் கொண்டு அதற்கேற்ற அனுபானத்திலே பிரயோகம் பண்ணின போது, அப்பன் - முன்னாலே அர்ச்சுனனானவன் சயிந்தவனைச் சங்காரம் பண்ணின போது அவனுடைய தகப்பனையுங் கூட எப்படி வதைக்கத்தக்கதாய்ப் பாசுபதத்தை விட்டானோ அப்படிக்குத்தானே உவமானஞ் சொல்லத்தக்கதாய் இந்தத் தாம்பிரபற்ப மென்கிற பாசுபதாஸ்திரம் போய் முன்னே நேரிட்டிருக்கப்பட்ட வாதசன்னி விஷதோஷத்தை அறுத்து மேலே, பின்னும் இந்த வியாதியைப் பெற்ற தகப்பனான அசீரண மாந்தியாக்கினியையும் வேர்பறியத்தக்கதாகக் களைந்து போடுமென்பதாம். ஆனபடியினாலே இந்தவிதமான தாம்பிர பற்பத்தை எந்தவிதமாகச் செய்து கொள்ள வேண்டிய வழியோ அப்படிச் செய்துகொள்ள வேண்டியது.

## காரீய பற்ப மகிமை

*காரீயச் சுண்ணக் கனல்வெங்காற் கட்செவிக்குக்*
*காரீயச் சுண்ணமது காணுருமு - காரீய*
*பத்தியவி யாதிக்குப் பாயுமுவை வாகடர்க்குப்*
*பத்தியவி யாதிக்குப் பால்.* 78

(சொ. பொ.) காரீயமென்று சொல்லப்பட்ட கறுத்த ஈயத்தினது பற்பத்துடைய மகிமையை விவரமாகக் கூறுதல் நுதலிற்று.

காரீயச்சுண்ண - சலதோஷமுதலாக வரப்பட்ட சேட்பசன்னியானது மேலிட்டதனாலே வடித்த வாள் போலே பிணியாளனானவன் நினைத்துப் பார்க்குமிடத்தில் வெகுவான பயங்கரத்தை நினைக்கப்பண்ணுவதான, கனல் - அதிகரித்த சுரக் காங்கைக் கிடமான மூர்க்கப் பராக்கிரமக் காய்ச்சலைக் கொடுக்கிற, வெம் - வெவ்விதான, கால் - வாதுப் பெருக்கான, கட்செவிக்கு - நாகப் பாம்புக்கு, காரீயச் சுண்ணமது - காரீயத்தினது பற்பமானது. வைதீகமான அனுபானப் பிரயோகத்திலே வகுத்த, காணுருமு - மேகத்திலிடிக்கப்பட்ட பெரியதான கோடை இடியைப் போலே அந்த வியாதியான சர்ப்பத்தை அதம் பண்ணிப் போடும் அப்படி யென்று நிசமாகப் பார்த்துக் கொண்டிரு, காரீ - கறுத்த ஈயைப்போலே சரீரமெல்லாம் வித்தியாசப்பட்டதனாலே விபரீத குணத்தைத் தரப்பட்டதான பொல்லாத, அபத்திய வியாதிக்கு - பத்தியத்திலே கெடுதி வந்ததனாலே தோஷித்தப்போது ஆபத்தாய் இருக்கிற காலத்திலே தீரத்தக்கதாய், பாய் உழுவை - ஆட்டின் பேரிலே பாய்ந்தெப்படிப் புலியானது கொல்லுமோ அப்படிப் போலே வியாதியின் பேரிலே பாய்ந்ததனைக் கொன்று விடும். பின்னும் வேறு, வாகடர்க்குப் பத்தியவியாது - வயித்தியரென்று சொல்லப்பட்ட நல்ல மகத்து மாக்களுக்கு எப்படியிருக்கும் இந்தக் காரீய பற்ப மென்றால் அன்பென்கிற விசுவாச மானது கெட்டுப் போகாம லிருக்கப்பட்ட நிலைமையைத் தரும்.

பின்னும், இக்குப்பால் - இந்தப் பூமியினிடத்திலே பிரயோகம் பண்ணுவதற்கு முன்னமே நன்மையைத் தருவதற்குக் கனிவாகி, எப்படி மனோரதப் படுத்துமென்றால், கருப்பஞ்சாறு எப்படியோ அப்படி இருக்குமாதலால் காரீய பற்பத்தினது மகிமையை அறிந்து செய்து கொள்ளவேண்டியது.

## வெள்ளீய பற்ப மகிமை

*பாண்டுவங்கக் கூடா படரவொட்டா வாரபந்தப்*
*பாண்டுவங்கக் கூடாமெய் பண்பாகப் - பாண்டுவங்க*
*வெள்ளத்தை யேய நுகர் மேலேயுல் லாபமெனும்*
*வெள்ளத்தை யேயடைதி மெய்.* 79

(சொ. பொ.) வெள்ளீயத்தினது பற்ப மகிமையை எடுத்து வரிசைக் கிரமப்படியே வியந்து கூறுதல் நுதலிற்று :- பாண் - மிடற்றிலிருந்து சத்த மெழும்பத் தக்கதாய் இராகங்களை வீணை இசையைப் போலே பாட, துவங்க - ஆரம்பம் பண்ணுகிறதற்கு கூடா - இசையாமலிருக்கத் தக்கதாய் வாதமும் சேட்பமும் கூடிக்கொண்டு நெஞ்சு முதல் அண்ணம் வரைக்கும் சல மேறிக்கொண்டதனாலே குரல் கம்மலும் இருமலும் தும்மலுமாய் இறுக்கிக் கொண்டு இருக்கப் பண்ணும், படரவொட்டா - பின்னேயும் நீர் வாதத்துடனே சிக்கிக் கொண்டு கீல்களில் அங்கி தங்கியபடியினாலே நடக்க வொட்டாமற்படிக்கு இரண்டு பாதங்களையும் வலித்துக்கொண்டிருக்கும், வாரபந்தம் - நீரைக் காசளவும் வெளியே வரவொட்டாமற்படிக்கு அடைத்துக் கொண்டு மிகுந்த உபத்திரவத்தைக் கொடுக்கும், பாண்டு - முன்னாளில் இருப்பதான, வங்கு - வளைவாகத் தருவதான, அக்கு - எலும்பு நரம்புகளினது சந்துக்கட்டான, ஊடாமெய் - உள்ளே பயந்திருக்கப்பட்டதான படிவத்திலே இல்லாமற்படிக்குச் செம்மைப்பட்டிருக்கவும் வேண்டினால், பண்பாக - நன்மையாக இலட்சணப் பழுது வராமற்படிக்குப் பண்ணிவைத்துக்கொண்ட நலமுண்டான, பாண்டு வங்க - வெள்ளை ஈயமான வெள்ளீயத்தை வாகட சாத்திரப்படிக் கிசைவாகச் செய்திருந்த, வெள்ளத்தை - வெள்ளை நிறமென்று குறிப்பினாற் காட்டிய பற்பத்தை, நீ, ஏய் - பக்குவமாய் அனுபான விதத்திலே பங்கீடாக, நுகர் - புசிப்பையேயாமாகில் அது நித்தியத்துவமானபடி செய்வையேயானால், மேலே - பிற்பாடு அனுபோக மென்னமாயிருக்கு மென்று ஆலோசனை பண்ணவும் வேணுமா? வேண்டியதில்லை.

பின்னே வேறே வருகிற இலாப மென்னவென்றால், உல்லாபமெனும் - நோயுற்றொழித லென்கிற உப்பாமென்கிற, வெள்ளத்தையே யடைதி - நீ பரமானந்த சந்தோஷமகிழ்ச்சி என்கிற சமுத்திரத்திலே முழுகி இன்பத்தைச் சேர்வாயாகவும், இக்கணமே, மெய் - இந்தப் படிக்குப் பெரியோர்களாலே கேள்விப்பட்டிருப்பதான முறையை நிசமாகச் சொன்னேன். நீ அதை நிசமாக நம்ப வேண்டியது.

## துத்தநாக பற்ப மகிமை

*துத்தநா கத்தடலை துர்ப்பிணியா மேகமென்றே*
*துத்தநா கத்தடலை தொற்கவடுந் - துத்தநா*
*கத்தத் துவமிடறு காலுமிரு காலுக்கும்*
*கத்தத் துவமிடறு காண்.* 80

(சொ. பொ.) துத்தநாக பற்பத்தினது மகிமையை விசிதமாய் வெளிப்படையென்றுங் குறிப்பென்றும் வர்ண முறையான வாசகமாகக் கூறுதல் நுதலிற்று :- துத்தநாகத்தடலை - துத்தநாகத்தினது பற்பமானது பண்பாகச் செய்து வைத்துக் கொள்ளப்பட்ட நல்ல கைகாரனான பண்டிதன் முன்னிலையாய் இருந்து கொண்டு போகிக்கப்பட்ட சாம்பிரதாயமாகப் புசிக்கவே, துர்ப்பிணியம் - பொல்லாத்தனத்தை யுண்டான நோயென்று கூறப்படுவதான, மேகமென்று - மேக வெட்டை, மேக உஷ்ணமென்று விதமாகப் புகலப்பட்டரோகமென்கிற ஆனையினது மூர்க்கத்துடனே, எதுத்த நாகத்து - மேல் எதிரியாகி நின்று போராடுவதான மதநாகம் மேலே சொன்னபடியே மாறாடு மதனது பலத்துடனே கூடின, ஐ - சேட்பத்தொந்தமான மேக சன்னியினது பராக்கிரமமெல்லாம் அடங்கிப் பற்றறும்படியாய், தொற்கவடும் - ஓடிப் போய்விடத் தக்கதாய் அடித்துப் பரிகரிக்கும்படிபண்ணும், துத்த - புசித்த, நா - நாக்கானது, கத்தத்துவம் - பஞ்சேஞ்திரிய வரிசைக்கிரமங்களிலே சத்த, பரிச, ரூப, ரச, கந்தமென்கிற ஐந்திலே இரசமென்கிற இந்திரியமே முன்னானமுதன்மை யென்று சொல்லிக் கொள்ளத் தகுதியை அதிகமாகக்

கொடுக்கும். பின்னும், மிடறுகாலும் - சாரீரமாகிய கண்டத்திலே சத்த சுரங்களும் விலத்திய வசுரமென் பதில்லாமல் யாழிசை போலே நல்ல ராகத்தொனி யுண்டாயிருக்கும், இருகாலுக்கும் - இரண்டுகாலுக்கும், கத்தத்துவம் - அதிகார தோரணையுண்டான சத்தி பலத்தை மென்மேலுண்டாகப் பண்ணும், இடறுகாண் - ஆபத்துவமான பொல்லாப்பை விட்டுவிடும்.

## அப்பிரக பற்ப மகிமை

*பாறுவதி பூவாய்ப் பயமத்த நீரடைத்தீ*
*பாறுவதி பூவாய்ப் பணியுமே - பாறுவதி*
*அப்பிரக பற்பமுறை யாலதிக நன்மையண்மீ*
*அப்பிரக பற்பமுறை யால்.* 81

(சொ. பொ.) அப்பிரகபற்பத்தின் மகிமையைக் கூறுகின்ற நன்மையை நுதலிற்று :- பாறு - பருந்தென்கிற பொல்லாத பட்சியானது, வதி - வாசம் பண்ணப்பட்ட, பூவாய் - பாலை நிலமானது எப்படிக் குரூரமாய் அதிக வெப்பத்துடனே, பயமத்த - நீரில்லாமறபடிக்குப் பார்த்த பேர்களுக்குப் பயத்தைக் கொடுக்குமோ அப்படித்தானே, நீரடைத்தீ - பிணியாளரான மனிதருக்கு உடலிலே அதிகப் பசியினாலேயாவது அதிக வியாபகமான கலவியினாலேயாவது நடையினாலேயாவது அற்பசங்கை வர்ச்சியத்தினாலாவது (சிறுநீர் அடக்குதலிலாவது) காங்கை மிஞ்சி அந்தட்சணமே பிறக்கப்பட்ட உட்டண சலபந்தமென்று சொல்லப்பட்ட காங்கை நீர்க்கட்டு வியாதியான தேகதேசத்திலே வந்து அதிகப் பிரயாசையைக் கொடுத்து வாதிக்கும்போது பிணிப்பு நெருப்பான தாறிக் குணப்படத்தக்கதா யந்தக் காலத்திலே, பாறு - பிணியானது நீங்கியோடிப் போகவேணுமென்கிற நினைப்புக்கடுத்த, வதி - மார்க்கமாகக் கொடுத்த உடனே, பூவாய் - அப்பேர்ப்பட்ட வினையற்றோடிப் போகிற வழிக்குக் கூரிய வாள்போல அதிக வேகத்துடனே ஒறுக்குமப்போது, பணியுமே - பிணியானதந்தப் பிரயோக வாளியாகித் துரத்துகிற மருத்துவமென்கிற

இந்த அப்பிரக பற்பத்துக்குத் திரும்பி வணக்கஞ் செய்து நீ என்னை அடித்துத் துரத்தவேண்டாம்.

நானே ஓடிப் போகிறேன் என்று பணிந்து விண்ணப்பஞ் செய்துபோம், பாறுவதி - என்னத்தினா லப்படிக்கெல்லாம் பலிதமாம் என்றால் பர்வதராசகுமாரி என்கிற உமையவளைப்போலே நன்மை யென்னும் கிருபா கடாட்ச வீட்சண்ணியமானது, அப்பு - ஒட்டிக் கொள்ளத் தக்கதாகிய அன்பின் தன்மை மிகுந்ததனாலே, இர் - உள்ளத்தைத் துளைத் துருவப் பண்ணுவதான, அக - இடத்தை யுண்டான பட்சத்துடனே, பற்பமுறை - பலப்பல விதமான நாணய வன்மைகளெல்லாம் ஒருமிக்கத்தானே யுண்டான கங்கை நதிப்பிரவாகத்தைப் போலே அதிகச் சீதளவன்மையான நன்மை, ஆல - நிர்த்தம் பண்ணப்பக்குவம் எப்படியோ அப்படியே, அதிக நன்மை யண்மீ - வெகு வெகு விவரங்களுடனே நல்ல குணமென்கிற லட்சுமீ கரமானது கூடிக்கொண்டெக்காலமும் இடைவிடாமற்படிக்கு விளங்கிக் கொண்டிருக்க வரும்படிக்கு ஆதிக்கியமுண்டாம், அப்பிரக பற்ப முறையால் - வாகட சாஸ்திரிகளாகிய உபய மார்க்க பரரென்னும் அதிகாரத்தைப் பெற்ற பண்டிதோத்தமரென்கிற வயித்தியராலே சொல்லப்பட்ட வரிசைக் கிரமப்படிக்குப் பத்திரமாய்ப் பண்ணி வைத்திருக்கப்பட்ட அப்பிரக பற்பத்தினது பிரயோகானுமான மகிமையினாலே உண்டாம்.

## முத்துப் பற்ப மகிமை

*சத்திதர வையந் தரவுப் பசமேக*
*சத்திதர வையமனுந் தாக்கஞர்வ - சத்திதர*
*மாடமெய்யா மென்ன மவுத்திகபற் பத்தையுண்ண*
*மாடமெய்யா தெய்தவுறு வார்.* 82

(சொ. பொ.) மவுத்திக (முத்து) பற்பத்தினது மகிமையைத்தானே விரைந்து கூறுதல் நுதலிற்று :- சத்திதர - இருமலாதியான உப்பச

உபத்திரவங்களெல்லாம் மேலிட்டு வரத்தக்கதாகவும் பின்னும், ஐயந்தர - தேகாந்த மென்கிற பிராண சந்தேகத்தை அடிக்கடி தரப்பட்டதான மூர்ச்சையையும் இளைப்பையும் கொடுக்கவும், உப்பசமேக - உப்பசத்துடனே கூடிக்கொண்டதனாற் சகலமான ஆதாரங்களுக்கு எல்லாம் இடங் கொடுக்கப்பட்ட மேக வெட்டை அதிகரித்ததனாலே வராநின்ற காசத்துடனே இனிமேல் சம்பந்தப்படவே எதிர்பார்த்திருக்கிற, சத்தி தர வையமனுந்தாக்க - சுப்பிரமணிய சுவாமியாருடைய பூமியாகிய மலை நாடான குறிஞ்சி நிலத்து வாசியான சேட்பமுங் கூடிக்கொண்ட கந்தையான பொல்லாங்குகளை எல்லாம் பொருந்தி இருக்கப்பட்ட, அஞர் - உபாதியை மருவிய, வசத்து - அதனுடைய மாரீபத்தாக வரப்பட்ட, இதர - பின்னும் வரப்பட்ட அநேக விதமான பிணிகளெல்லாம் வெகுவிரைவிலே வந்து வந்து.

மாடு - பக்கத்திலே வந்து வந்து, அம் - ஆங்காரத்தினாலே அடங்காத பகையைத் தானே செலுத்திக்கொண்டபடிக்குண்மையாக, எய்யா மென்ன - மிருகங்களிலே பொல்லாத முள்ளம்பன்றி எப்படி வந்த பேரை யெல்லாம் கிட்டச்சேர வொட்டாது அடிக்குமோ அப்படிக்குத்தானே உபத்திரவத்தைச் செய்கிற சல்லியத்தையெல்லாம் போக்கியாக்கையைக் காக்க வேண்டின பேர்கள் செய்ய வேண்டிய தென்னவென்றால், மவுத்திக பற்பத்தையுண்ண - முத்தினது பற்பத்தை விவரப்படிக்கு இசைவாகப் பண்ணி வைத்துக்கொண்டு அதை அனுபானப் பிரயோகப்படிக்குக் கொஞ்சமாகிலும் தப்புதல் வராமற்படிக்குப் பிரமாணத்துடனே புசித்துப் பத்தியப்பிழைகள் ஒன்றும் வராமற்படிக்கு ஒரு மண்டலம் வைத்துக்கொள்ள வேண்டிய காலானுகூலப்படிக்கு இசைந்திருக்க வேண்டியது. அப்படிக்குண்மைக்கு உத்தாரமாகி இருப்பார்களேயானால், மாடம் - அப்படிக்குறியாகிப் புசித்துக்கொண்டு மேற்சொன்ன இலக்கணப்படிக்கெல்லாம் இருப்பார்களேயாமாகில் அவர்களுடைய தேகமென்று சொல்லப்பட்ட வாகட சாத்திரத்துக்குஞ் சரசாத்திரத்திற்கும் சாமுத்திரிகாலட்சணத்துக்கும் இசைவான வீட்டை, எய்யாது - இளப்பமாகி இளைத்துப்போகாமற்படிக்கு உறுதி உண்டாக்கி, எய்த உறுவார் - இன்ப சௌக்கிய திடகாத்திரமென்று சொல்லத் தக்கதான நன்மை கிடைத்திருப்பார்கள்.

## இரச பற்பம் - சங்க பற்பம் மகிமை

*சூதத் தடலைவலி சோபை கிரந்திசன்னி*
*சூதத் தடலைத் துரத்துமே - சூத*
*கசனிக ராத்திரிவல் காதுசங்கத் தூளங்*
*கசனக ராத்திரிய காண்.* 83

(சொ. பொ.) இரசபற்பத்தினது மகிமையும், சங்கபற்பத்தினது மகிமையும் சாங்கோபாங்கமாக விசிதத்துடன் கூறுதல் நுதலிற்று :- சூதத்து - நல்ல சுத்திகளாலே சிலாக்கியப்பட்ட இரசத்தினது, அடலை - பற்பத்துக்குண்டாகிய, வலி - பராக்கிரமத்தை விரித்துச் சொல்லிக்கொள்ளுமிடத்தில் என்ன செய்யுமென்றால், சோபை - சோக துக்கத்தைத் தரப்பட்டதான உறக்க வாதத்தையும் (உறங்குவாத மென்றும் பேர்) கிரந்தி - மேகரணங்களுடைய சம்பந்தமாகிய புண்ணையும், சிரங்கையும், கரப்பானையும், பருவையும், கட்டியையும், செவ்விய நிறச் செவ்வாப்பையும் ஆகிய இவை முதலான ரோகங்களையும், சன்னி - சீதள உட்டிண வல்லமையை உடைத்தான விடமித்த ரோகாதியனைத்தையும், சூதத்தடலை - பின்னேயும் வரப்பட்டதான சேட்ப முதலாக உற்பத்தியாய் மேலே திருட்டுத்தனமாகப் பண்ணப்பட்ட உபத்திரவத்தை எல்லாம் போக்கடிக்கும், துரத்துமே - மெய்யாய் அடித்துப்போட்டு நிற்காமற்படிக்குப் பண்ணும், சூதகசனி - சூதகசன்னியென்று பெண்களுக்கெல்லாம் மாதவிடாய் வருகிற தறுவாயிலே வந்து மெத்த மெத்தத்தானே துன்பத்தைப் பண்ணுமது எப்படிப்பட்ட தென்றால், கராத்திரிவல் - யானையைப்போலே இருக்கப்பட்ட வல்வாயான பிணியை, காது - சங்காரம் பண்ணுவதான, சங்கத்தூள் - சங்கபற்பமானது, அங்கசனிகர் - மன்மதனைப் போலே அழகைக்கொடுக்கும் புசித்த பேர்களுக்குப் பின்னும், ஆத்திரிய - மலையைப் போலவும் அதிகமான பலத்தையுங் கொடுக்கும். ஆதலால், காண் - செய்துண்டு அதனது மகிமைக் குணத்தைப் பார்.

## பவளம் - பலகறைப் பற்ப மகிமை

*சிந்துரத்துப் பாட்டலை சேர்காய வண்மையுண்டாம்*
*சிந்துரத்துப் பாட்டலைச் செய்யுமுன்னே - சிந்துரத்து*
*வைபோக மாகும் வராடியட லைமெய்க்கு*
*வைபோக மாகுமுயல் வாய்.* 84

(சொ. பொ.) இச்செய்யுள் பவள பற்பத்தினது மகிமையை உரைத்துப் பின்னால் பலகறைப் பற்பத்தினது மகிமையையுங் கூறுதல் நுதலிற்று :- சிந்துரத்து - ஒருவனுக்குக் கண்டமான சாரீரத்தினாலே சத்தசுரங்களிலே பேதா பேதங்களான பண்களாகிற ராக கீதங்களில் விகற்பத் தினுசுகளைக் கெட்டியாய்த் தொனி எழுப்பத் தக்கதாய்ப் பாடத் திராணியைக் கொடுக்கிறதும் அல்லாமற் பின்னும், பாட்டலை - பெருமையுண்டாகத் தானே தேக சவுக்கிய வல்லாண்மையையுங் கொடுக்கும். பின்னும், சேர்காய வண்மை யுண்டாம் - உண்மைப்படியே உடலுக்குறுதியான காய சித்தி உருவான நரைதிரை மூப்புச் சாக்காடென்று சொல்லப்பகுதியாகிய குற்றங்களெல்லாம் போய் வளப்பத்தைக் கொடுக்கும், சிந்துரத்துப் பாட்டலை செய்யு முன்னே - எப்போதிப்படிக் கெல்லாமாகு மென்றால் சிவந்த வண்ணத்தை யுடைத்தான பவளத்தினது பற்பத்தை வரிசைப்படிக்கு விவரமாகச் செய்தாகிறதற்கு முன்னே தானே என்னவே அதைப் புசித்துச் சாதித்தாலதனாலே வருகிற பலனைச் சொல்லவும் வேண்டியதுண்டோ? இல்லை சிந்துரத்து - ஒருவனுடைய உடலிலே இருந்து சிந்திப்போய் விடப்பட்டதாகிய பலத்தை யெல்லா மடிக்கப்பட்டது பாரித்ததான, வைபோக - கொடூர வன்கண்மையாயினவை நீங்கிப் போகவும், மா - பெருமித முண்டான, கும் - பூமியின் கண்ணிலே பேர் பெற்றிருக்கப்பட்ட, வராடி - பலகறையினுடைய, அடலை - பற்பத்தைச் செய்ய முறை தப்பாமல்படிக்குச் செய்து புசித்தால், மெய்க்கு - புசித்தவருடைய சரீரத்துக்கு, வைபோகம் - அதிகச் சந்துஷ்டியானது, ஆகும் - உண்டாய் இருக்கும் மிகவுமானபடியினாலே நீ இனிமேலைக்குறுதியாகவும், முயல்வாய் - உத்தியோகித்து அப்பேர்ப்பட்ட

பற்பத்தை எந்தவிதமாகச் செய்ய வேணுமோ அப்படிச் செய்து வைத்துக்கொண்டு புசிக்க வேண்டிய அனுபான முறைமைப்படி புசிப்பாய்.

## வெண்ணெய் பற்ப மகிமை

*காசமறு மேனிக் கழலையறுங் குட்டமறுங்*
*காசமறு மேனிவவாக் கண்பழகுங் - காச*
*நவநீதத் தாலுரைத்தே னண்ணு விபூதி*
*நவநீதத் தாலுரைத்தேன் நான்.* 85

(சொ. பொ.) இச்செய்யுள் புவனத்திலே அதிக நன்மை தருவதான வெண்ணெய்ப் பற்பத்தினது மகிமையைக் கூறுதல் நுதலிற்று :- காசமறு மேனி - ஒருவனுக்குச் சரீரத்திலே உண்டாய் இருக்கப்பட்ட காங்கை அதிகரித்த மேக உட்டிணத்தினாலே வருகிற காசரோகம் மாறிப் போய்விடும். பின்னேயும், கழலையறும் - வாதவெப்பத்தினாலே கபமானது மேலிட்டதனால் உண்டாகிற பொல்லாத புரைகுழலுரோகமும் அற்றுப்போய்விடும், பின்னும், குட்டமறும் - பதினெட்டுவிதத் துன்மார்க்கமான வெப்பவாத பித்த சேத்தும பந்த வித்தியாசமான சிரங்குகள், குட்டங்கள், கரப்பான், சொறிகளெல்லாம் கெட்டோடிப் பறந்துபோக உபாயத்தைச் செய்யும், காசமறும் - பின்னேயும் பூர்வமேக வெப்பப் பழுதினாலே வரப்பட்டதான மேகவூறலென்று சொல்லப்பட்ட தான வெண்மை, கறுமை, பொன்மையிலே பேதமான நிறங்க ளெல்லாம் நன்கு பிரகாசிக்கப்படுவதான தேகத்திலே உண்டானதெல்லாம் மேலே ஓங்கிவளராமல் அடங்கிப் போய்விடும், மேனிவவா - பின்னேயும் இனிமேலைக்கு வருவதான வியாதியின துற்பத்தியென்கிற ஆதாரமான வினைத் தொடர்ச்சிகளெல்லாம் அற்றுப்போம், கண்பழகும் - நேத்திரத்திலிருக்கப்பட்ட பயித்திய சலோதைய வேகத்தையடக்கி நல்ல ஒளியாகிய காந்தியைக் கொடுக்கத்தக்கின வழக்கத்தையே நித்தியப்படி வளரச்செய்யும். இவைகளெல்லாம் என்னத்தினாலே உண்டாமென்றால், காச - மாணிக்கத்தைப் போலே அருமையான, நவநீதத்தால் -

வெண்ணெயினாலே செய்யப்பட்டதான வஸ்து, உரைத்தேன் - தேய்க்கப்பட்டரசமாயிருக்கிறது. அது என்னவென்றால், நண்ணும் விபூதி - உண்டாகப்பட்ட பற்பம் அந்த விவரத்தை, நவநீதத்தால் - நூதனமார்க்கமான விவகாரப்படிக்கு, உரைத்தேன் - சொன்னேன், நான் - என்னுடைய புத்தியினாலெடுத்துப் பெரியோர்களுடைய மந்திரேசாதி, வாகடசாத்திர முன்னூற்படிக்கும் விவரமாகப் புவியோர்க்கெல்லாம் உபகாரமாகத் தக்கதாக.

## தாளகப் பற்ப மகிமை

*தாளகத்தை வெள்ளைத் தரமாக்கி யுண்ணுமட்டுந்*
*தாளகத்தை வெள்ளைத் தறிக்குமே - தாளகத்தை*
*மாற்றுங்க மாக்கினிய மாறவடுங் காரவல்லி*
*மாற்றுங்க மாக்கினிய மான்.* 86

(சொ. பொ.) இச்செய்யுள் தாளக பற்பத்தினது மகிமையைத் தைவந்த விவரமாகத் தொகுத்துக் கூறுதல் நுதலிற்று :- தாளகத்தை வெள்ளைத் தரமாக்கி - சுத்தி செய்துவைத்துக் கொண்டிருக்கப்பட்ட தாளகத்தைப் பற்பஞ் செய்யப்பட்ட கிரமப்படி தப்பாமற் பற்பம் பண்ணி வைத்துக்கொண்டு மேலே, உண்ணுமட்டும் - அனுபான வரிசைக் கிரமப்பிரகாரம் புசிக்க வேண்டிய பிரமாணத்துடனே புசித்துப் பத்தியப்படியே இருந்து நிலைமையா யிருக்கிறவரைக்கும், தாள் - வியாதிப் பிரயாசையான உபத்திரவத்தை மாத்திரம் பொறுத்துக் கொண்டு, அகத்து - மனத்திலே கிலேசம் வையாம லுறுதியாய் நம்பி இருக்க வேண்டிய திடமான உறுதியை நீ வைப்பாயாக, ஐவு - அதென்ன பண்ணுமென்றால் சேட்பகுணத் தீமையாகிச் சன்னிபாதம் முதலான பொல்லாங்குகளுடனே கூடின, எள்ளை - இகழ்ச்சியை யெல்லாம், தறிக்குமே - சேதித்துக் கவைக்கு வராமற் போகத்தக்கதாய்ப் பண்ணுவதுமல்லாமல் பின்னும் பலபிணிப் பெருக்கத்தை விருத்தியாகாமற் போகச்செய்யும், தாளகத்தை - வாதத்தோடே கூடின சேட்ப

மேலிட்டதனாலே அது பழம் பட்டபடியே புளிப்பேறிய சீரணப்பட்டது தானே பொங்கி யப்பாலே, மால் - மயக்கத்தை உண்டாக்கப்பட்ட உன்மத்த மார்க்க விபரீதாயாச மேலிட்டு வருந்துவதான, துங்கம் - வியாதிகளிலேயெல்லாம் முன்னாகச் சொல்லப்பட்ட மிருத்துவைப் பார்க்கிலும் பொல்லாததான, ஆக்கினியம் - நெருப்பைப் போலே அடுத்துத் தகிக்கப்பட்ட நளிர்காய்ச்சலென்று சொல்லப்பட்ட சீதசுரத்தையும், அதனது துர்மாய்கைகளை யெல்லாம், மாற - நீங்கிப்போய் விடும்படிக்குச் சங்காரம் பண்ணிப் போடும்.

அடும் - இன்பமாகத்தானே சேர்ந்திருக்கப்பட்டதான, காரவல்லி - பாகல்காய் அதனது இலை முதலானதுதான். அதற்குமேல் மாற்றானது வேறேயில்லையாம், மாற்றும் - அதுவே அந்த வேகத்தைத் தீர்க்கிற சஞ்சீவியாகையாலிந்த அவிழ்தவேக மிஞ்சின காலத்திலே கறியாகவாகிலும் பசு மருந்தாகவாகிலும் எப்படியாகிலும் புசித்தாலது நீங்கிப்போய் விடும், கமாக்கினி - சலதோஷத்தை உறுதியாக்கியதனாலே வளராநின்ற பொல்லாப்பான விபரீதத்தைமேலிடச்செய்து உயிர்ச்சேதம் வருவதாகச்செய்யுந் தோஷித்த சன்னிமரண மூர்ச்சைக் கன்னேர மிந்தத் தாளகப் பற்பத்தைத் தானே உள்ளுக்குக் கொடுத்து நசியமும் பண்ணிக் கலிக்கமும் பண்ணவேண்டிய பிரகாரம் பண்ணினாலிது என்னமாயிருக்குமென்றால், இயமான - அந்த ஆபத்து அனுமிதமான காலத்துக்கு நமனைப் போலேயிருந்து கொல்லுந் தடையில்லாமற்படிக்கு.

## கிளிஞ்சிற் பற்ப மகிமை

*ஏர லடலை யிலுமைந்தை யீயுமினி*
*ஏரலட லைநன்மை யெண்ணவே - ஏரல்*
*வனிதைவரா தேபுளிபால் வார்மோழை நீவ*
*வனிதைவரா தேநடந்து வாழ். 87*

(சொ. பொ.) இச்செய்யுள் கிளிஞ்சிற் பற்பத்தினது இலட்சணத்தையெல்லாம் விசிதமாகக் கூறுதல் நுதலிற்று.

யாதாமொருத்தர் பண்டித விசுவசத்துடனே நம்பி இதைக் கொண்டாலவர்களுக்கென்ன பலனுண்டாகுமென்றால், ஏர் - அழகும், அல் - அல்லாமலும் பின்னேயும், அடல் - பராக்கிரமத்தையும் கொடுக்குமது மெய்தான், ஐயிலுமைந்தை யீயும் - போசனத்தை நன்றாய்ப் புசிக்கத்தக்க பசித்தீபனத்தை உண்டாக்கிச்சீரணிக்கச் செய்யும் அப்படிச்செய்யவே நல்ல சாமர்த்திய முண்டாமென்பது சொல்லவேண்டியதில்லையென்பதாம், இனி - மேலுக்குறுதி ஒருவருக்குக் கூறவேண்டியதேயில்லை. தானே தெரியவரும், ஏரலடலை நன்மையெண்ணவே - கிளிஞ்சினாலே செய்யப்பட்ட பற்பத்தினது குணாதிசய இலட்சண மகிமையையெல்லாம் மனத்திலேஎண்ணி யோசனை பண்ணுகிறபோது பார்த்தாலது மெத்தத்தானே வளப்பத்தைக் காட்டுவிக்கும் எப்படி முன்னோர்களுடைய வாக்கிய சம்பந்தங்களினாலே, ஏரல் - பத்தியமாகிறதென்ன அகத்தியம் வேண்டியதென்றால், வனிதை வராதே - பெண் போகம் என்கிற காம இன்பத்தைக் கனவிலேயும் வராமற்படிக்குப் பத்திரமாய் இருக்கவேண்டியதொரு வேளை மனத்தினாலே எண்ணியவுடனே அது பெரிதாகிச் சொப்பனத்திலே முன் சாக்கிரத்திலிருந்தொரு பெண்ணுடனே கலவியின்பந்துய்த்தல் போலே காட்டி அமைச்சன் வினையத்தினாலே விந்து நட்டம் பண்ணச் செய்யும்படிக்குச்செய்யவே பத்தியபங்கம் வரும். எப்படிக்கப்படி யாகுமென்றால் உண்மைக் கலவியினால் எதிரியினது விந்து கைமாறுதலினால் பலமில்லை என்பது கருத்தாகலின் இவ்வாறு வற்புறுத்தி ஏகாரங் கொடுத்தார், புளி பால் - புளிப்புடனே கூடினபட்சணமான வஸ்துக்களென்னமோ அவைகளையெல்லாந் தள்ளவேண்டியது. அவைகள் எதற்கென்றால், வார் - மோர் தயிர், மோழை - புளிக் காடித் தண்ணீர், புளிக்குழம்பு இவைகள் என்னவிதமான பொருளெல்லாந் தள்ள வேண்டியதானபடியினாலே, நீவு - தள்ளிப் போட்டப்பாலே பின்னும், அவனிதை வராதே - பூமியின் கண்ணிலே பாதம் படாமற்படிக்குத் தைத்துத் தேய்வுபடத்தக்கதா யில்லாமற்படிக்கு, நடந்து - மெள்ளத் தேகம் அசங்காமற்படிக்குப் பாதம் வைத்து நடந்து, வாழ் - அப்படி வாழ வேண்டியது.

## உப்புப் பற்பத்தின் மகிமை

*ஆசீ ரணத்தை யடிக்கு மனலையண்மி*
*ஆசீ ரணத்தை யமுதாக்கி - ஆசீரப்*
*பொன்மனையி னையுப்புப் பற்பமீந்து பின்னுமே*
*பொன்மனையி னையொப்பு மால்.* 88

(சொ. பொ.) இச்செய்யுள் உப்புப் பற்பத்தினது மகிமைக் குணத்தைக் கூறுதல் நுதலிற்று.

ஆசீரணத்தை - ஒருவனுக்கு முன்னமே பசி மந்தப்பட்டதனாலே சீரணிக்கிற குணங்கொஞ்சமாகிலும் இல்லாமல் படிக்கு எப்போதும் வியாதியை யுண்டாக்கப்பட்டதான குற்றத்தை, அடிக்கும் - சங்காரம் பண்ணிப் போடும், அனலையண்மி - பின்னேயும் அனலான சுரத்தைத் தானே அடுகத்தினாலே பயித்திய சன்னிக் குடிலத்தைப் பண்ணப்பட்ட வியாதிகளையும் அடித்துப்போட்டு விடும், ஆசீர் - பின்னேயுமெப்படி இருக்குமென்றால் மேலான பெரியோர்களுடைய ஸ்திரம் பொருந்திய ஆசீர்வாதத்தைப் பொருந்திய நன்மையைப் போலே அதிகப்பலன் வரத்தக்கதாய், அணத்தை - மேல் வாய்ப்புறம் பொருந்திய வுண்ணாக்கின் வழியாகத் தினமு முன்னோ ரனுக்கிரகப்படியே ஊறிப் பசி முதலான துன்பங்களெல்லாம் மாறிப் போகத்தானே, அமுதாக்கி - தேவாமுர்த சஞ்சீவியை ஊறத்தக்கதாகச் செய்து, பின்னமே அதிகமாயென்ன செய்யுமென்றால், ஆசு - தேகத்திலே உண்டாய வருத்தப் படப் பிறவித் துன்பத்துடன் கூடின பிணிமூப்புச் சாக்காடு முதலான குற்றமெல்லாம் மாறிப் பொருமி வளர வருவதான துர்க்குணங்கள், சீர - அத்துப்போகத் தக்கதாய்த் தானே முன்னே எதிர்த்துக் கொண்டு, பொன் மனையினை - ஒருவனுக்குத் தன் பெண்சாதியாகிய பாரியாளுடனே கூடிப் புணர்ச்சியாகிய போகத்தை அனுபவிக்கப் பருவமில்லாமற் படிக்குப் போய் விட்டதாகிய இலேபனம் என்கிற குணம் அணுவளவாகிலும் இல்லாமற் போய்விட்டத்தை மறுபடியும் வரத்தக்கதான திடகாத்திர சம்பந்தப்பட்டதை, உப்புப்பற்ப மீந்து - சுத்தி

செய்து வைத்துக்கொண்டிருக்க நின்மலமான இலவணப் பேரைப் பொருந்திய உப்பைச் செய்யத்தகுமானபடிக்குச் செய்த பற்பத்தைக் கொண்டு கிரமப்பிரகாரமிருந்தா லதுகொடுக்கும் என்னவென்றால் உப்புப் பற்பமானது, பின்னும் - பின்னேயும் அந்த உப்புப் பற்பமானது. பொன் மனையினையொப்பும் - பிரளய காலத்திலே புறப்பட்டுச் சகல பிராணிகளையும் வதைக்கத்தக்க பொல்லாத நமனைப்போலே அதிக உக்கிரமாகத்தானே துன்ப வியாதியினது உபத்திரவத்தை எல்லாம் ஒருக்காலே ஓட்டித் துரத்திவிடும்.

## காண்டாமிருக மருப்பு பற்ப மகிமை
## கலைமான் மருப்பு பற்ப மகிமை

*காண்டா மிருகசிருங் கப்பொடியை எப்படியுங்*
*காண்டா மிருகசிருங் கட்டறவே - காண்டா*
*மறிக்கோடு மேற்படிகா மாலைவெட்டை மேக*
*மறிக்கோடு மேற்படி நூன் மை.* 89

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் காண்டா மிருக மருப்பினது பற்ப மகிமையையும் கலைமான் மருப்பினது பற்ப மகிமையையும் கூறுதல் நுதலிற்று.

காண்டாமிருக சிருங்கப் பொடியை - காண்டா மிருக மென்று சொல்லப்பட்ட மிருகத்தினது கொம்பைப் பண்ணப்பட்ட கிரமப் பிரகாரம் பண்ணுவதான பற்பத்தை நீ, எப்படியும் - எந்த விதத்திலேயாகிலும் பிரயாசைப்பட்டு அருமையாகத் தானே, காண் - பண்ணியதனது குணாதிசய விசேஷங்களை எல்லாம் நன்றாய் அறிந்து பார்க்கவேண்டிய கடமை உனக்கே, தாம் - அப்பாலே அந்த மருந்தின் வேகத் தொடர்ச்சியானது பாய்ந்து பரவிப் பிரபலமாய், இரு - இரண்டுவிதமான இயற்கைப் பிணிஎன்கிற வளி முதலான மூன்று அவைகளில் வழிப்பிறப்புடைய நோய்களும் செயற்கைப் பிணியான வித்தியாச மருந்தினது வெப்பப் பொல்லாங்குகள் மருந்தீடுகள் இவையெல்லாம்,

கசிரும் - இப்பேர்ப்பட்ட உபத்திரவங்களெல்லாம், கட்டறவே - பந்தமில்லாமல் வேறே வேறே அற்றுப்போய்விடத் தக்கதாய், காண்டாம் - நீரினது பேர்பெற்ற மீமிசைப் பொருளுண்டான குணமாயிருக்கும் வேறே ஒருவிதமான, மறிக்கோடும் - கலைமானினது கொம்பையும் பண்ணுகிற கிரமப்படிக்கு, மேற்படி - முன்னே காண்டா மிருகத்தினது கொம்பை எப்படி என்னவிதமாய்ப் பற்பம்பண்ணின உபாயமோ அப்படித்தானே பற்பத்தைப்பண்ணி, காமாலை - காமாலை களங்கைகளையும், வெட்டை - காங்கைப்படியான ரோகங்களையும், மேகம் - மேகப் பெருக்கமான ரோகங்களையும், மறிக்கோடும் - முறிஞ்சு பறந்து பயந்து வெட்கிப் போய்விடும். அதற்குச் சமுசயமில்லை, ஏல் - அப்படிக்கு நான் சொன்னபடியே அனுமான மில்லாமற்படிக்குப் பற்றற்றுப் போய்விடும் ஆதலினால் அதை அறிந்து கொள்வையேயானால் அதன் பிற்பாடு, படி - வாசித்துப் பார்த்துப் பண்பாகத்தானே, நூன்மை - வாகட சாத்திரத்தின் வன்மையை.

## அயச் செந்தூர மகிமை

*காசிக்குச் சேதுநமன் காட்சியது போற்சேட்ப*
*காசிக்குச் சேதுநமன் காணயன்ம - காசிக்குப்*
*பண்ண வனேகப் பயிற்சியது பண்ணினக்காற்*
*பண்ணவனே யாகுமது பார்.* 90

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச்செய்யுள் வெண்பா வென்னு தலிற்றோவெனில் அயச் செந்தூர மகிமையைக் கூறுதல் நுதலிற்று.

காசிக்கு - விசுவநாதராலே மகத்துவ முண்டாய் இருக்கப்பட்ட உத்தம கங்காநதி சூழ்ந்திருக்கப்பட்ட காசியைப் பார்க்கிலும், சேது - இராமர் திருவணை இராவண சங்காரம் பண்ணுகிற நிமித்தியம் சமுத்திரத்திற்கட்டிய தானத்திலே மறுபடி பிரமசாயை நீங்கும் பொருட்டுச் சிவலிங்கப் பிரதிட்டை பண்ணின இராமேஸ்வரம் அதிகப்பலன் கிடைக்கும், நமன் - நம்முடைய கர்த்தாவான பரம சிவனுக்குரித்தான

பேர்பெற்றவர்களுக்கு, காட்சி - தெய்வ தெரிசனக் கடாட்ச வீட்சண்ணிய நன்மைப்பலன், அதுபோல் - அந்தவுபமான சம்பிரதாய விவரம் எப்படியோ அப்படிப்போல உரைக்கப்பட்டதான உதாரணத்தைப் போலவும், சேட்ப காசிக்கு - சேட்பத்தைப் பொருந்திய உட்டிணத்தினது சம்பந்த மார்க்கப் பிரட்டினால் நேரிட்டடங்காமல் வரவர நாளுக்கு நாள் வளர்ந்து உடலிலே ஆவியுடனே தேய்ந்து பலங்குறைந்து போகத்தக்க தாய் வாயினாற் சந்தி இரத்தத்தையுங் கக்கிக் கொண்டுடனே மூர்ச்சையையுங் காட்டப்பட்ட பொல்லாத ரோகத்துக்கு, சேது - சிவந்த நிறமென் றுரிப்பெயருக்குப் பரிகாரப்பெயராக எடுத்துரைக்கப்பட்ட செந்தூரமென்ன அயச்செந்தூரம் பண்ணுகிற பிரமாணப்படிக்குப் பண்ணிப்புசிக்க வேண்டிய முறைப்படிக்குப் புசித்தால், நமன் - எமனைப்போலே புறப்பட்டு முன்னேசொன்ன வியாதிகளையெல்லாஞ் சங்காரம் பண்ணிப் போடும், அதற்குச் சமுசயமில்லை.

காண் - அப்பா நீ எப்படியும் அப்படிச் சொல்லப்பட்ட அயச்செந்தூரத்தை முறைப்படிசெய்து பிறகு அதனது பலத்தை வேணுமென்றால் பார், அயன் - இரும்பிலே முன்னே செந்தூரத்தை வழுவாதபடிக்குப் பண்ணுகிறது.

மகா - பெரிதாகிய அருமைப்பாட்டுடனே கூடின, சிக்கு - பிரயாசத்தைத் தரப்பட்டதானபடியினாலே பின்னேயும் வெகுவாகத்தானே, பண்ண - அப்பேர்ப்பட்ட அயச்செந்தூரத்தைச்செய்ய வேணுமென்றால் அதற்கு, அநேக வெகுவான தொந்தரவுகளுக்கு முயலவேண்டிய, பயிற்சி - சாதகம் பண்ணிக்கொண்டு கை முறைதவறாமற்படி வழக்கப்படுத்திக்கொள்ளவேண்டிய பிரயாசங் களுண்டாயிருக்கும். ஆனபடியினாலே, அது அந்த அயச் செந்தூரத்தை எப்படிப்பட்ட பிரயத்தனத்திலேயாகிலும், பண்ணினக்கால் - எந்த மார்க்கத்திலேயாவது பழுது வராமல் சாக்கிரதையுடனே மகிமையும் பரிபக்குவ நன்மையும் உண்டாகத்தக்கதாய்ப் பண்ணி வைத்துக்கொண்டு நோய்கள் வமிசமென்று சொல்லப்பட்ட பொல்லாத பகைத் திறத்தை எல்லா மொருக்காலே எச்ச மிராமற்படிக்குச் செயிக்கிய வேண்டிய முயற்சியைப் பண்ணிக் கொண்டிருக்கப்பட்ட பண்டிதனென்கிற புருஷசிங்கம் எவனோ

அவனெவனென்று வித்தியா முன்னிலையாக மனத்திலே அனுமானப்பட்டிருக்கவுமாமோ அப்படிக்கெல்லாந் தேவையில்லை, பண்ணவனேயாகும் - அவன் மேம்பாட்டிலே அதிக நிருவாகியாயிருக்கப்பட்ட தெய்வச் சாதியிலே அதிக விக்கிரம விசயம் பெற்றிருக்கப்பட்டவருதய திவ்யாஸ்திர சம்பன்னனான அஷ்ட வசுக்களிலே யாவது ஒன்பதுவகைக் கோள்களிலேயாவது லட்சியப் பட்டிருக்கிறதொரு தேனென்று பேராகச் சொல்லிக்கொள்ள வேணுமே தவிர வேறேயொன்றுமில்லை, அது பார் - அந்த விவரத்தைத்தான் உன்னுடைய புத்தியால் யோசனை பண்ணிப் பார்த்தப்பாலே இன்னான் சொன்னது மெய்தானென்று என் சொல்லை நம்புவாய்.

## காந்தச் செந்தூர மகிமை

*ஏகாந்தச் செம்மை யெவர்க்குநன்மை யப்படிமெய்*
*ஏகாந்தச் செம்மை யினிதாகி - ஏகாந்த*
*வாசியுல வைவரா தெப்பிணி யையுமெய்*
*வாசியுல வையறி வாய்.* 91

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா எந்நுதலிற்றோவெனின் காந்தச் செந்தூர மகிமையைக் கூறுதல் நுதலிற்று.

ஏகாந்தச் செம்மை - மகத்துவம் பொருந்திய யோகிகளுக்குள்ளே அதிகமான மகிமை பொருந்தினவர்கள் தனியே இருக்கப்பட்ட செவ்விதான மனவெழுச்சியாகிய மனோலயத்தினது சவுக்கியம் எப்படியும் நல்லவர்களாலே நியமிக்கப்பட்டதான உண்மைப்பொருளானது, எவர்க்கும் - எப்பேர்ப்பட்டவர்களுக்கும், நன்மை - நல்ல இலக்கணத்தை உண்டாக்கிக்காண்பிக்கும் ஆனபடியினாலே, அப்படி - அந்தப் பிரகாரமே, மெய்யே - நான் சொல்லுகிறது உண்மைதான் வேறேயன்று, காந்தச்செம்மை - இத்தனை வண்ணனையுதாரணங்கள் சொன்னதும் வேறொன்றினது பொருட்டன்று. காந்தச்செந்தூரத்தினது பெருமையே,

யஃதானது. பின்னும், இனிதாகி - அதிசயமாகத்தானே அந்த வகையாய் இருக்கப்பட்ட காந்தச்செந்தூரத்தைக்கொண்ட பேர்க்கு நித்தியத் துவத்தை என்னபிமாகக் கொடுக்குமென்றால், ஏகாந்த - முடிவாகிய ஆட்சியைத் தரப்பட்ட இறுதியாகிய மரணமில்லாமற் போக்கத்தக்கதான, வாசி - மேலான பரப்பிரம்மமான வத்து நிலைமையை அறியப்பட்ட பேரறிவைத்தானே தூண்டுதல் செய்யாநின்ற புத்தியைக் கூர்மை செய்து, உலவை - தெய்வீக மகிமை முதலானது உறுதியாகத்தானே இருக்கப்பட்டதான நன்மை கெட்டுப் போகிறது ஒருக்காலும், வராது - வரமாட்டது, மேலே பின்னேயும் ஒருவிதத்தில் வேதகமான வினைகளுவமானத்துக்கும் வருகிறதில்லை.

எப்பிணியையும் - பின்னும் பலப்பல விதமான பிணிக் கூட்டத்தினது பந்தங்களையும் அணுகவொட்டாது, மெய்வாசி - சரீரத்தின் கண்ணிலே என்றைக்கு இன்ப சவுக்கியத்தினது குணத்தைத்தானே காட்டிக்கொண்டு வரு மெய்யாய்த்தானே இதற்குக்கொஞ்சமாகிலும், உலவையறிவாய் - வாதநாடியென்றும், பித்தநாடியென்றும் சேட்பநாடியென்றும், வரிசைக்கிரமமாகச் சொல்லப்பட்ட நாடிகளினது குணம் மூன்றிலே அந்தந்த நாடிகளுக்குண்டான விதங்கள் மூன்றையும் பண்டிதனால் பார்க்கப்பட்ட காலத்திலே தத்தமது நடைகள் பிறழாமற்படிக்கு நடக்கிறதென்று சொல்லிக்கொள்ளத்தக்கதாகவும் மேலே அரசனென்று சொல்லப்பட்ட வாதமே எப்போதும் அமைச்சனான பித்தநாடி நடக்கிற காலத்திலேயும் பின்னும் படைத்தலைவனான சேத்துமநாடி நடக்கிற காலத்திலேயும் வந்து வந்து அனுகரணமாகப் பின்னல் பின்னுகிறது போலே கலந்தபோதைக்கும் பூலோகத்திலே அரசாட்சி செலுத்துமிடத்தில் அரசன் பேரவைக் கண்ணிலிருந்துழி அமைச்சன் படைத்தலைவன் வந்து தன்னையடுத்த காலத்திலேயும் அவரவர்களுடைய தராதரமறிந்து அவரவர்களுக்கெவ்வளவு தனதருள் வழங்கிக்கலந்து கொண்டவர்களால் தானது செங்கோண்மை அதிகாரத்தைக் காட்டவேணுமோ அம்மாத்திரம் காட்டுவது போலே

வாதமும் பித்தத்துடனேயும் கபத்துடனேயும் கலந்து நடக்கும்படி நடந்தால் அல்லலில்லை. என்றைக்குமொரு நிலையாகச் சரீரமிருக்கு மென்பது வாகட சாத்திரத்தின் துணிவு. நீ அந்த மார்க்கத்தை நன்றாய்ப் பகுத்தறிந்து கொள்ள வேண்டியது.

## தங்கச் செந்தூர மகிமை

*அருத்தா ருணமே யதிபல மெய்க்கா*
*யருத்தா ருணமே யரந்தை - யருத்தா*
*முயல்வாயை யானை மூலவலிக் காலை*
*முயல்வாயை யாவதையே முன்.* 92

(சொ. பொ.) இத்தலைச் சூத்திர வெண்பாச்செய்யுள் என்னுதலிற்றோ வெனின் தங்கச் செந்தூரத்தினது மகிமையைக் கூறுதல் நுதலிற்று. (எப்படியென்றால் - வரலாறு)

அருத்து - வயித்திய சிலாக்கியம் பெற்று இருக்கப்பட்ட நல்ல இலக்கணங்களுண்டான பண்டிதனே, உனக்கு நான் சொல்லுகிறேன். புத்தியாகக் கேட்டு நடந்து கொள்ள வேண்டிய தென்ன வென்றால் உன்னால் பண்ணப்பட்ட நூதனச் செய்கையான எப்பேர்ப்பட்ட அவிழ்தத்தையும் பண்ணின நீ ஒருவருடலினது குணத்தை யறியாமல் முன்னே அவிழ்தத்தினது வேகத்தையும் சாந்தத்தையு மறியாமல் கொடாதே. அறிந்து பகுத்து நிதானித்துப் பிறகு கொடு, ஆர் - நீயுமுன்னே உன்னுடைய வாயினாலே உண்டுபார், உண் - நீ எப்படி நித்தியமும் புசிப்பைப் புசிப்பையோ அப்படி, மெய் - நான் மெய்யா யுண்மையாகச் சொல்லிப் பிரமாணமுஞ் சொல்லுகிறேன், அதிக பலம் - மிகுந்த பராக்கிரமத்தை அனுகூலமாகத் தானே தரப்பட்டது, மெய்க்கு - உடலுக்குறு தியாக வாத பித்த சேத்துமமான மூன்று நாடிகளுக்கு மிசைவாகி ஒன்றுக்கொன்று வித்தியாசமில்லாமல் சமரசப்பட்டிருக்கும். அப்படி இருக்கவே மனிதருடைய சரீரத்துக்கு ஒரு தொந்தரவும்

இல்லாமல் இருக்கும். வேறே அவிழ்தம் இருக்கத் தேவையில்லை. வாதம் முதலான மூன்றும் ஒத்திருக்குமே யானால்.

*'மிகினுங் குறையினும் நோய்செய்யும் நூலோர்*
*வளிமுதலா வெண்ணிய மூன் று.'*

இப்படி யுதாரண மேலோர் சொல்லப்பட்ட முன்னூல்களிலேயும் எடுத்துக் கூறினாராகையால், ஆய - ஆனபடியினாலே நீ அந்த வழியையெல்லாம் நன்றாய் விசாரணை பண்ணுவாயாக, என்பதாம். அருத்தாருணமே - அது எதுவோ என்று மயங்க வேண்டியதில்லை, தங்கமென்று சொல்லப்பட்ட பொன்னினுடைய செந்தூரத்தைப் பண்ணி அதனுடைய பலத்தையறிந்து கொள்ளச் சொல்லுகிறது, பின்னே வேறே ஒன்றுமன்று என்பதாம், அரந்தை - பிணிகளுடைய உபத்திரவமெல்லாம் கெட்டுப் போய்விடுமாதலினால், அருத்தா - சண்டையில்லாம லடங்கி யொடுங்கிப் போகத்தக்கதாய், முயல் வாய் - முயலினது முன்னே எதிரிலே வந்து நேர்ப்பட்டதான, ஐயானனம் - சிங்கத்தைப் போலே பட்சணம் பண்ணிப் போடத்தக்கதான வன்கண்மையுங் குரூரமும் பாய்ச்சலுமுண்டாயிருக்கும், மூலவலிக்காலை - மூலப்பிணியென்று சொல்லப்பட்ட பொல்லாத நோயுபத்திரவத்தினது விபரீதத்தையே தரப்பட்டதான வாதப் பரிவாரமான வருக்கப்பிணிக் கூட்டங்களை எல்லாம் ஒருக்காலே ஒருமிக்கத் தான் வளைத்துக் கொண்டு கொஞ்சமாகிலும் கிருபையென்பதில்லாமற்படிக்குச் சங்காரம் பண்ணிப்போடும் ஆனபடியினாலே நீ தாமசமென்கிற ஆலசியம் பண்ணாமல் சீக்கிரமாக, முயல்வாய் - அந்த முறையான தங்கச் செந்தூரத்தைப் பண்ணவேண்டிய நன்மையுடனே பண்ணிவைத்துக் கொள்ளுகிறதற்குப் பிரயத்தனத்தைப் பண்ணவேண்டியது. ஐயா - என் மனதுக்கிசைவான பிள்ளைக்கு நிகரான சீடனே நான் சொல்லினதைக் கேள், அதையே முன் - நீ அந்தக் காரியத்தைத்தானே கங்கணங் கட்டிக்கொண்டு உறுதியாய்ப் பண்ண வேண்டியது.

## இரசிதச் (வெள்ளி) செந்தூரத்தின் மகிமை

*செவ்வெண்மையானாத தீவினைமூன் றாதிமற் றுஞ்*
*செவ்வெண்மை யானாத சீர னுக்குஞ் - செவ்வெண்மை*
*சிந்திப்பொங் காரகமுந் தெய்வவெள்ளிச் சிந் தூரம்*
*சிந்திப்பொங் காரகமுந் தேர். 93*

(சொ. பொ.) இத்தலைச் சூத்திர வெண்பாச் செய்யுள் என்னுதலிற்றோ வெனின் இரசிதமென்கிற பேர் பெற்ற வெள்ளியினது செந்தூரத்தினது மகிமையைக் கூறுதல் நுதலிற்று.

செவ்வெண்மையால் - நல்ல இலக்கணச் சம்பிரதாயமான மரபிலே வழங்கப்பட்ட தொருகணக்கிலே அகப்பட்டதான தொகை மூன்றான வாதமென்றும். பித்தமென்றும், சேத்தும மென்றும், சொல்லப்பட்ட எண்ணிக்கையிலே, நாத - ராசன், மந்திரி, சேனாபதி என்று சொல்லும் வகையான, தீவினை - பொல்லாத வியாதிகளெல்லாம் பிறக்கத்தகும், மூன்றாதி மற்றும் - முதற்பிணிகள் மூன்றும் அதன் வழியாக வரப்பட்ட பின்னும் அநேகம் அநேகம் பிணிக்கூட்டங்களெல்லாம் பற்றற்றுப் போய்ப்பின்னும், செவ்வெண்மை யானாத சீரனுக்கும் - பிணிகளெல்லாம் ஏழையாகத்தானே அடங்கிப் போய்விடவும் மேலே மாறுபாடில்லாமற்படிக்கு உடலிலே செவ்விதான சவுக்கியம் பிரியாமல் என்னேரமும் மிகுந்திருக்கத்தக்கதான பாக்கிய சம்பத்துண்டாய் இருக்கும். மென்மேலும் வன்மை யுண்டாம்படிக்கு அதிகப் பலனுண்டாம், செவ்வெண்மை - பயித்திய வியாதியும், வாதவியாதியுங் கபமான சேத்துமவியாதியு மிந்தமூன்று வியாதிகளும் ஒவ்வாமல் ஒன்றுக்கொன்று வித்தியாச விபரீதச் சல்லியத் தொந்தரவு அவதி மிஞ்சியதனாலே அங்கமெல்லாம் பொங்கி மேலே வெளிப்பட்ட காங்கு பொங்கிவழிந்தால் அதன் மேலே படிந்த நீரின் வண்ண மெப்படிப் பற்றி இருக்கும் அப்படித்தேமல் தேமலாய் இருக்கப்பட்ட செங்குட்டமும் வெண்குட்டமும் கருங்குட்டமுமான பொல்லாப்பிணிகள் எப்பேர்ப்பட்டதும் பறந்து போய்விடும். மற்றும், பேதங்களான தெல்லாம் போய்விடும்,

சிந்திப்பொங்காரகமும் - அந்தட்சணமே மேக வெட்டையினால் வரப்பட்டகாரகக் காங்கைகளெல்லாம் இறைஞ்சு வகை வகையாய்ப்பறந்து போய்விடும்.

பின்னும் விபரீதமாகத் தானே அதையடுத்த நோய்களெல்லாம் பறந்து சிதறிப் போய்விடும், தெய்வ - மகிமையும் நன்மையும் படைத்திருக்கப்பட்டதான, வெள்ளிச்சிந்தூரம் - வெள்ளியினாலே அருமையாய்ப் பண்ணவேண்டிய முறைப்படி பண்ணப்பட்ட அரிதாகிய இரசிதச் செந்தூரத்தை, சிந்திப்போம் - மனதினாலே பரதேவதையை ஒருவன் எப்படித் தியானம் பண்ணிக் கடைத்தேறிப்போவானோ அப்படி நாமும் மனத்திலே அந்தத் தேவாமுர்த சஞ்சீவியைப்போலே நினைக்கத்தக்க உபகாரத்தைப்பண்ணும் ஆன படியினாலே, காரகமும் - ஞாபகமும் அல்லாமற் பின்னும் பண்ண வேண்டிய கருவி கருத்தா முறைப் பிரகாரம் பண்பாக நீயறிந்து கொள்ள வேண்டிய முறைப்படியே உனக்குக் கேட்ட வினாவுக்குத் திரும்பப் பிறழாமல் சொல்லப்பட்ட தேசிகனாலே கேட்டறிந்து கொண்டு, தேர் - விசாரணை பண்ணி அறிந்து கொள்வாய்.

## தாம்பிரச் செந்தூர மகிமை

*செப்பருண வாகைச் செயமாமன் மீளிமுன்னர்*
*செப்பருண வாகைவரச் செய்வதுமெய் - செப்பருணங்*
*கொண்டலையார் வைகக் குளிர்ச்சியுறும் நன்மைக்குக்*
*கொண்டலையார் சொல்வரெண்ணுங் கொள்.* 94

(சொ. பொ.) இத்தலைச் சூத்திர வெண்பாச் செய்யுள் என்னுதலிற்றோவெனின் தாம்பிரம் என்கிற கீர்வாணப் பெயர் பெற்றிருக்கப்பட்ட செம்பினது செந்தூர மகிமையைக் கூறுதனுதலிற்று. எப்படி என்றால், வரலாறு பண்டிதருடைய கூட்டத்தைப் பார்த்துச் சொல்லுகின்ற முன்னிலே.

செப்பருணவாகை - செப்பென்பதற்குச் செப்பென்கிறது விகாரம் அப்பேர்ப்பட்ட செம்பினாற் செய்யப்பட்ட செந்தூரத்தின் மேம்பாடு பொருந்திய அவிழ்தத்தினாலே செயங் கொள்ளத்தக்கின வண்மையைப் பிரயோகம் பண்ணுகிற வயித்தியனுக்குக் கொடுக்கும் பின்னும். செயமாம் - வாதத்தாலே உற்பத்தியான காச நோயையும், பித்தத்தாலே உற்பத்தியான காச நோயையும், சேட்பத்திலே உற்பத்தியான காச நோயையும் பறந்து போய்விடச் செய்யும் பின்னும். மன் - அரசனான வாதத்தின் முன்னேயும், மீளி - சேட்பத்தின் முன்னேயும் நமனைப்போலே அடித்து உயிரை எப்படி வதைக்குமோ அப்படியடித்து வினைகளை யொழிக்கும், ஆகையால், செப்பர் - பாரபட்சமில்லாமற்படிக்கு வழக்குகளைத் தீர்க்கப்பட்ட பேர்களுக்கு மத்திய தர்மகர்த்தர்களென்று பேர் செப்பரென்னும் பேரான படியினாலே அப்பேர்ப்பட்ட நடுநிலைமையான பேர்களுக்கும் உண்ணத்தகுமான, உணவாகை - புசிக்கத்தக்க யோக்கியமாகச் செய்தல் ஒருவனுக்கு நன்றாய்க் கிடைக்குமேயாகில், வரச்செய்வது மெய் - வரப்பிரசாத நன்மையினாலே ஒரு தெய்வ மகிமையுண்டான வாளிகளைப் பெற்றுக் கையிலே ஒரு காலத்திலே ஒரு பகையாளியைக் கொல்ல வேண்டிய நிமித்தமாக வைத்திருக்கிற பாவனையாய்ச் சரீரத்திலே யுண்டான வியாதிக் கூட்டங்களான சத்துருக்களைச் சங்காரம் பண்ணவேண்டிய காலத்தில் எப்படி உவமானம் உண்டாக்கத தக்கதாய்ச் சங்காரம் பண்ணப்படும் என்றால், செப்பரும்- உவமிக்கப் பட்ட பெரியோர்களாலே எடுத்து உவமானமாகச் சொல்லப்பட்ட புலியினது வாயிலே அகப்பட்ட மானைப்போலே நோய் என்கிற மான் அவிழ்த மென்கிற புலியின் கையிலே அகப்பட்டிறந்து போம்.

கொண்டலையார் - இப்பேர்ப்பட்ட அவிழ்தத்தையுண்ட பேர்கள் வியாதிகளுடைய சஞ்சலப் பேயை மேற்கொண்டதனாலே சரீரவெப்பத்தினால் அலைச்சல் பட்டார்கள். வைகக்குளிர்ச்சியுறும் நன்மைக்கு - சவுக்கியமாய் உயிர்நிலையாகிய தேகத்திலே உரமாக உயிர் கூடி வாழத்தக்கதான தட்பத்தைக் கொடுக்கும் இடத்திலே அதிலுண்டாகி நல்ல உண்மையான குளிர்ச்சிச் சுகத்துக்கு உவமானமாகச்

சொல்ல வேணுமென்றால் கற்பனை சொல்லுகிற பேர்கள் உலகத்திலே திஷ்டாந்திரமான சாட்சியாய்க் காட்சியளவையாய்க் காணப்பட்டதான ரூபகப்பட்ட, கொண்டலை - நீருண்ட - காளமேகமானது எப்படிக் கோடை வெப்பத்தினாலே வாடிப் போன பயிரை எப்படி ரட்சிக்குமோ அப்படிப்பிணியாகிய கோடை வெப்பத்தினாலே வாடிய உயிராகிய பயிர்கள்வாடிப்போகாமல் அவிழ்தமென்கிற வருஷத்தை வருஷித்துச் சீதளத்தை உண்டாக்கப்பட்ட நன்மையைப் பார்க்கு மிடத்திலே, ஆர்சொல்வ ரெண்ணுங் கொள் - உலகத்திலெப்பேர்ப்பட்ட பேர்களும் எண்ணிப் பெருமிதமாகச் சொல்ல மாட்டார்கள். இந்த அவிழ்தத்தையே பெரும்பான்மையாகச் சொல்லிக் கொள்ளுவார்கள். சிறுபான்மை மேகத்தைச் சொல்லுவர், அதை நன்றாயாலோசனை பண்ணி அறிந்து கொள்ளுங்கள்.

## வங்கச் செந்தூர மகிமை

*ஈயத் தருண மெவரு முணவிரும்பி*
*ஈயத் தருண மிறையமைச்சை - ஈய*
*தரத்தை யுறழிடையைத் தப்பாதுண் கொண்ட*
*தரத்தையுற வின்றிமைந் தா.* 95

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா என்னுதலிற்றோவெனின் வங்கமென்கிற கீர்வாணப் பெயரைப் பெற்றிருக்கப்பட்டதான ஈயத்தினது செந்தூர மகிமையைக் கூறுதனுதலிற்று. இது சீடனை முன்னிலையாக வைத்துச் சொல்கிறார் எப்படி என்றால், வரலாறு.

ஈய - பண்டிதனான வயித்திய சிலாக்கியம் படைத்த வயித்தியன் பிணியாளனான மாணாக்கன் என்கிற சீடனுக்குப் பிணியினது குணாதிசயங்களை யெல்லாம் பலப்பல விதமான பரிட்சைகளாலே அறிந்துகொண்டு அதன் பிறகு அதற்கேற்ற படியான மருந்துகளையறிந்து

கொடுக்கவேண்டிய போது, தருணம் - சமயத்தை நன்றாய் விசாரணை பண்ணிக்கொண்டு மேலே காலமென்றுந் தேசமென்றும் வர்த்தமானமென்றும் பிரித்துச் சொல்லப்பட்ட மூன்றும் லௌகீகமென்கிற லோக வழக்கமும் வைதீக மென்கிற வேதமார்க் கவழக்கமும் பார்த்துக்கொண்டு, எவரும் - எப்பேர்ப்பட்டவர்களும் மனம் நன்றாய் அனுகூலத்துடனே இசைவாகி, உண - புசிக்கத்தக்கதாய், விரும்பி - மன ஆசையான நன்மையை உட்கொண்டதனாலே, ஈயத்தருணம் - அது எப்பேர்ப்பட்ட அவிழ்தம் எப்பேர்ப்பட்ட காலமென்று பலப்பலயோசனை பண்ணவேண்டாம். வங்கமென்கிற ஈயத்தினது செந்தூரத்தையே மேன்மையாகப் பண்ணவேண்டிய முறைப்படி யெப்படிப் பண்ண வேண்டுமோ அப்படிப் பண்ணிக் கொண்டு அந்த அவிழ்தத்தை, இறை - அரசனான வாதத்தையும், அமைச்சை - மந்திரியான பித்தத்தையும் வசப்படுத்திக்கொண்டு அதனுடைய பொல்லாங்கையும் நன்மைப்படுத்திப் பொறுமையைக் கொடுக்கும் ஆனபடியினாலே, ஈயதரத்தை - அப்பேர்ப்பட்ட வங்கச் செந்தூரம் என்கிற அவிழ்தத்தை எவ்வளவு புசிக்க வேண்டியதென்றால் பறக்கப்பட்ட பறவையிலே சிறுத்த பறவையான ஈயினது சிறுத்த உதட்டைப் பிரமாணமாகச் சொல்லியது எவ்வளவோ அவ்வளவு மாத்திரம், உறழெடையை - ஒப்புச் சொல்லத்தக்கதாகிய பிரமாண முடைய நிறையை நிறுத்துக்கொண்டு அம்மாத்திரம் அவிழ்தத்தினை, தப்பாது - பிசகிப் போகாமற்படிக்கு, உண் - மேலே சொன்ன அவிழ்தத்தை நீ புசிக்கவேண்டியது, கொண்டதரத்து - நீ கடைப்பிடி யாகிய மறதியில்லாமலிருக்க வேணு மென்கிற உறுதிப் படுத்தியவும் அதை உபசாந்தி யென்கிற வரித்த மார்க்கத்தினது வருத்தத்தை யெல்லாம், ஐயுற வின்றி - அனுமானப் படுகிறது கொஞ்சமாகிலும், இல்லாமற்படிக்கு, மைந்தா - என்னுடைய வாஞ்சைப்படிக்கு எல்லாம் இன்பத்தை யுண்டாக்கித் திருத்திபண்ணவண்மையைத் தரப்பட்ட குருபத்தியைச் செலுத்தப் பட்ட நன்மையை உடைத்தாகிய பிள்ளையே.

## நாகச் செந்தூர மகிமை

*நாகச்சிந் தூரம் நமனாம் நமன்முதற்கு*
*நாகச்சிந் தூரமைச்சை நண்ணுமைக்கு - நாக*
*முனித்தேரை யென்னவரு முச்சட வித்தீயா*
*முனித்தேரை நீநிதமு முன்.* 96

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா என்னுதலிற்றோவெனின் நாகமென்கிற முதலெழுவாய்க் குறையான துத்த நாகத்தினது செந்தூர மகிமையை. இதுவும் மேற்படி சீடன் முன்னிலையாக் கூறுகின்றதை நுதலிற்று. எப்படி என்றால், வரலாறு.

நாகச் சிந்தூரம் - துத்த நாகத்தினாலே பண்ணத் தகுமான வாகடசாத்திரப்படியே பண்ணிவைத்துக்கொண்டு வயித்தியரானவர்கள் திவ்வியாஸ்திரங்களை வரப்பிரசாதத்தினாலே பெற்று வைத்துக்கொண்டு பகையை வெல்லத்தகுமான தைரியத்துடன் வசிப்பது போலே வைத்திருக்கிற வயித்தியர் முன்னே, நமனாம் - எமனைப் போலே அதிக உக்கிர பராக்கிரமத்தை யெல்லாங்காட்டி உடனே அதிமாகச் சங்கரித்துப்போடும், நமன்முதற்கு - அன்னி யோன்னியமாகி நம்மாலே போற்றப்பட்ட தேகத்திலிருக்கிற பிணிகளுக்கெல்லாம் முதன்மையான ராசன் என்று சொல்லப்பட்ட வாத பித்த சேத்தும முதலாக வரப்பட்ட தொந்த வியாதி வர்க்கங்கள் சகலத்துக்கும் பின்னும் உண்டான பிசினிகளிலே. நா - நாக்கிலே, கச்சு - ஒரு விதமான கரும் புளிப்பான கசப்புண்டான விபரீத உற்பாத வித்தியாசப்பட்டிருப்பதான, சிந்தூரமைச்சை நண்ணுமைக்கும் - வாய் இளைச்சுப் பின்னும் வாய்நீர் கொட்டிக்கொண்டு மேலே விக்கலும் உண்டாக்கப்பட்டதான துர்க்குணமான பயித்திய உபரிக்கிடமான பித்த சன்னி விடம் என்கிற உபாதியைத் தராநின்ற உபத்திரவ வாத உன்மத்தினது விகற்பமான பித்தத்தை அடுத்திருக்கப்பட்டதான சேட்ப விக்கிரம தோஷ வியாதிக்கும் இதுவே காலாந்தகனாகக் கொல்லும்.

பின்னுமிப்படிச் சொன்ன கொட்டாலை எல்லாந் தீரத்தருவது இதுவே யென்று அறிந்ததற்கேற்ற அனுபானத்திலே பிரயோகம் பண்ணி அதனது குணத்தை யெல்லாம் நீ நன்றாயறிந்து பார்க்க வேண்டியது. பின்னும், பதினெட்டு விதமான மூர்ச்சை யெல்லாவற்றுக்கும் இது எப்படியடிக்கு மென்றால் உதாரண உவமானம் வகுத்துக் கூறுகின்றார். நாகப் பாம்பானது, முனித்தேரை யென்ன வரும் - கோபித்துக் கொண்டு தவளையை எப்படி எடுத்து விழுங்கிப் போடுமோ அப்படி வதைத்து இந்த வியாதிகளை யெல்லாங் கொண்டு அடக்கிப் பின்னும் வருகிற வியாதியை மாட்டும், முச்சடவித்தீயாம் - உப்பச மேற்சுவாசம் எல்லா வியாதியும் என்று சொல்லப்பட்ட காட்டை யெரிக்க நெருப்பாயிருக்கும். பின்னும், முனித் தேரைநீ - மகனேநீ நன்றாகயோசனைப் பண்ணிப் பார்க்குமிடத்திலே தபோநிதியான தேரனாலே செய்யப்பட்ட வாகட சாத்திரத்தை மாத்திரம் மனம் வைத்துண்மைக்கு உத்தாரமாக, நிதமும் - நித்தியப்படிக்கும், முன் நினைத்துப் பார்க்க வேண்டியது.

## அப்பிரகச் செந்தூர மகிமை

*அத்தையென வப்பிரகை யானா லனிலவன்னி*
*அத்தையென வப்பிரகை யட்டலிற்றீ - யத்தை*
*வரத்தா னரிக்கு மவையாக்கு மெய்யை*
*வரத்தா னரிக்குநிகர் வாழ்.* 97

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா என்னுதலிற்றோ வெனின் முறையான அப்பிரகச் செந்தூரத்தினது மகிமையைத் தொகை வகை விரிவாற் கூறுதனுதலிற்று. எப்படி என்றால், வரலாறு.

அத்தை என - அத்தென்று சொல்லப்பட்ட சிவந்த வர்ணப்பெயர், சாரியையில் ஐச்சாரியை பெற்று அத்தை என்றாயிற்று ஆகவே, செந்தூர மென்பது பெறப்பட்டது. அப்பிரகை - அப்பிரகமென்று முதற் பெயரினது

பகுதி பெண்பாற்குரிய விகுதி பெற்றுமேற் பொருண்மையைப் பகுதி நுதலா நின்றது. அப்பேர்ப்பட்ட அப்பிரகமானது செந்தூரமாகுமேயானால் அதை அருமையென்று சொல்ல வேணும், என்னென்று உவமிக்க வேணுமென்றால், அனிலவன்னி - வாதத்துடனே கூடத்தானே தொந்தித்துக்கொண்டு சுத்த நாரீசுவர சம்பந்தம் போலிருக்கப்பட்ட நீர்க்கட்டு, நீரருகல் முதலான பிணிகளெல்லாம் அதமாகிப் போகத் தக்கினதாய், அத்தையென - என்னுடைய தாயாராகிய பரமேஸ்வரியானவள் எப்படி உக்கிர வீராவேசத்துடனே அதம் பண்ண வேண்டி, நவ - அதிசயமான தர்மத்துக்கு, பிரகை - பின்னாகியதிற் பிரிந்து பாவத்தை எல்லாம் ஒழிந்து போகப் பையவன்றிச் செய்வாளோ அப்படி, அட்டலில் - அதம் பண்ணுவதான குரூரத்தினாலே, தீயத்தை - பொல்லா வியாதிக்கூட்டம் பின்னுமிருக்கப்பட்ட தெல்லாம் ஒருமிக்கப்போக, வரத்தான - மேலேயுண்டாய் வருவதாயிருந்தாலத்தை யெல்லாம், அரிக்கும் - அறுத்துப் போட்டுச் சுத்திகரிக்கும், மலையாக்கு மெய்யை - சரீரத்தை எப்படி மகாமேரு பர்வதம் உறுதியாயிருக்குமோ அப்படியே யுறுதியா யிருக்கப்பண்ணும், வரத்தான - பின்னேயும் என்ன செய்யு மென்றால், தெய்வ வரப்பிரசாத மகிமையினாலே இந்தப் பூமியின் கண்ணிலே வண்மையுண்டாகிய மகத்துவத்தாலே, அரிக்கு நிகர் வாழ் - மகா விஷ்ணுவை உவமானஞ் சொல்லத்தக்கின பெருமையை உண்டாக்கப்பட்ட சுகசவுக்கியத்தை உண்டாக்கும். ஆனபடியினாலே, இந்த அப்பிரகச் செந்தூரம் என்கின்ற அவிழ்தத்தினது பெருமையை அறிந்து கொண்டு மேலே எப்படியும் பண்ண வேண்டியது.

## இரசச் செந்தூர மகிமை

*சூத மரத்தைத் துவராக்கி யுண்டவரைச்*
*சூத மரத்தைத் துவரட்டச் - சூத*
*உடம்பிடி யாராக வுருவெழிறந் தோகை*
*உடம்பிடியா ராகவுத வும்.* 98

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா என்னுதலிற்றோ வெனின் இரசச் செந்தூரத்தினது மகிமையைக் கூறுதனுதலிற்று.

சூத மரத்தை - பாதரச மென்று சொல்லத் தகுமான ரசத்தைப் பண்ணப்பட்ட நன்மையான பிரக்கியாதியான, துவராக்கி - சிவந்த வர்ணத்துக்கினமாகிய செந்தூரம் பண்ணி அந்த அவிழ்தத்தினை அனுபான நன்மையுடனே, உண்டவரை - இலட்சணப்படிக்குப் புசித்த பேர்களுடைய சரீரத்தை எப்படிக்கு உரமாக்கி உறுதியான திடகாத்திர சவுக்கியத்தை மென்மேலும் கொடுக்கு மென்றால்,சூத மரத்தைத் துவரட்ட - மாமரமாக நீண்ட வடிவாய் ஏற்பட்ட சூரபன்மாவை அவன் வமிசத்துடனே சகல வசுரக் கூட்டங்களெல்லாரையும் ஒரு பூதரையும் விட்டுவிடாமற்படிக்குப் பற்றறுத்துச் சங்காரம் பண்ணிப் போட்ட கர்த்தனான சுப்பிரமணிய சுவாமியாரைப் போலே, பின்னும் அவரெப்பேர்ப்பட்ட சுப்பிரமணிய சுவாமியாரென்றால், சூத - சங்கரிக்கப்பட்ட கோபமாயக் குரூரமான, உடம் பிடியாராக - வேலாயுதமென்கிற சத்தியை அங்கத்திலே தரித்த சுப்பிரமணியர் எப்படிப் பராக்கிரம முதலிய சாமர்த்தியம் படைத்திருக்கிறாரோ அப்படி உண்டாகத் தயவு பண்ணப்படும். அவிழ்த நன்மை அதிகாரத்தினா லெப்படியும், உருவு - நல்ல ரூப லாவண்ணியமான அங்கப்பழுது கணமுன்னமே யிருந்த போதைக்கு அவைகளையெல்லாம் போக்கடித்துவேறே கொடுத்து, எழில் - அழகும் வேறே கொடுத்து, தந்து - நல்ல புத்திமதியோசனையையும் வேறே கொடுத்து, ஓகை - மிகுந்த மனமகிழ்ச்சியை விடாமலிருத்திய தனாலானந்தகரம் பண்ணுவதான மிக்க நண்பான, உடம்பு - தேக சவுக்கியமான யோக்கியத்தைக் கொடுக்கப்பட்ட காயகல்பத்தை அதிகமாகக் கொடுத்து மேலே, இடியாராக - சரீரத்திலே அழிந்து போகுமென்கிற பேச்சையொரு காலத்திலேயும் படையார்களென்று வசனத்தினாலே உலகத்தினாலே எவர்களுஞ்சொல்லிக் கொள்ளாதபடிக்கு அட்டி பண்ணாமல் படிக்கு, உதவும் - கொடுக்கும்.

## காரீயச் செந்தூர மகிமை

*கறுப்பைச் சிவப்பாக்கிக் கம்மெனல்போல் வங்கக்*
*கறுப்பைச் சிவப்பாக்கிக் கண்டோர் - கறுப்பை*
*யரியரித்த தென்ன வரந்தையடுஞ் செய்கை*
*யரியரித்த வத்திலில்லை யா.* *99*

(சொ. பொ.) இத்தலைச் செய்யுள் வெண்பா என்னுதலிற்றோ வெனின் காரீயச் செந்தூரத்தினது மகிமையைத் தொகை வகை விரியென்று முத்திற விவரமாக் கூறுதனுதலிற்று.

கறுப்பை - வேதசாத்திர ஆகமங்களிலேயும் இலக்கிய விலக்கண நூல்களிலேயும் பகர்கின்ற தென்னை என்றக்கால், கறுப்பென்று சொல்லாநின்ற உரிச்சொல்லை முதன்மை முதன்மையாகின்ற, சிவப்பாக்கி - சிவப்பென்று விரைந்து கூறுப்பட்ட கோபக்குறிப்பினது ஆக்கத்தையுடைய சினைமுதலான ஒருபொருளான அந்தமாயிருந்து கொண்டு, கம்மெனல் போல் - ஏகோபவித்திருக்கிறதெப்படியோ அப்படிப்போலே தானே தானாய் நின்று விளங்குகின்ற உதாரணத்தை நிகராகவும், வங்கக்கறுப்பைச் சிவப்பாக்கி ஈயத்தினது கறுப்பெனவே காரீயமென்கிற பேர் வெளிப்படையாயிற்று. அப்பேர்ப்பட்ட காரீயத்தைச் செய்யுமுறைமை தப்பாமற் படிக்குச் சிவப்பாக்கிய செந்தூரம் பண்ணுங்கிரமத்துடனே பண்ணியதைத் தெய்வீகமுண்டான திவ்வியாஸ்திரத்தைப்போலே கையிலே வைத்திருக்கப் பெற்று வயித்திய மேலவர் நல்லவரென்கிற பேர் பெரியோர்கள், கண்டோர் மேலான வாகட சாத்திரார்த்தங்களெல்லாம் ஒருமிக்கவே ஆராய்ந்து அதனது பொருளெல்லாம் பெரியோர்களாலே ஐயந்திரிபு முதலானவை நீங்கி நன்மையைக் கரைகண்ட பேர்களாம்.

கறுப்பை - அந்தகாரமாகிய விருட்பலவான் கூட்டத்தை யெல்லாம், அரி - பானுவான சூரியனானவன், அரித்தென்ன - மேலே சொன்ன சூரியனானவன் எப்படிச் சங்கரித்து லோகோபகாரமான ஒளியினது

பிரகாசத்தை எப்படி யுண்டாக்குவானோ அப்படி வயித்தியரென்கிற சூரியன் பிணி என்கின்ற அந்தகாரத்தை அவிழ்தமென்கிற கிரணக் காந்தியினாலே போக்கடித்துத் தேகமென்கிற பிணியாளன் உடம்பென்னும் லோகத்தின் கண்ணிலே உல்லாபசவுக்கிய மென்கிற ஒளிப்பிரகாசத்தைக் காண்பிப்பார் களென்பது சமுக உவமானமாகையால் அறிந்து கொள்வது. அரந்தை - இன்னும் அனேகவனேக வெகுவிதங்களான பிணிகளை எல்லாம் ஒருக்காலே, அடுஞ்செய்கையர் - போக்கடித்து இன்பத்தைப் பெருமிதமாகத் தானே அளிக்கப்பட்ட பெரியோர்களான பண்டித சிலாக்கியர்கள், இத்தலத்தில் - இவ்வுலகத்தின் கண்ணிலேயும், இல்லையா - இல்லையென்று நினைக்க வேண்டியதில்லை. இருக்கிறார், ஆனபடியினாலே அறிந்து வயித்தியரைப் பூசிதப்படுத்தினால் அவர்களெப்பேர்ப்பட்ட நோய்களையும் வாசியாக்கிப் போடுவார்கள். ஆகையால் அவர்களுக்கு மனம் வரத்தக்கதாக நடந்தவர்களுக்குத் தொண்டுபட வேண்டிய கடன் பிணியாளனுக்கு வேண்டும்.

## தண்டவாளச் செந்தூர மகிமை

*தண்டவா ளத்தருணந் தானுண்ட பேர்க்குலகை*
*தண்டவா ளத்தருணந் தானுண்டாந் - தண்டவா*
*யுத்தமரைக் காலமென வோட்டி யரிமாட்டி*
*யுத்தமரைக் காலம்மை யும்.* 100

(சொ. பொ.) இத்தலைச் செய்யுள் வெண்பா என்னு தலிற்றோவெனின் தண்டவாளச் செந்தூரத்தினது மகிமையை விவரமாகக் கூறுதனுதலிற்று.

தண்டவாளத்தருணம் - தண்டவாளம் என்றெடுத்துச் சொல்லப்பட்ட லோகத்திலே ஒரு விதபேதமான லோகத்தைச் செம்மையாய்ப் பண்ணும் முறைமைப்படியே வரிசையுடனே செந்தூரத்தைப் பண்ணியந்த அவிழ்தத்தை, தானுண்ட பேர்க்கு - சாங்கமாகப் புசிக்கவேண்டிய கிரமப்படியே அனுபானத்துடனே புசித்த அபத்தியப் பிழைகள்

வராமற்படியே உண்டு சாதித்தால் அவர்களுக்கு, உலகை - பஞ்சாடக்கோடி வித்தீரணமாகிய இந்த பூமண்டலத்தை யெல்லாம் மனுமாந்தாதாதிகளைப் போலே, தண்ட - நீக்கத்தினாலே பொதுமை யென்பதில்லாமற் படிக்கு, ஆளத்தருணம் - ஏகசக்காதி பத்தியத்துடனே பாராளத்தகுமான அதிகாரத்தைக் கொடுக்கும், மேலும் மேலும் பெருமையைத் தானே, தானுண்டாம் - தனக்குத்தானே தெய்வீக மகிமையைத் தருமென்பதெப்படி யென்றால் நோய் நீங்கியுடலுக்குத் திடமும் நன்மையும் வருமென்ற போது அந்த ஆரோக திடகாத்திர மெய்தியிருப்பதே மேலான தேவேந்திர போக பாக்கியங்கிடைத்தது போலே யென்பது உலகமெல்லாம் ஒப்பத்தகுமான வாக்கியமான படியினாலே அந்தச் சவுக்கிய நன்மையைத்தானே சிலாக்கியமாகச் சிறப்பித்து இவர் இப்படிப் பாராண்டது போலென்றார்.

தண்டவாய் - தண்டிக்கப்படுவதான தண்டனையையே மேற்கொண்ட காலாந்தகனைப் போலே ரணரங்கமான சமர்ப் பூமியின் கண்ணிலே செய்யப்பட்ட, யுத்தம் - சண்டை பண்ணப்பட்ட போரானது, அரைக்காலமென - எட்டிலொரு பங்கு தான் வேறன்று என்றும் அவ்வளவே அதனது நிர்வாகம் வேறே யில்லையென்றும் செல்லத் தக்கதாக இது அதிகப்பட்டு மேற் போராட்டங்களைச் செய்யவேண்டி, ஒட்டி - இருக்கப்பட்ட சஞ்சிதப் பழவினைக்கு நிகரான பிணிபந்தப் பல்லாயிர நோய்க்கினமான ஆதாரங்களை யெல்லாந் தேகத்திலிருக்க வொட்டாமல் துரத்தி யோட்டி விட்டு, அரிமாட்டி - பகைமையைச் செலுத்தப்பட்ட வாத முதலான முப்பிணிகளுந் தங்கள் நிலைகள் தவறிமீறுங்கால் அவைகளையெல்லாம் ஒரு நிலைப்பட்டு ஆதியோடந்தமாகி நிற்கத் தக்கதாயடித்து, உத்த மரைக்காலம்மையும் - நல்ல சற்குணரான யோக்கிய புருஷாளைப் போலே இருக்கத்தகுமான நற்குண நற்செய்கைகளுண்டாக்குகின்ற அழகிய நன்மைக ளெல்லாந்தானே யுண்டாக்கவும் இலக்கக் குறிப்பும் வரும். ஆனபடியினாலே அப்பேர்ப்பட்ட செந்தூரத்தைப் பண்ணிக்கொள்ளும் நற்பண்டித சிலாக்கியர்களுக்கெல்லாம்.

## பொதுவிலே சுத்தி செய் மகிமை விவரம்

*சுசியா னதுலோகத் தோமகற்ற லென்ன*
*சுசியா னதுலோகந் துவ்வாய்ச் - சுசியா*
*முளரி யுலகை முயறலின் மாலுந்தி*
*முளரியுல கையுறு முன்.* 101

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா என்னுதலிற்றோ வெனின், இது வரைக்கும் பற்ப மகிமையுஞ் செந்தூர மகிமையுங் கூறிப் போந்தோமே. இப்பாற் பொதுமையான மார்க்கமாய் இவ்விரண்டு பொருண்மைகளையும் பண்ணுவான் தொடங்கி எடுத்துக்கொண்ட முறைக்கு முன்னர் சுத்தி செய்து கொள்ள வேண்டிய விதிக்குப் பொதுவிதியான சுத்திமகிமை விவரங் கூறுதனுதலிற்று.

சுசியானது - பூமியின் கண்ணிலே இருக்கப்பட்ட இரண்டு திணைகளிலேயும் பெரிதான உயர் திணைகளில் ஆண்பாற்குப் பெரும்பான்மையும் பெண்பாற்குச் சிறுபான்மையும் வழங்கற் பான்மையான உபகாரமாகிய கொடுத்தலின் தங்கமான தியாகமென்று சிறப்பித்துச் சொல்லா நின்றது, லோகத்தோ மகற்ற லென்ன - லௌகீகமாகிய பிரபஞ்சமென்னும் இதற்குறுதியான கீர்த்தியை வளரச் செய்தற்கு இகலான அபகீர்த்தி யென்னுங் குற்றத்தினது உட்பகையை எப்படி நீக்குமோ அப்படி, சுசியா - ஆசார மென்கிற சுத்த பவித்திர நன்மையினாலே, நது - வரவர வழக்கத்தினாற் சரீரமெப்படி லயத்தையடையுமோ அப்படியே நவ லோகங்களும் அவிறதியதையே அடையுமென்பது உண்மையாதலான், லோகத்துவ்வாய் - அப்படியான நவலோக பஞ்சலோகங்களிலே இசைந்த லோகமெதுவோ அதுமகிமை செய்வதான நல்ல பரிசுத்த விமலமாக உரித்தானதாகுமேயானால் அதுவே சொர்க்கமாகி இரண்டு முறைக்கும் பாத்தியப்படும். பின்னும், சுசியாம் - சுசி என்று சொல்லப்பட்ட பரிகாரப் பெயரை யுடைத்தான, முளரி - நெருப்பான தீ, உலகை - லயப்படுத்துகிறதொழிலைத்தானே, முயறலின் - பிரயத்தனமாகிறதையே உத்தியோகிக்கிறது எப்படியோ

அப்படிக்குத்தானே, மாலுந்தி - நாராயண மூர்த்தியினது தொப்புளாகிற, முளரி - செந்தாமரைப் புட்பமானது மலர்ந்து அதனிடத்திலிருந்து பிரமதேவன் பிறந்தவன் முதலாகச் சகலமான பிரபஞ்சச் சராசரங்களும் உண்டானபடியினாலே, உலகையுறுமுன் - முன்னாலே உண்டு பண்ணுவதான சிருட்டிக்கு முதற்காரணமாகிய பிரமன் முதலானதும் எப்படி அந்த மகாவிஷ்ணுவினது நாபிக்கமலம் எப்படி ஆதரிக்கப் பட்டுண்டாயிற்றோ அப்படி முதல் சுத்தியுமப்படியான தறிய வேண்டியது.

## தாம்பிர சுத்தி

*செம்பருத்தி நீர்மையறல சேதாவார் நாளாறிற்*
*செம்பருத்தி நீர்மையறல் செய்திருநாள் - செம்பருத்தி*
*ஆகவடி முள்ளங்கி யையிரண்டு நாளினிமை*
*ஆகவடி தாம்பிரமெய் யாம்.* 102

(சொ. பொ.) இத்தலைச் சூத்திர வெண்பா வென்னுதலிற்றோ வெனின் செம்பினது மலினத்தைப் போக்கிப் புனிதமேம்பாடு செய்யுமாறு நுதலிற்று. எப்படி எனில் வரலாறு.

செம்பருத்தி - சிவந்த வர்ணமான பூ முதலனைத்து மிருக்கப்பட்டதான பருத்தியினது, நீர் - சாறும், மையறல் - வெள்ளாட்டுக்கோமிய நீரும், சேதாவார் - சிவத்தவர்ணப் பசுவினது கோமியமாகிய நீரும், நாளாறில் - ஒரு பலம் தாம்பிரத்துக்கு நாளொன்றுக்கு ஆறுபலம் விழுக்காடு ஆறுநாளைக்கு விட்டுச்சூரிய உதய முதலாக வெய்யிலிலொக்க வைத்துச் சூரியனத்தமிக்கிற வரைக்கும். அந்தரசம் அதிலே இமிடத் தக்கதாகச் சேருகிறது போலவே செம்பருத்திச்சாறு ஆறுநாளைக்கும் வெள்ளாட்டுக் கோமிய நீருமப்படி ஆறுநாளைக்கு மேற்படி கணக்குப்படியே சிவப்புப் பசுவின் கோமிய நீருமேற்படி ஆறுநாளைக்கு மேற்படி கணக்குப் பிரகாரமாகவும், செம்பருத்தி - செம்பாகிய தாம்பிரப்பொடிக்கு வாங்கி உட்கொள்ளத்தக்கதாகச் செய்து மூவாறு பதினெட்டு நாளான பிறகு,

நீர் - சுபாவமான இயற்கைக் குணமாக இருக்கப்பட்டதான, மை - அதிலிருக்கிற அழுக்காகிய குற்றத்தினது படலத்தை, அறல் செய்து - அற்றுப்போகத் தக்கதான முறைமையைச் செய்வதற்குப் பின்னும், இரு நாள் - இரண்டுநாள் விட்டு நடு நடுவே மூவிரண்டாறு நாளும் மத்தியிலே மத்தியிலே விட்டுப்பிடித்துப் பிற்பாடு, செம்பருத்தி - நடுநிலையான உண்மைக் குணக்கியரான வயித்தியருடைய மதியாலோசனைப்படிக்குப் பின்னும்.

ஆகவடி முள்ளங்கி - முன்னே செய்த பிரகாரமே முள்ளங்கிக் கிழங்கின் சாறு மேற்படியே ஒரு பலத்துக்கு ஆறுபலம் விழுக்காடு நித்தியப்படியே, ஐயிரண்டு நாள் - பத்து நாள்வரைக்கும், இனிமையாக - மெத்த உரித்தான பாத்தியப்பட்டவரைப் போலே அதிக உரிமையுடனே, அடி - தாம்பிரத்தினது மலினத்தைப் பற்றற்றுப் போய் விடத்தக்கதாய் மாட்டிப்போடக் கடவாயாகவும். தாம்பிரமெய் - அப்பாலே அப்படி மலினம் நீங்கிப் பற்றறுத்துப் போன தாம்பிரமானது இருவிதப் பொருண்மைக்கு மற்ற ஒருவிதப் பொருணிலைக்கும் உறுதியான மாசற்ற மாணிக்கத்தைப் போலே மகிமையினால் மெய்யுணர்ந்த பேர்களுடைய உள்ளத்தினது நன்மையைப் போலவும் களங்கரகிதமான நின்மல நிர்க்குணமான வஸ்துவினது சோதிமயமான சொரூபத்தைப் போலவும் விளக்கமாக விளங்கித் தோற்றப் பொலிவுடனே கோடிசூரியப் பிரகாசத்துடனே இருக்கப்படும். ஆம் - இப்படி இருப்பதற் கிலக்கண உதாரண மெப்படியறியப்படு மென்றால், உண்மைக்குத்தாரம் பொருந்தத்தக்க நன்மை பார்க்குமிடத்திலே நல்ல வெண்கலக் கன்மசங்கள் விட்டவுடன் எப்படியாகிப் பிறப்புக் கரைகாட்டாதொழியுமோ அப்படி இருப்பதை அறிக.

## எஃகு சுத்தி

*முந்திரிகைப் போது முடிக்குமே எஃகுசுத்தி*
*முந்திரிகைப் போது முடியுமுன்னே - முந்திரிகை*
*வேலையிலை யத்தின்மின்னார் வேட்கையிலப் பாற்களிப்பு*
*வேலையிலை யத்தினமே வீண்.* 103

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா என்னுதலிற்றோ வெனின் மேற்படி தாம்பிரத்துக்குக் கூறினபடியே எஃகுவினது சுத்திமுறையையுங் கிரமமாகக் கூறுதனுதலிற்று. (எவ்வாறெனில், வரலாறு).

முந்திரிக்கைப் போது முடிக்குமே - கொட்டை முந்திரிகைச் செடியினுடைய பூவினது சாற்றினாலே முடிக்கப்படும்.அது எப்படியுங் காரியத்தை முடிக்குமே என்று தேற்றேகாரம் கொடுத்தபடியினாலே கொட்டை முந்திரிகைப் பூவொன்றுமே போதும் வேறே தேவையில்லையென்பது பெற்றாம். எப்படியெனில், மேலே தாம்பிரசுத்திக்குச் சொன்ன நாட்கள் எத்தனையோ அத்தனை நாள்களும் எவ்வளவு நிறையோ அவ்வளவு நிறையும், எப்படிச் சூரியபுடம் வைப்பதோ அப்படியே சூரியபுடம் வைப்பதும் நடுவே எத்தனை நாள் விடுவதோ அத்தனை நாள் விடுவதும் வேண்டும் என்பது முறை முதலாயிற்று.

எஃகு சுத்தி - எஃகுவென்று சொல்லப்பட்ட இரும்பிலே பேதமான எஃகுவினுடைய பரிசுத்தார்த்தமாகிறதற்கு உபாயமெப்படியும் முன்னே சொன்ன கொட்டை முந்திரிகைப் பூவைக்கொத்துடனே இடித்துச்சாறு பிழிந்து கொண்டு அதிலே வேளையென்கிற ஒரு நாளைக்குக் காலமே சூரிய உதயமாகிறபோது ஒரு பலம் எஃகுவுக்கு ஆறுபலத்தையும் பொடியிலே இமிடத்தக்கதாய் வார்த்து வெய்யிலிலே வைத்துப் பிற்பாடு மறுநாளைக்கும் அப்படியே செய்து ஆறுநாளான பிற்பாடு இரண்டு நாள் விட்டுப்பிடித்துப் பிற்பாடு முன்னே எப்படியோ அப்படி ஆறு நாளான பிற்பாடு மேற்படி இரண்டு நாள் விட்டுப்பிடித்துப் பிற்பாடு முன்னே எப்படியோ அப்படியாறு நாளான பிற்பாடு முன்போல் இரண்டு நாள் விட்டுப் பிடித்து பத்து நாளிடை விடாமற்படியே பண்ணவேண்டியது. அப்படிப் பண்ணவே பரிசுத்தார்த்தமாவது திண்ணமென்பது குறிப்பாகவும் வெளிப்படையாகவும் பார்த்துக்கொள்ள வேண்டியதாம் என்றும், முந்திரிகைப்போது முடியுமுன்னே - ஓர் எண்ணென்று சொல்லப்பட்ட ஒன்றுக்கொன்று முன்னூற்றிருபதிலே ஒரு பங்காகிய காலமுங்கூடத் தேவையில்லை. அது முடியுமுன்னே அது முடிந்து விடுகிறதுக்கு

முன்னே எனவே அதிக வேகத்திலே அந்த மூலிகையினுடைய பலம் அப்பேற்பட்ட தென்பதை யறிவிக்க வேண்டியபடியினாலே காலத்தின் பேரில் வைத்துத்துணிவே காரம் முறையே கொடுத்தாரான படியினாலெப்படியும் பரிசுத்த நின்மலமாகுமென்பது நிச்சயிக்கப் பட்ட படியினாலே முன்னே யென்றுங் கூறினார், முந்திரிகை வேலையிலையந் தின்மின்னார் வேட்கையில் - ஆனபடியினாலே இந்த எஃகுவானது பரிசுத்தமாகவே அந்தப் பரிசுத்தமானதை இருவகைப் பிரயோகா விழ்தங்களான வெண்மை செம்மைகளென்கிற பற்பசெந்தூரங்களைச் செய்கிற விவரப்படிக்கு செய்து அதை அனுபான விவரத்துடனே உண்ணப்பட்ட காரியத்தின் கண்நீயுனக்குப் பலிதப்பட வேண்டியிருந்தாலதற்கு உறுதியான உபாயத்தைச் சொல்லுகிறேன் கேட்டுக்கொள்ளு வாயாகவும், எப்படி யென்றால் முன்னே சொன்ன பதார்த்த வரிசைக் கிரமாலங் காரமென்று சொல்லப்பட்ட நிரை நிரைப் பொருண்மையிலே பார்க்குமிடத்திலே மூன்றையும் விரிவுப்பட்ட வரிசையில் எப்படியெனில், வேலையில் முந்தி - காரியக்கிரிகையாகிற புசிப்பிலே முன்னே செய்து கொள்ளவும், ஐயத்திரி - அனுமானப்படுகிறதிலே மனத்தை வைக்காமற்படி அந்தட்சணமே ஓட்டமாய் ஓட்டவும், பின்னும் மின்னார் வேட்கையிற் கை - பத்திய மாயிருக்க வேண்டியதை விட்டு அவபத்தியம் பண்ணுவதான பெண் போகமென்கிற துன்மார்க்க வேலை யொரு வேளையில் மனதை வந்தலைக்குமேயானால் அப்போது அந்த வழக்கத்தைச் சுத்தமாய் மனத்தில் வையாமல் அமேத்தியம்.

நஞ்சு முதலானவைகளிலே யெப்படி மனம் அசங்கிதமும் வெறுப்பும் பயங்கரமும் உண்டாகுமோ அப்படியா யிருக்கவும் வருமேயானால் அதனாலே அதிகநன்மை கிடைத்து மேலான வரமுண்டாவதற்கு ஐயமில்லை, அப்படிக்குண்டாகவே, அப்பாற்களிப்பு வேலை - அப்படி நடந்ததால் மேலே சொல்ல வேண்டியது வேறே யொன்று மில்லை, உண்டாவதென்ன வென்றால் ஆனந்த சந்தோஷமென்கிற சமுத்திர மேலிட்டு அதிகமாக வளரும் படி வளருவதான சமுத்திரத்தினிடத்திலே, இலையத்தினமே - நித்தியப்படியா

யானந்த நிர்த்தம் பண்ணத்தக்கதாய் மனம் சுழுச்சியுடனே இருக்கவும் மிருதுவான உல்லாப மகிழ்ச்சிக் கூத்தை யுண்டாக்கும், ஆனபடியினாலே, இந்த எஃகுவாகிய உலோகப் பொருமையை ஒருவராலேயும் பண்ணப்படாதாகையால், வீண் - இப்பேர்ப்பட்டதான முறையைப்பண்ணவெண்ணின பிரகாரம் பண்ணாமலும் அதை உண்ண வேண்டிய பிரகாரம் உண்ணாமலும் பத்தியக்கடை பிடிகளை விதிப்படியனுசரியாமலும் மறந்தாவது மடிப்பிழையாலாவது இருப்பதெல்லாம பார்க்கு மிடத்திலே அப்பிரயோசனமாகக் காலங்கடந்து போய் விடும்.

## அய சுத்தி

*இருப்பை யமுத மெனவிரதத் தாலே*
*இருப்பை யமுத மெனச்செய் - இருப்பை*
*உரமாகத் தாரணயி லொன்றெனல்போ லோங்கி*
*உரமாகத் தாரணயி லுன்.* 104

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா என்னுதலிற்றோ வெனின் முறையானே வரிசைக்கிரமப் பிரகாரம் உலோகங்களிலே வல்லின உலோகமான அயத்தினது சுத்தியைக் கூறுதனுதலிற்று. (எப்படியெனில், வரலாறு.)

இருப்பை - இலுப்பைப் பூவைக்கொண்டு வந்து நறுக்கிக் கசக்கிச் சாறுபிழிந்துகொண்டு மேலேசொன்ன எஃகுவினது சுத்திக்கெப்படி நடந்ததோ அப்படி ஒரு பலம், அமுதமென லிரதத்தாலே - அமுதமென்கிற பாலான ரசமான சுவையுடைத்தான நல்ல முன் சொன்ன சாறு ஒரு பலம் அயப்பொடிக்கு ஆறுபலம் மேற்படி சாறு விட்டொருக்காலே ஆறுநாளைக்கு நித்தியப்படி இப்படிச் சூரியபுடமான பிற்பாடு இரண்டு நாள் விட்டுப்பிடித்துத் திரும்ப ஆறுநாளைக்கு நாளொன்றுக்கு ஒரு பலம் அயப்பொடிக்கு ஆறுபலஞ்சாறு விட்டுச்சூரிய உதயகாலம் முதல் அத்தமனம் வரைக்கும் சூரியபுடமிட்டு அப்பாலே

ஆறுநாள் இப்படியான பிற்பாடு இரண்டு நாள்விட்டுப் பிடித்துத் திரும்பவும், மறுபடி ஆறுநாளைக்கு முன்போல் ஒருபலம் அயப்பொடிக்கு ஆறுபலம் மேற்படி இலுப்பைப்பூரசம் ஒருநாளைக்குகாலமே விட்டு அத்தமிக்கிறவரைக்கும் இப்படியே சூரியபுடம் இந்தப்பிரகாரமாக பதினெட்டு நாளான பிறகு இரண்டு நாளிடையிலேவிட்டுத்திரும்பப் பத்து நாளைக்கு மேற்படி யொருபலம் அயத்தினது பொடிக்கு மேற்படி இலுப்பைப் பூச்சாறு ஆறுபலம் விட்டுவர மேற்படி சூரியபுடம் உதய காலந் தொடுத்து அத்தமிக்கிற வரைக்கும் இப்படியே வெய்யிலிலே வைத்து எடுத்து இப்படி நித்தியமும் பத்துநாளான பிற்பாடு முன்னே பதினெட்டு நாள்பிற்பாடு பத்து நாளாகப்பார்க்கு மிடத்திலே இருபத்தெட்டு நாள் சென்றவுடனே, இருப்பை யமுதமெனச் செய் - (இரும்பென்கிற பெயர்ச் சொல் இருப்பென்று வலித்தல் விகாரமாயிற்று) அயத்தினது பொடியான இரும்பைத் தேவாமுர்தம் என்று சொல்லத்தகுமானம் உண்டாக மலினத்தைப் போக்கவே அது நின்மல சொரூபமாகிய பரஞ்சோதித் திவ்வியமான சிவமயமாய் விளங்கும்.

அப்படிக் கிசைவாய் அஃதான பின்னர் மகாவத்துத் தெரிசனை எப்படி நிலைத்திருந்து மெய்யுணர்ந்த உள்ளதையுடைய பெரியோர்கள் வசப்பட்ட மனம்பரிசுத்தமாகுமோ அப்படிக்கு முற்கூறிய அயமும் பரிசுத்தமாகவே இரண்டு முறைகளான வெள்ளை சிவப்பென்னும் பற்பசெந்தூரங்கள் செய்வதற் கிசைவாகி இந்த உலகத்திற்கு இஃது தேவாமுர்த சஞ்சீவி என்று வாகட சாத்திரிகளாலே சிறப்பித்துச் சொல்லத்தகுமான நல்ல யோக்கியத்தையே மேற்கொண்டிருக்க வல்லமையுண்டாகும். அப்படியாக வப்பாலே, இருப்பை - நீ அப்புறம் மார்க்கண்டாயுசும் மேன்மையும் இளமையும் வளமையும் பண்பும் பெற்று மேலான பட்டத்திலே அதிகப்பட்ட துருவனைப்போலே மேம்பாடுண்டாய் அனந்த காலங்களிலேயும் மரணத்தையடையாமல் இருக்கிறதற்குச் சமுசயமிராமலிருப்பதற்கு ஐயமில்லை. இஃது எப்படியென்றால் இளைத்தவனிரும்பைப் புசிக்க வேண்டியது என்பது மேலோர்களால் ஓதப்பட்டிருக்கிறபடியினாலே நீயும் மேற்சொன்ன பற்ப செந்தூரங்களைப் பண்ண வேண்டிய முறைப்படி செய்து உண்கிறமுறைப்படியே உண்டு

பத்தியத்திலே வித்தியாசப் படாமலிருந்த கடைப்பிடியைச் சாதிப்பையேயானால், உரமாகத் தாரணியில் - இந்த பூலோகத்திலே யிப்படி யாரிருந்தார்கள் யாருமில்லை இவனைப் போலே இத்தனை திடகாத்திர சவுக்கியத் தியாகியினது இலக்கணத்துடனே இருந்தவர்கள் என்றிவ்வுலகத் தாரெல்லாம் மெச்சிக் கொள்ளவும் மருத்துவர்களெல்லாரும் மெத்தவிதனப்பட்டு இனியாருக்கும் பண்டிதத்தினது மார்க்கம் பண்ணத் தொழிலில்லை யெனவுஞ் சொல்லப் பருவமான ஞானமுங்கல்வியு மென்மேலுண்டாம். ஒன்றெனல் - நாடிப்பொருள்களெல்லாங் கைகூடி எப்போதும் உண்மையாயேகி பவிச்சிருப்பதான வேதாந்த சாத்திரத்துட் பொருள் வண்மையும் பிரிவாய் ஏற்பட்டிருப்பதான சித்தாந்த சாத்திரத்துட்பொருள் வண்மையும் பிரிவாயேற்பட்ட காலத்திலேயும் நல்லஉத்தமருடைய மனதுக்கிரண்டும் ஒவ்வியொன்று பட்டிருக்குமென்பது நிச்சயமானபடியினால் இவருமிவ்வாறு கூறினார்.

உலோகங்களிலேமுதன்மையான பொருளே அயமான படியினாலே மற்றலோகங்களை யெல்லாஞ் சீர்படுத்துவதான கருவி அந்த உலோகம் அயமான படியினாலே இந்தவண்மைப் பொருளான அயம்மேலான படியினாலே அதனாலே பரிசுத்தப்பட்டபின்பு செய்வதான பற்ப செந்தூரங்களும் அதிக வண்மைப்பொருளா யாதாரமான தேகத்திலே வெகுமலினப்பட்ட சலமாகப் பற்றின பிணிக் கூட்டங்களாகிற காட்டை யெல்லாம் வேரறக்களைந்து போட்டு உடலாகிய நிலத்தைத் திருத்தி யுரமாகிய விரண்டு வகைப்பட்டதான திட்டத்தையும் அறிவினதுண்மைப் பொருண்மையாகிற மெய்யுனர்ச்சியுங் கொடுக்கும் எப்படி என்றால், ஓங்கி - நெடுமொழியாகத்தானே எப்படி விளங்குமோ அப்படி முன்னோர்கள் வாக்கியமான வடமொழி யென்னுங் கீர்வாணத்திலேயும் முதன்மையான தன்வந்திரிய வாகடத்திலே சுலோக வாக்கியமாக்கிக் கூறியது எப்படியென்றால் "ஆயாசாரியாயெது நித்தியத்துவெனா" என்கிற சுலோ கார்த்தமும் யாதாமொருவன் இயற்கையினாலேயாவது பிணியினாலேயாவது இளைத்தக்கால் ஒழியாதுடனே இருவகைச் செய்கையின் ஒன்றைச் சுருக்கிலேயே

அயத்தைச் செய்து கச்சூராதிக்கிருதானுபான மார்க்கமாகிலும் மற்றொன்று எந்த அனுபானமாகிலும் இசைவாகச் செய்துட்கொண்டா லதனாலே உறுதியாக யோங்கி யிருப்பார்க ளென்பது முன்னமே ஓதியிருக்கிற படியினாலே நீயும் நன்மையா யிருக்கக் கடவையென்பது பெற்றாம், உரமாகத்தாரணியிலுன் - மகனே! நானுனக்குப் புத்தி சொல்லுகிறேன் எப்படி யென்றால் காட்சி யளவையான திட்டாந்திரத்திலேயும் ஆகம அளவையான சாத்திர மார்க்கத்திலேயும் பார்த்துக் கொள்ள வேண்டியதிலே ஆகம அளவைகளை விட்டுக் காட்சியளவையை யெப்படி யென்றால் உரமென்று அவயவத்தைச் சொன்ன போதைக்கும் ஆகமென்று அவயவத்தைச் சொன்ன போதைக்கும் தாரணியென்று அவயவத்தைச் சொன்ன போதைக்கும் ஒருமார்பின் பெயராகிய அர்த்தப் பொருண்மை விளங்குவ தெப்படியோ அப்படிப் போலே மேலே பொருணிலை மூன்றான பெயர்களுக்கும் ஒன்றானது போலே தர்மார்த்தகாம மென்கின்ற மூன்றுவடமொழிப் பதங்களுக்குத் தமிழிலே அறம் பொருளின்ப மென்கின்ற மூன்று புலப்பட்ட பொருள்களுக்கும் மேலே மோட்சமென்கிற ஏகார்த்தமான திராவிட மார்க்க வீடென்னும் ஒரு பொருண்மையே ஆதாரசீவன்முத்தி என்பது இவ்வுலகத்தில் எல்லாச் சாத்திரங்களிலேயும் உண்மையாய் விளங்கித் தோன்றுவதறிந்து கொண்டு என்மொழிப் பொருண்மையைத் தேர்வாயாக.

## காந்த சுத்தி

*வீணைமுனி யாவாரை வேர்ப்பட்டை நீர்ப்பட்டை*
*வீணைமுனி யாவாரை வேயழுக்கு - வீணைமுனி*
*கண்டீ ரவமாமே கத்திங்கண் மட்டுநிதங்*
*கண்டீ ரவமாமே கால்.* 105

(சொ. பொ.) இத்தலைச்சூத்திரச் செய்யுள் வெண்பா வென்னுதலிற்றோ வெனின் காந்தத்தினது பரிசுத்தமான சுத்தியைக் கூறுதனுதலிற்று. (எவ்வாறென்றால், வரலாறு).

வீணைமுனி - மகனே! நானுனக்குண்மைக் குத்தாரமாக முன்னோர்களான பெரியோர்களாலே எடுத்தோதிய சாத்திரப்படியே உன் வசப்பட்டு எப்பேர்ப்பட்ட வஸ்துவையும் புனித மென்கிற சுத்தியாய் மேலே அவைகளெல்லாந் தெய்வ பலத்தினாலே நன்மையாக வேண்டியதாய் இருக்குமேயானால் நான் சொன்னபடியே நல்லபுத்தியைக் கேள். முன்னோர்களாலே உரைக்கப்பட்ட சாத்திரார்த்தம் எல்லாம் எடுக்கும் பொழுது மனதைப் பார்த்தாவது சீடரைப்பார்த்தாவது நண்பரைப் பார்த்தாவது கூறுவதென்ன வென்றால் வீட்டிற்கு ஏதுகரமான யோக முயற்சியையே முயன்று நரகத்துக்கு ஏதுகரமான பயனில் முயற்சியென்னும் விருதாவென்கிற வீணைக்கோபித்ததற்கு இடங்கொடாமறபடிக்குத் தள்ளிப்போட வேண்டியது, ஆவாரை வேர்ப்பட்டை நீர்ப்பட்டை - பொன்னாவாரையினுடைய அடிவேரைப் பசுமையுடனே நறுக்கிப் பிழிந்து கொண்டு மேற்சொன்னபடியே ஒருபலம் பொடியாகிய காந்தத்திற்கு ஆறுபல மிரதமாகிய சாறு நித்தியப்படி வார்த்துச் சூரியவுதய காலமுதற்கொண்டு அத்தமிக்கிறவரைக்கும் வைத்து இப்படியே நித்தியப்படி விடாமற் செய்து பத்துநாளான பிற்பாடு இரண்டுநாள் விட்டுப் பிடித்து நித்தியமும் ஒருபலமான முதற் பொடியான காந்தத்திற்கு ஆறுபலமான பொன்னாவாரை வேர்ப்பட்டைச் சாற்றை விட்டு அது இமிடத்தக்கதாய் நித்தியப்படி சூரியபுடமாக வைத்து எடுத்துப்பத்து நாளான பிற்பாடு இரண்டு நாள்விட்டுப் பிடித்துத்திரும்ப மறுபடியும் பத்து நாளைக்கு மேற் சொன்னபடியே ஒரு பலத்துக்கு ஆறுபலமே விட்டுப் பருதியாதப் புடம் முன்போலவே செய்தான பிற்பாடு பத்துநாள் கழித்தானவுடனே இரண்டுநாள் முன்போலே விட்டுப்பிடிக்கவும்.

அப்படியாகவே இந்தப் பொன்னாவாரை வேர்ப்பட்டைச் சாற்றுடனே முதன்மைப் பொருளாகிய காந்தப் பொடியானது ஒன்றி யிமிடிய படியினாலே மகா சிலாக்கியத்தினாலே அதிகப்பட்டு ஏக தேசவுருவகப் பொருளா யிருக்கப்பட்டதுவுமாகும், வீணைமுனி யாவாரை - பின்னையும் அந்தக்காந்தத்தினது பெருமையை என்னாலே சொல்லி முடியுமோ முடியாதென்பதாம். எப்படியென்றால் நாரதரைப்

போலவும் எடுத்து உவமானஞ் சொல்லப் படுமென்று பண்டிதர்களெல்லாஞ் சொல்லிக் கொள்ளுகின்றார்கள். எப்படி யென்றால் அந்த நாரதர் என்கிற பேருக்கு உபயார்த்தத்திலே சத்தார்த்தம் மகா விட்டுணுவைப் போலே உலகத்தை ரட்சிக்கிற காவற் கடவுளான பேர் பூண்டது போல உயிரை ரட்சிக்கு மென்பதையும், பொருளார்த்தத்திலே அவர் பிரம புத்திரராகியும் மேலே தபோபலத்திலே அதிகமான படியினாலேயும் முன்னே மேலாகச் சொன்ன இரும்பைப் பார்க்கிலும் இப்போது சொல்லுவதான காந்தம் அதிகப் பலப்பட்டது என்பதற்குத் திட்டாந்திர மெப்படியென்றால், எல்லையில்லாத பலத்திலே இரும்பு மற்ற லோகங்களிலும் அதிகப்பலன் பெற்று உண்ட பேர்களுடைய தேகத்தையும் போற்றிப் பலப்படுத்துமென்று சொல்லத் தகுமான அயத்தையுந் தான் உள்ளேவாங்கிக் கொண்டு தன்னிலே அடங்கத்தக்கதாய் வசப்படுத்தி யடக்கிக் கொள்ளுகிற தொன்றான குணம் அதிகப்பட்டிருக்கிறமை யினாலே எல்லாப் பெரிய உலோகத்திற்கும் முதன்மை காந்த மென்பதாயிற்று. அஃதானது திட்டாந்திரமான புராணங்கள் பதினெட்டிலே பரிவான சிவபுராணங்கள் பத்திலேயும் காந்தம் பெரிய தென்பது எப்படிப் பேர்பெற்றதோ அப்படியே இந்த லோகத்திலே உலோகங்களுக்கெல்லாம் பெரிய உலோகமாகிய அயத்தையும் தன்வசப்படுத்திச் கொள்ளுகிற படியினாலே காந்தமெல்லா லோகத்திலும் பெரியதென்பது தானே அறியப் படுவதென்பதாம்.

அப்படி அதிக உத்தமமான காந்தமென்கிற பெரியதான தொரு பொருளையே பண்டிதர்களெல்லாருஞ் சிலாக்கியப் படுத்தினார்கள். அப்படியாய் விளங்குவதான காந்தத்தை, வேயழுக்கு வீணைமுனி - அப்படியா யிருக்கப்பட்ட காந்தத்தைப்பற்றி யிருக்கப்பட்ட மலினமான அழுக்கானது மேற்படி ஆதாரமாகச் செய்வதான சுத்திமுறையினாலே புனிதப்பட்டுப் பரிசுத்தமாகவே அதனது திவ்வியகுணோத்தமமாயிருக்கும் படியானதை மனத்திலே நன்றாயோசனை பண்ணிக் கொண்டு அமரிக்கையாய், கண்டீரவாமா மேகத்திங்கண் மட்டுநிதம் - அப்பாலே சிங்கம் எப்படியானைக்கூட்டங்களை யடிக்குமோ அப்படித் தானே வியாதிகளினமென்கிற ஆனைக் கூட்டத்தின் கண்ணிலே அதிகப்

பலப்பட்டிருப்பதான வியாதி ஏந்தலென்கிற விடமித்த வாத மட்டுக்கும் இப்படிப் பரிசுத்தமான காந்தத்திலே நல்ல மார்க்கத் திறத்துடனே செய்த பற்பமாவது, செந்தூரமாவது புசிக்கத்தகுமானபடியே புசித்து அப்பாலே பத்தியத்திறத்தை நன்றாய்ப் பாராட்டுவார்களே யாமாகில் அப்பாலே, கண்டீரவம் - பார்க்கவே போகிறீர் வஞ்சனையன்று, மெய்யா யுண்மையாய்ச் சொல்லுகிறேன். பழுதுபட்டுப் பங்கமாயழிந்து போய்விடும், ஆமேகால் - மெய்யாகத் தானே வாதமுதலான தொந்தப்பட்ட பிணிகளெல்லாமிதுள மெய்ம்மை என்று வேத வேதியராகிற பண்டிதோத்தமரென்பவரெல்லாம் ஒருமுகமாகச் சொல்லிக் கொள்ளப்பட்ட வசனமே மேலிடு மென்ற வாக்கியம் எங்கும் மிகவுண்டாம்.

## வங்க சுத்தி

*சிவமுறையா மன்னை தினமுமற வாமற்*
*சிவமுறையா மன்னைதொடி சேரச் - சிவமுறையா*
*மாசகல மேதினியாய் வங்கமது தங்கமென*
*மாசகல மேதினியாய் வாய். 106*

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா வென்னுதலிற்றோ வெனின் வங்கமென்று சொல்லாநின்ற வடமொழி வாய்ப்பாட்டினை யுடைத்தான ஈயத்தினது சுத்தியாகிய பரிசுத்தத்தைத் தொகையானும் வகையானும் விரிவானும் விசிதப்படவே விவரமாகக் கூறுதல் நுதலிற்று. எவ்வாறென்று வினவின் வரலாறு.

சிவமுறையா மன்னை - ஒருவன் வங்கத்தைப் பரிசுத்தமாக்க வேண்டியிருந்தா லதற்குபாய மெப்படியென்றால் முன்னாலே பசுமாசூர னிமித்தியம் பயந்து பரமசிவனானவர் மகாவிட்ணு வராததற்கு முன்னேயொளித்திருந்த பழக்காயென்கிற ஐவொலிக்காயென்னும் (ஐவிரலிக் கோவை பழமொழி யுடைத்தான செடிக்குச்சிவமுறையா மன்னை யென்று பேரானது. அந்தக் காய் இலை, கொடி இப்படியான

சர்வாங்கத்தையும் இடித்துக் கசக்கிச் சாறுபிழிந்து கொண்டு ஒரு பலம் வங்கப்பொடிக்கு ஆறுபலம் அந்தச்சாற்றை விட்டுச் சூரியோதய முதலாகச் சூரியாத்தம மாகும் வரைக்கும் வெயிலிலே வைத்து அந்தச்சாறு எல்லாம் நன்றா யந்த வங்கப்பொடியி லிமிடச்செய்து மறுநாளைக்கு முன்னாளெப்படியோ அப்படியே பண்ணி இப்படியாய்ப் பத்துநாள் வரைக்கும் பண்ணி இரண்டுநாள் விட்டுப் பிடித்துப் பிறகு மறுபடியுமுடனே. தினமுமறவாமல் - மேற் சொன்ன சிவமுறையா மன்னை பரியாயக் குறிப்புப் பெயரையுடைத் தான ஐவேலிக்காய் ரசமென்கின்ற சாறுமேற் சொன்னபடி ஒரு பல முதற் பொடியாகிய வங்கப்பொடிக்கு ஆறுபல மொருநாளைக்குக் காலமே விட்டுப் பாற்கரனது கிரண மென்கின்ற வெயிலின்கண்ணில் அத்தமன மாகிற பரியந்தம் வைத்தெடுத்துக் கொண்டு மறுநாளைக்கும் அப்படியே செய்து இடைவிடாமற் பிடித்திப்படிப் பத்து நாளானவுடனே, முன்னர்ப் போலே மேற்படி இரண்டு நாள் விட்டுப் பிடித்துப் பிறகுடனே, சிவமுறையா மன்னை தொடிசேர் - அப்பாலே ஒரு பலம் வங்கப் பொடிக்கந்த ஐவேலிச்சாறு குறுணியென்கிற வொரு மரக்காலென்கிற கணக்கின்படியே ஒருமணங்கு நீர் போலே ஒரு குவிந்த பாப்பாரப் பானைக் குண்டுச் சட்டியில் விட்டு உடனே அதையும் விட்டுப் பள்ளத்திலே பூமியின் கண்ணிற் புதைத்து மேலே ஒரு படிவான பாண்டத்தினாலே மூடியதன் பேரிலே சாம்பலெருவைப் போட்டு மூடிவைக்கவே அதிலாவியேறிப் பண்பாக்கிக்கொண்டு வெப்ப மேலேறிப்போ யதிகவேகத்தைக் கொடுக்கும். இப்படியே இருபது நாள் வரைக்கும் பாராமலிருந்து பிற்பாடு எடுத்துப் பார்க்கவும்.

அப்படியான பருவத்திலே, சிவமுறையாம் - சுபவாழ்வைக் கொடுக்கப்பட்ட பாக்கிய முதன்மையாய் எப்படி எப்படி நூலினது அர்த்தமானது வெளிப்படையாகத் தோற்றப்பட வேண்டியது போலே, மாசகல மேதினியாய் - வெகு மதியொடு மிகவும் பெருமையைத்தானே தரப்பட்ட லௌகிக மென்னும் உலகினது மார்க்கத்துக்கு வேண்டிய வயித்தியமுறை தப்பாத வெண்மையென்கிற பற்ப முதலானதும் செம்மையென்கிற செந்தூர முதலானதும் கருமையென்கிற மாத்திரப் பொடியென்னும் பரிநாமம் படைத்த பதிராவிழ்தத்திற்கும்

வைதீகமென்னும் வேதமார்க்கமாகிற வாதநெறியினும் வெண்மை செம்மை யென்கிற இரசித சொர்ணங்களான இரண்டு வகை வேதைகளுக்கும் பொதுமையாய்ப் பிரபஞ்ச சமஸ்தமும் அடங்கவே, வங்கமது தங்கமென - வங்கமாகிய ஈயமானது பத்தரைமாற்றுப் பொன்னைப் பார்க்கிலும் அருமை யுண்டாகத்தக்கினதாய் வளமையுண்டாகவே வஸ்துவாய்ச் சேர்க்கப்பட்டுண்மாசான களங்கக் களிம்புநீங்க வேண்டியது. அப்படியுடனே யுடனே யெப்படி யெப்படிச் செய்யவேண்டிய சிஷ்டைகள் பண்ணவேணுமோ அப்படியெல்லாந் தடையில்லாமறபடிக்குப் பண்ணவே, மாசகல - களங்கமானது உடனே நீங்கிப்போய், அம் - அழகிய பரிசுத்தப் பவுத்திரமென்று கூறுகின்ற சிங்காரமானது மேலிட்டுப் பார்க்க, பார்க்கப்பட்ட பண்டித சிலாக்கிய வுபய குலோத்துங்க சேஷ்டரான வயித்தியருக்கும் நவநீதமான இறும்பூது பயப்படத்தக்கதாக வரும், ஏதினியாய்க் காரணமென்னமோ வென்று சொல்லிக்கொள்ள நவநீதாச்சரியத்தைப் போலே அனுதினமு முண்மையுண்டாகத்தக்கதாகவும் வரப்பிரசாதக் குணாதிசயம் பிறக்கும், வாய் - உண்மையாய்க் கிடைக்கு மென்பதற்கு அனுமானமில்லை.

## சூத சுத்தி

*துரோண மனுதிவலை சூதசுத்தி யாகத்*
*துரோண மனுதினமுந் தோயத் - துரோண*
*முனிவீய மர்காறு முத்தொடிக்கெண் ணாக*
*முனிவீய மர்காறு மொய். 107*

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா வென்னு தலிற்றோ வெனின் சூதமென்று சிறப்பித்துச் சொல்லாநின்ற இரசசுத்தி கூறுதல் நுதலிற்று. (எவ்வாறெனில் வரலாறு).

யாதாமொருத்தன் தெய்வமகிமை பொருந்திய மகா தேவபல மென்னும் பெரிதாகிய பெயரை யுடைத்தான இரசத்தைச் சிவவீரிய மெப்படி உக்கிஷ்டோத்தம வீரா வேசமாயிருக்குமோ அப்படியிருக்கினும்

பார்வைக்குக் கொஞ்சம் மலினம் போக்க வேண்டுமென்னத் தக்கதாக முன்னமே கலப்பின் குற்றமும் விட்டு நீங்கத்தக்க காரியத்தைச் செய்துகொள்ள வேணுமென்கிற வாகடசாத்திரப் படிக்கும் பின்னு முலக நடைக்கு மொப்பாடாகச் செய்து கொள்ள வேணுமென்பதற்கு, துரோணமனுதிவலை - தும்பை வேரிலை, பூ முதலான சர்வாங்கமும் பிழிந்து வாங்கப்பட்ட இரசமான சாறு ஒரு துளிமாத்திரம் பட்ட போதைக்கும் புனிதமா மென்பதற்கு அனுமானமில்லை. இப்படியாவது என்னத்துக் கென்றால். சூதசுத்தியாக - இரதமாகிய இரசம் புனிதமாய மலமாகவேண்டிய நிமித்தியம் அப்படி யொருதுளியே நன்மை செய்யும் பராக்கிரமம் படைத்திருக்குமேயானா லந்தத் தொகைக்கு மிஞ்சினது செய்யும் பராக்கிரமத்தைச் சொல்ல வேண்டியது தேவையில்லை யென்பதாயிற்று. இதனாலிந்த மூலிகைக்குப் பேர் ஐமுகனார் வெற்றி யென்று மேலும் மேலும் ஆயுள் வேதியர்களாலே சிறப்பிக்கப்பட்டதா மெனவே, இஃது மிகுந்த தேவதாமகத்துவம் பொருந்தியதாகையால் முதல் வீரமாதா பூஷணமென்று முற்பொருதுரவோர் பொற்பணி கோடலி னெனவே ஆதிக்கியம் பெற்றவாறு பரணி முதலிய காப்பிய விலக்கியத்தாலுணர்க, துரோண மனுதினமுந்தோய - இவ்வாறு சிலாகித்துச் சொன்ன தும்பைச்சாறு மகாதேவ பலமெனச் சூதத்தின் கண்ணிலே நித்தியப்படி தினமும் பொருத்தமாகப்பட்டு இமிடிப்போகப் பண்ணும் உபாயமெப்படியா மென்றால் இரண்டு மரக்காலென்கிற சத்தார்த்தப்படி துரோணம் பதக்கென்றும் சிவமென்பது குறுணி யென்றும் வழங்குவது வடமொழிப்படி யாதலான் அந்தமார்க்கப் படியே இரண்டு மரக்காலின் கணக்கைப் பார்க்குமிடத்திலே ஒரு படி ஒரு வீசைக்கு நாற்பது பலங் கொண்டதொரு படி, அதுவே யெட்டுக் கொண்டது ஒருமரக்கால். அப்படி இரட்டிப்பானதுவே இரண்டுமரக்காலாம். அப்படிக்குக் கணக்கேற்பட்டு அது நூற்று நாற்பதென்கிற பலத்தொகையைப் பிரித்துப் பார்த்துக்கொள்ள வேண்டிய விகிதப்படிக்கு நன்றாய்ப் பார்க்குமிடத்திலே நித்தியப்படி கட்டளையான தினத்தின் குறிப்பினாலே அறிவதெவ்வாறெனில், துரோணமுனி வீயமர்காறு முத்தொடிக் கொண்ணாக - இலக்கியத்திலேயு மிலக்கணத்திலேயும் பெரும்பான்மையென்றுஞ் சிறு பான்மையென்றும் வெளிப்படை யென்றுங்

குறிப்பென்றும் ஏது கரமாகத்தானே பொது வென்றுஞ் சிறப்பென்றுங் கூறிய உதாரத்துவ வசனப்படிக்கொரு செவ்வெண் வகுத்துக் கூறுகிறார். எப்படியென்றால் பாரதச் சண்டையிலே வில்லாசிரியராகிய துரோணாச்சாரியானவர் பிராணனுடனே யிருந்து சண்டைபண்ணியிறந்தப்பாலுயிரை விட்டுவிட்டதினம் பதினைந்தாம் நாளான படியினாலே அந்தப் பதினைந்து நாளையும் மூன்றுடனே பெருக்கிக் கூட்டிப் பார்க்க நாற்பத்தைந்து நாளாகும்.

ஆகவே, அதை நிறுத்தி முன்னாலே தும்பைரசத்தினது கணக்கின்படி நிறுத்தி வைத்த பலம் அறுநூற்று நாற்பதென்கிற தொகையை மூன்றால் வகுக்கவே யொரு பங்கிற்கு இருநூற்றுப் பதின் மூன்றேகாலே வீசமாயிற்று. இந்தத் தொகைப்படியே முன்னிரண்டாவது நிறுத்தின முறையான தினக்கணக்கான நாற்பத்தைந்திற் கணிதப்படி பிறழாமற் கழிக்கவே வந்த கணிதத் தொகை எண்ணான தென்னவென்றால் நாலே முக்கால் பலமாயிற்று. ஆகவே, ஒரு நாளைக்கொரு பலம் ரசமென்கிற சூதத்திற்கு நாலே முக்கால் பலம் சாறுவிட்டு இமிடத்தக்கதாய் முன்புசெய்த பிரகாரம் நித்தியப்படி சூரிய புடமாகத்தானே வெய்யிலிலே சூரியவுதயம் பிடித்துச் சூரியத்தமானமாகிற வரைக்கும் விடாமல் வைத்து நித்தியமுமிப்படியே ஒருபலஞ் சூதத்திற்கு நாலேமுக்கால் பலங்சாறுவிட்டு விடாம லிடையிலொருநாளும் விட்டுவிடாமற் செய்யவேண்டியது. முனி - காமத்தையும், குரோதத்தையும், லோபத்தையும், மோகத்தையும், மதத்தையும், மாச்சரியத்தையும் இந்த ஆறையுங் கோபித்துத் தள்ளிப்போட வேண்டியது. வீ - கொலை, களவு, கள், காமங் குருநிந்தையென்று சொல்லப்பட்ட பஞ்ச பாதகத்தையும் கலவாமற்படி யதிலிருந்தும் தூரத் தானே நீங்கி யிருக்கவேண்டியது, அமர் - நன்மார்க்க சகாய ராகிய உத்தமோத்தமரான பெரியோர்கள், நல்லோர்கள், கல்விக் கடலான கற்றோர்கள், பாவத்துக்குப் பயந்தவர்கள், அறத்தின் மார்க்கத்திற்சிறந்தோர்கள் உபயகுலோத்துங்கரான பண்டிதத்திற் குரியோர்கள் ஆகிய இவர்களுடைய சற்சாவகாசமாகிய சங்கத்தை விட்டு விடாமற்படியே கூடிவாழ வேண்டியது. காறு - இந்த உலகத்தின் கணிருந்தொருவர்க் கிதமாகப் பாவமென்பதும் புண்ணியமென்பதும்

அறியாமற் பண்ணப்பட்ட புறங்கூறுதலென்னப்பட்டதையும் பயனில் சொற்பாராட்ட லென்பதையும் இந்த இரண்டு வார்த்தைகளான வாக்கிற்க ணிகழ்வதை அசங்கிதப்படுவதற் கேதுகரமான பொல்லாத அமேத்திய மலத்தைக் கண்டவுடனே ஒருவருக்கெப்படி அருவருப்புண்டாகி அந்த அருவருப்பினது குறிப்பு வெளிப்படையாகக் காணுகிறதற்கு வாயெச்சிலைக்காறித் தரையிலே உமிழ்வது போலே காண்பித்து விட்டு விட்டொருவரிலே இந்த மறுப்பான நடத்தைகளிரண்டும் நிகழ்ந்த காலத்திலேயும், நீ அவர்களுடனே வசனித்த போதைக்கும் மேலுக்கு மேலுக்கு மாத்திரம் கலந்து உள்ளுக்குக் கலவாமல் அவர்களுடைய நட்பைப் பிற்காலத்தி லிராமற்படியே விட்டுவிட வேண்டியது. இப்படி இந்தப் பொல்லாங்குகளை யெல்லாம் விலக்கிவிட்டு விடாமற்போனா லிந்தத் தெய்வீகமான பெருமுறையாகிய சூதபுனிதமா யினிமேலைக்கு வரன்முறை வழக்கமாகிய வைதீக லௌகீகமான இரண்டு மார்க்கத்திற்கும் அருமையாக வேண்டிப் பண்டிதாள் முன்னாக வைத்து நன்கு மதித்தற்பாலதான பற்பம், மாத்திரை, செந்தூரம், மணி, குருகுளிகை முதலான பேரதிகாரமும் புகை, பூச்சு, கற்பூராதி யெண்ணெய் முதலான சிற்றதிகாரமும் அடங்கத்தானே வசப்பட்டதனாலே பிரயோசனப்பட மாட்டாதாகையால் இவ்வாறு அவாய் நிலையாயின வருவித்துக் கூறினார்.

மொய் - மோட்சகாரிய காரணப்பேறாகிய பெரியஞானசித்தி பெற்றவர்களுடைய உபதேசிப்பிற் கணித்தராய் அவர்களுடைய பாதபற்பங்களிலே உனது மனத்தை வைத்தவர்களுடைய அனுக்கிரகத்தாலே பரதேவ சிலாக்கியமான தெய்வமெதுவோ, அந்தத் தெய்வத்தை மறவாமற் பூசை செய்தந்த ஆராதனைப் பிரசாதமெதுவோ அதை இகழாமற்படியே ஏகதேசத்திலே மனக்கலப்பான பேர்களுடனே அங்கீகார மெப்படியாகிலும் பண்ணிக்கொள்ள வேண்டியது. இல்லாவிட்டால் இந்த மார்க்கச் சரக்கென்கிற தொன்றுஞ் சித்திக்க மாட்டாதென்று வேதியராலே சொல்லப்பட்ட நூலான வயித்திய சாத்திரங்களெல்லாம் துணிவாகக் கூறும். மேலும் இப்படி இந்தச் சரக்குகள் சுத்தியாகிற தெத்தன்மைத் தென்றால் உலகத்திலுழவனானவன் பயிர் செய்யத் தக்கதா யதற்குமுன்னே தானே பூமியாகிய செய்யைக் கரம்பு திருத்திச் செம்மைப்படுத்தி வைத்துக் கொள்ளுகிறது போலவுமாம்.

## நாக சுத்தி

*நாகமது ரித்தார் நயனத்தி ரதமதி*
*நாகமது ரித்தார் நவமியத்த - நாகமது*
*கூட்டியா தாரக் குழைத்தா தபமீறக்*
*கூட்டியா தாரமிருக் கும்.* 108

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா என்னு தலிற்றோ வெனின் நாகத்தினது சுத்தியைத் தொகையானும் பின்னும் வகையானும் விரிவானு மேற்பாடாகக் கூறுதனுதலிற்று (எப்படியெனில், வரலாறு).

நாகமதுரித்தார் நயனத்திரதம் - யானையை உரித்தவரான பரம சிவனுடைய கண்ணென்று பேர் பெற்றிருக்கப் பட்டதான ருத்தி ராட்சத்தினுடைய இரசத்தை வரிசையாகக் குழைத்திழைத் தெடுத்துக் கொண்டு, மதி - ஒரு மாதவரைக்கும் அனுதினமு மிடைவிடாமற்படிக் கிசைவாகத்தானே, நாகம் - துத்தநாகப் பொடியை மூடிக்கலந்து பற்றிக்கொண்டிருக்கப்பட்டதான மலினத்தைப் போக்கி அமலமகத்துவம் பொருந்திய சுத்த பவித்திரம் பண்ணவே, மதுரித்தார் - அப்பாலே நல்ல மாதுரியமாகிய யோக்கிய வரோதையாற்றல், பெற்ற திவ்வியப் பொருளான நிச்சயமாக விளங்கும் அப்படியாக முன்னமே நிறுத்திய பிரகாரம் முன்னமே சொல்லி வைத்த ருத்திராட்சத்தினுடைய இரசம் ஒருபலம் நிறுத்த நிறையை யுடைத்தாகிய துத்தநாகப்பொடிக்கு எவ்வளவு ருத்திராட்சக் குழம்பிய சாறென்றால், நவமியத்தம் - ஒன்பதிலே பாதியென்று சொல்லப்பட்ட தொகையிலே கூடினதான நாலரைப் பலமிப்படி ஏற்பாடான நாலரைப்பல ருத்திராட்சத்தினது இரசத்துடனே கூடத்தானே, நாகமது - புன்னைப் புஷ்பத்தினது மகரந்தப் பொடியுடனே கலந்திளகி இருக்கப்பட்ட தேனை மெத்த லகுவிலே எடுத்ததற்கு முக்கால் வாசியான ஒன்றேயரைக்காற் பலமாகச் சேர்த்துக் கொண்டு ஏகமாகப்பார்த்துக் கூட்டினால் ஐந்தரையே அரைக்கால் பலமாகும்.

இதை முதற்பொருளான ஒருபலம் துத்தநாகப் பொடிக்கு இமிடத்தக்கதாய்க், கூட்டி - யொக்கக்கலந்து பிறகு அதை வெயிலின் கண்ணிலெதிராகச் சூரியபுடமாக வைத்ததிலே பொருந்த வயித்தியப்படியே மறுநாளைக்கும் வித்தியாசப் படாமற்படிக்குக் கூட்டி யாதாரக் குழைத்தாதப மீற - நித்தியமும் முதல் நாளெப்படி யொருபலத்துக்கு நாலரையும் ஒன்றே யரைக்காலுமான ஐந்தரையே யரைக்கால்பலம் ரசத்தைக் கூட்டிவைத்த பிரகாரமே கூட்டிக் குழைத்து எந்த வஸ்துவுக்கு நிரம்பத்தானே புதைந்து ததும்பத்தக்கதாய்ப் பூசி வைத்திருந்து எப்படியாயிற்றோ அந்தப் பொருளுக்கே மறவாதபடிக்குச் செய்து உரித்தாக வெயிலிலே அதிகவெப்பமானது கலந்ததனாலே அதுமுதற் பொருளிலே இமிடியதனாலே உறுதியாக. கூட்டியாதார மிருக்கும் - அப்படிச் செய்ததனாலே மேலே செய்யப்பட்ட பற்பசெந்தூர அவிழ்தங்களைச் செய்ததை உறுதியாக உண்மைப்பட்ட அனுபானாதிகளிலே உண்டு பத்தியம் நிச்சயமானால் அதனாலே கொண்டவர்களுடைய தேகத்தினிலையான கூடென்கிறதான பிராணாதாரமான உயிர்நிலையை வெகு காலாந்திரமாயிருக்கப் பண்ணுமென்று பண்டிதர்களாலே மென்மேலும் பிரித்துக் கூறப்படும். ஆனபடியினாலே நீ இந்த முறையைச் செய்ய வேண்டியது.

## அப்பிரக சுத்தி

*சூளையருக் கஞ்சாறு தோமகலு மப்பிரகை*
*சூளையருக் கஞ்சாறு தோயமதி - சூளை*
*இருமூ வொருபலத்துக் கென்றுமென்று வென்றே*
*இருமூ வொருபலத்தை யெய்.* *109*

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா வென்னு தலிற்றோ வெனின் அப்பிரகத்தினது சுத்தியைப் பகுத்துப் பிரித்துக் கூறுதல் நுதலிற்று. (எப்படி யென்றால், வரலாறு).

சூளையருக்கு - பரத்தை யென்கிற பொருட் பெண்டிர்களுக்கு, அஞ்சாறு - நல்ல புத்திமதி யுடைத்தான பெரிய ஞானிகளான அறிவாளரெப்படிப் பயப்படுவார்களோ அப்படிக்குத்தானே பயப்பட்டு மிகவும் பயந்து மேலே எப்படி யெப்படியென்று தயங்கிக்கொண்டு பின்னுக் கெவ்வாறு நீங்குவார்களோ அவ்வாறு, தோமகலும் அப்பிரகை - அப்பிரகத்தினுடைய மலமாடை அழுக்கானது அந்த முதன்மைப் பொருளான அப்பிரகத்தினிடத்தை விட்டுப் பிரியும்படி உவமைப் பொரு ளேற்பாடுண்டான, சூளை - செங்கல்லிலே அதிகச்சூட்டிலே வெம்பிக்கருகிச் சிட்டங் கட்டிப்போன செங்கல் சிட்டத்தை யிடித்துத் தூளாக்கி யந்தத் தூளிலே கலந்திடிபட்டரைபட்ட தூளும், அருக்கஞ்சாறு - எருக்கிலைப் பழுப்பு, பூமுதலானவை நறுக்கிப் பிழிந்து கொண்ட சாறுங் கூடக்கலந்து, தோயமதி - ஒருமாதம் முப்பது நாள் வரைக்கும் நித்தியப்படியாய் மேலே சொன்ன பிரகாரப்படி அந்தக்கதா ஆதவனென்கிற வெயிலின் கண்ணிலே வைத்தெடுக்க வேண்டிய தெப்படியென்றால், சூளை - முன்னாலே ஆதிகாலத்திலே எப்படிப் பிரதிக்கினை பண்ணிக் கொண்டிருக்கிறாயோ அந்தப் பிரதிக்கினைப் பிரகாரம் தப்பாமறபடிக்கு நிசத்துடனே அபந்த மில்லாமறபடிக்கு மேல் வர்த்தமான விசேஷங்களை யெல்லாமறிந்து நல்லயோசனை பண்ணிக் கொண்டபடியே பிறழாமல் வைத்துக் கொண்டு, இரு மூவொருபலத்துக் கென்று மென்று வென்றே - எப்படியென்றால் ஒருபலம் அப்பிரகப் பொடிக்கு ஒருநாளைக்கு மாத்திரம் ஆறுபல மென்று பொதுவாகச் சொன்னாரான போதைக்கும் ஒருபலஞ்சிட்டச் செங்கற் பொடியுடனே எருக்கஞ்சாறு ஐந்துபலம் விட்டு அதனுடனே கலந்தூறுகிற சாற்றிலே இறுத்துக் கொண்டாலுஞ் சரியேயல்லவென்று முன்னமே கணக்கில்லாமறபடிக் கிரண்டுவகையுங் கலந்து ஊறவைத்ததிலிருந்து கொண்டதிலே ஆறுபலமாகக் கொண்டொருபலம் வேறே தள்ளிக்கொண்டாலுஞ்சரியே முடிவுக் கிருவகைப்பட்டதான விரண்டுமொத்தத்திலே என்றார்.

இப்படியே ஒருநாளெப்படிக் கட்டளை கடைப்பிடியோ அப்படிக்குத்தானே நித்தியமும் ஒருமாதமென்கிற முப்பது நாள் பரியந்தம் நித்தியமும் என்றென்கிற பரிநாமத்தையுடைத்தான வெயிலிலே

வைத்தபடியே அதிலே தானே இமிடிச் சாறானது பொருந்திக் கொள்ளத் தக்கதா யந்த மார்க்கமாகச் செய்து மேலே மலினமென்கிற அனுகூலச் சத்திராதியை வென்று ஜயங்கொண்டு, எய - அப்படி யதிகமான பேர் பற்றியிருக்கிற பிரமாண வெகுமதியைக் கனதந்தியாபரணமாக உண்டுபண்ணி இசைந்திருப்பாயாக வேண்டியது. பின்னும், இரு - சிரஞ்சீவிப் பட்டத்திலே நித்தியானந்த வேடிக்கையாய் ஒரு நிலையிலே நிற்பாயாகவெனும், மூ - அறிவிலே முதிர்ச்சியடையலாம், ஒரு பாவகாரிய கர்ம சேஷப் பெருக்கையெல்லாந் தள்ளிப் போடலாகும், பலத்தையெய் - அநீதமாகத் தாழ்ந்த பெருவெள்ளமாக வரப்பட்ட பிணிக்கூட்டங்களை யெல்லாம் ஒருமிக்கத்தானே அவிழ்தானுபான மென்கிற வரப்பிரசாதத்தினாலே பெற்றிருக்கப் பட்ட திவ்வியாஸ்திரங்களாலே பிரயோகத்தைப் பண்ணவேண்டியதாகையா லிந்த அப்பிரகத்தை இப்படிப் பரிசுத்தப்படுத்தி மேலே இதனாலே இருவகைப்பொருள்கள் பண்ணிக்கொள்ள வேண்டியது.

## கெந்தக சுத்தி

*ஆம்பிர மோஜை யறலாறு மோர்தொடிக்கே*
*ஆம்பிர மோஜை யறலாறே - ஆம்பி*
*மஜையுமா தேவியுர மாசறவென் றங்கி*
*மஜையுமா தேவியுர மால்.* 110

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரத்தின் செய்யுள் வெண்பா வென்னுதலிற்றோ வெனின் கெந்தகத்தினது சுத்தியை விவரமாகக் கூறுதனுதலிற்று (எப்படியெனில், வரலாறு).

ஆம்பிரம் - புளியம் பழத்தினதுள்ளே மேலோட்டைப் பற்றியிருக்கப்பட்ட புளிக்கசிவை ஊறவைத்ததிலிருந்து கொள்ளப்பட்டதான தண்ணீரும், மோஜை - புளித்திருக்கப்பட்ட காடித்தண்ணீரும், அறலாறும் - இந்தவிரண்டும் ஒருவிதத்திற்கு ஆறுபலமாக வரன் முறையான இந்த இரண்டு வகைக்கும் பன்னிரண்டு

பலமும் பின்னும், மோர் - புளித்த பசுவினது மோருமப்படியே ஆறுபல மாகக்கூட்டின பலம் பதினெட்டும் ஒருபலம் பொடியான கெந்தகத்திற் கிப்படியே முறை தப்பாமற்படிக்குக் கணக்குப் பார்த்துக் கொண்டு பின்னும் எல்லாம் இமிடித்தபின் இப்படியே பார்த்துக் கொண்டபடியே பண்ணிக் கொள்ளவேண்டிய தென்பதாம், தொடிக்கே - ஒருபலத்துக்கேயெனத் தேற்றேகாரங்கொடுத்தார் சமுசயமில்லாமற் பகுத்தறிந்து கொள்ளவேணு மென்பதற்குப் பின்னும் என்பதில்லாமற் பின்னும் பிரிக்கப்பட்ட தென்பதாம்.

எனவே, மேலு மெவ்வாறு மிவ்வாறே யறியப்படும், ஆம்பிரமோ ழையறலாறே - இப்படி நாம் பகுத்திதனை வியந்து கூறிய முறையானே யுண்டாகு மியற்கைப் பிறவி மலமிதென்று பண்டேயுளதாகியதா யெதிர்பார்த்த வாகடசாத்திரிகளாகிய வயித்தியர்களாலே மேலே இரண்டுமரபிற் செயற்பாலதான முறையைச் செவ்விதாகச் செய்து கொள்ள வேண்டியது. செய்துகொள்ளத் தக்கதாய் வந்து நேரிட்ட காலத்திலே அகத்திய மெப்படியும் நீங்க வேண்டியதா யிருண்மலப்பிழம்பாகி அந்தகாரமாகக் காணப்பட்ட மலினமானது பழம்பட்டதாய் மழுங்கியிருக்கப்பட்ட பாதங்கரிசற்று நீங்கிப் போகத்தக்கதா யறுக்கிறதற்கு வழியானது வேறேயொன்றில்லை. அதற்கு வழி இதுவேயாகலா னிதனை நீயறிந்து பார்த்துக் கொண்டிசைவாகச் செய்யவும் வேண்டியதாம். இனிமேலைக்குக் காலதாமசமும் அட்டியும் பண்ணவேண்டாம். பின்னுமுன்னாலே சொன்ன மலினமறுக்கப்பட்ட வஸ்துவான புளிநீர், காடித் தண்ணீர், மோர் இந்த மூன்றுடனே கூடக் கூட்டிக் கொள்வதான தொன்றுண்டஃதென்னவென்றால், ஆம்பி மழையும் - காளானைக் கொண்டுவந்து நறுக்கிக் கசக்கிப் பிழிந்து கொண்டதிலே வரப்பட்ட சாறும் முன்னே சொன்படி ஆறு பலமுங்கூடக் கூட்டி ஆக இருபத்து நாலு பலமுங்கூடச் சேர்த்துக் கொண்டு கலக்கிப் பிசறி இருக்கத்தக்கதாய் வைத்துக் கொண்டு, மாதேவியுர மாசறவென்றங்கி - கெந்தகத்திலே இருக்கப்பட்ட பழமையான பந்தத்துடனே கலந்திருக்கப்பட்ட மலினமானது நீங்கத்தக்க காரணம் வேண்டியிருந்தா லப்பாலே யதற்கெத்தனமாவது பின்னொருவிதமன்று; நெருப்பிலே முன்சொன்ன

ரசங்களை யந்தப் பிரமாணப்படிக்கே ஒரு வாய்குவிந்த பாண்டத்தில் மேலே மெல்லிய சீலை வேடுகட்டி யதிலே முன்னே சொன்ன நிறைப் பிரகாரமே கெந்தகத்தை யுள்ளே வைக்காமற்படிக்கு மேலேதானே வைத்து அதற்குள்ளே மேற்படி சொன்ன இரசங்களைப் பெய்து தீபாக்கினியாக எரிக்கிற பக்குவமா யிரண்டுசாமம் வரைக்கும் அப்பாலே அது பக்குவப்பட்டதிலே இறங்கிய சலமானதுள்ளும் மலினமானது மேலேயும் படியுமெப்படியென்றால் பன்னாடைக்குள்ளே நல்லவை எய்தித் தீயவை யானது மேலேயெப்படி நின்றுவிடுமோ அப்படியென்பதாம், மழையும் - அப்பாலே அதுமேகமானது எப்படி உலகத்திற்கு உபமானஞ் சொல்லுகிறதற்கு இடமில்லாமற்படிக்குப் பிரதியுபகாரமென்கின்றதை மாறில்லாமற்படிக் கென்றைக்கு நன்மையாகிய தண்ணளி செய்து பிராணிகளை இரட்சிக்கிறது போலே இந்தச் சுத்தியான கெந்தகமும் பிறகு அதனாலே பண்ணப்பட்ட அவிழ்தங்களென்கிற மேகமானது வயித்தியருடைய கைமுறை வழக்கமென்கிற சமுத்திரத்திலே அவர்களுடைய மகத்துவமென்கிற சலத்தைப் பானம் பண்ணியதனாலே நோயாளி அயல்மனிதரென்கின்ற பூமியின் கண்ணிலவர்களுடைய தேகமென்கிற சார்பிலே பிணிகளென்கிற கோடை வெப்பத்தை நீக்கி மேலே உரமென்கிற தண்ணளியைச் செய்துயிரின்பமென்கிற பயிரை வளரச் செய்யுமென்பது குறிப்பு உவமானமாக்கினார்.

ஆதேவியுரமால் - முன்னே சொல்லப்பட்ட வேதுகரவோ அதனாலே முன்னிருந்த சஞ்சிதப் பணிவர்க்கங்களெல்லாம் போய்விடச் செய்தப்படியே யவை போனவுடனே யந்த மருந்தினது பலவுண்மையினாலே மேல்வராநின்றதும் நீங்கி யதிகமான உடலின் கண்ணுண்டாக வேண்டிய சகல குணசம்பன்னத்துவமான குணங்களெல்லா மெய்யாயுண்மைக்கு உத்தாரமாக உண்டாமதற்கொன்று மனுமானமில்லை யென்றபோதே பெருமையுங் கனதந்தியும் பண்டிதனுக்கும் வாகட சாத்திரத்திற்கு மெத்த மெத்த உண்டாகுமென்பது சொல்ல வேண்டியதில்லை யென்பதாம். அப்படியும் அல்லாமல் முன்னமே, 'பதில் வார்த்தை பேசாதே கெந்தி மார்க்கம் பாரிய திவ்வுலகமெங்கும் பனுவளமாட்டே' யென்னும் பதினெண் சித்தர்களிலே

அழுகண்ணிச் சித்தரென்பவரு முன்னே இதைச் சிறப்பித்தோதினாரென்ப துலகமெல்லா மறியப்பட்டிருக்கு மானபடியினாலே இதனை நீ வழுவாமற் செய்யத்தக்கது.

## பாடாண சுத்தி

*பாக லிலையாம் பலத்துக் கிரண்டுபலம்*
*பாக லிலையாம் பலமலினம் - பாகல்*
*விரைத்தைல மைந்துதின மேலதுமுன் றப்பால்*
*விரைத்தைல மாகுமது மேல்.* 111

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பாவென்னு தலிற்றோவெனின் பாடாணத்தினது சுத்தியை விவரமாகக் கூறுதனுதலிற்று : (எவ்வாறெனில், வரலாறு).

பாகலிலையாம் - பாகலிலே கொம்புப் பாகற்காய் காய்க்கிற செடியானது வெகுநாளாய்ப் பழையதாகப் பழப்பட்டிருக்கிறதான செடியினிலை, கொடி, பூ, காய் சமூலமும் இடித்துப் பிழிந்து கொண்டு அந்த ரசமானது, பலத்துக்கிரண்டு பலம் - ஒருபலம் பாடாணக் கல்லுக்கு இரண்டு பலம் பாகலிலைச் சாறுமாத்திரம் ஒரு நிறுக்குப் படுத்தியந்தப் பிரிவுண்டான பிரமாணத்துக்கு எள்ளளவாகிலும் வித்தியாசமில்லாமல், பாகல் - அதிலே முன்னே சொன்னபடியே ஒருபலம் பாடாணக் கல்லைப் பொடித்தளவைப்படியே ஒன்றும் பிறழாமற்படியே இரண்டு பலமாகிய முன்னே சொன்ன பாகலிலையினது சாறுவிட்டுப் பதினைந்து நாளைக்கு மாத்திரம் நித்தியப்படியே சாறுமுதற் பொருளாகிய கல்லென்கிற பாடாணத்திலே இமிடிப் பொருந்திப் போகத்தக்கதாய் வெயிலின் கண்ணிலே வைத்துப் பற்றிக் கொள்ளவே மேலானவன்மையுண்டான பின்பு, இலையாம் பலமலினம் - இல்லாமற்படி நீங்கிக் கெட்டுப் போய்விடும். பொல்லாத மார்க்கமென்கிற கருப்பத்தின் வழியிலே பிரிக்கப்படாதே வன்மையாகத்தானே அழுந்தியிருந்த களங்கமென்னும் மலினமான அழுக்கான தானபடியினாலே அறிவினாலறிந்துகொண்டு

செய்யத்தகுமான மார்க்கத்தின் வழியிலே நிதானக் குறிப்பானது வரத்தக்கதான விவரத்தையறிந்து செய்ய வேண்டியது, பாகல் விரைத்தைலம் - பின்னேயு மெப்படி யென்றால் முன்னே சொன்னபடியேயான பிற்பாடு பின்னேயும் பதினைந்து நாளைக்கு முன்னர்ப் பின்னுமொரு நிதானப்படியே பிலாக்கொட்டை என்கிற பலாவினது விரையிலே பக்குவமாய் எந்தப்படிக்குத் தைலமென்கிற எண்ணெயை எடுத்துக் கொண்டு ஒரு பலம் பாடாணக் கல்லுக்குப் பிரமாணமாக எவ்வளவு தைலமான பலாவிரைத் தைலம் விடவேண்டியதென்றால் ஐந்து தினமேலது மூன்று - பதினைந்து நாளைக்குமேலே எந்த விதமாய் நடந்ததோ அப்படியே நித்தியப்படியாய் ஒருபலம் பாடாணக் கற்பொடிக்கு மூன்று பலம் தைலம் பலாக்கொட்டையிலே எடுத்த எண்ணெயை விட்டுப் பிசறி அதை வெயிலிலே வைக்கவும்.

அந்த எண்ணெய் அந்தப் பாடாணக் கல்லிலே இமிடிப் போகத்தக்கதாய் வெயிலின் கண்ணிலே வைத்து இமிடின பிறகெடுத்து வைத்து மறுநாளைக்குமப்படியே செய்திப்படியே பதினைந்து நாளைக்கும் பற்றுவதாகச் செய்த பிற்பாடு அந்தப்படியேயான பிற்பாடு, அப்பால் - அப்படியே முப்பது நாள் வரைக்கு மிரண்டு வகையான விதத்திலே பண்பாகச் செய்த பிற்பாடு சுத்திபட்டு மலினமான மாசு வாங்கிப் போய் மல நின்மலமான திவ்வியமான பொருளாயிருக்கும். அப்படியாகவே அது துல்லியமான களங்கர கிதமான வஸ்துவாம், விரைத்தைலமாகுமது மேல் - அப்பாலே அட்டியில்லாமற்படிக்கு மேலான ஆயுள் வேதிய ரென்கின்ற வயித்திய சாஸ்திரிகளான பண்டிதர்களாலே பண்ணப்பட்ட செயப்படுபொருளான வெண்மை செம்மையென்று சிறப்பிக்கப்பட்டதான பற்பத்தையுஞ் செந்தூரத்தையும் பண்ணத்தக்க முறைப்பிரகாரம் பண்ணிக் கொண்டனுபானப் பிரயோகப்படியே புசிக்க வேண்டிய பேர்களனு கூலமாகப் புசித்துத் தேகத்திலே யுண்டாயிருந்த பொல்லாத பிணிக் கூட்டங்களை யெல்லாம் போக்கிக் கொண்டு மேலான வுல்லாபமென்கிற சுவர்க்காதி போகத்திற்கு நிகரான சௌக்கியத்தை யடையலாகும். பின்னுமொரு விதத்திற்குண்மை உற்பத்தியாயிருந்து புண்பிணிகளையெல்லாம் போக்குவதான குளிகை என்கிறதான

மாத்திரையையும் பண்ணவேண்டிய முறைப்படி பின்னுங் கொஞ்சம் பரிவான சரக்குகளையும், பிரித்துச் சேர்க்கவேண்டிய மாத்திரப் பிரமாணமறிந்து சேர்த்துக் கொண்டு மேலே அப்படியே பண்ணியதைக் கொண்டெப்பேர்ப்பட்ட பிணிகளையும் போக்கடித்துக் கொள்ளலாமான போதைக்கு மிந்தச் சரக்கைச் சுத்தி பண்ணுகிற மார்க்கத்திலே கொஞ்சம் பிசகின போதைக்கும் பொல்லாத ஆலகால விடத்தைப் போலே அவிழ்தத்தை விடமாக்கிப் போடுமென்பது கருத்தாகையா லது மேலென்று விதந்து கூறினார்.

இப்படியே முன்னோர்களான பேர்களு மிந்த உலகத்தின் கண்ணிலே இருக்கப்பட்ட வார்மை சீர்மை படைத்த வயித்தியருடைய நிர்வாக வல்லாண்மையினாலே பாடாணமும் நாபியு முதலான ஆலகாலக் கொடூர விடத்துக்கு நிகரான இவைகளையும் பக்குவப்படுத்துகிற மார்க்கமாகப் பக்குவப்படுத்தி அதைத் தாபிதமான திவ்வியாமிர்தமாகப் பண்ணி அனுபான முதலான இங்கித வன்மையாகிற காரிய காரணங்களாலே இடமும் காலமும் வலியும் பார்வையினாலேயுங் குணத்தினாலேயுந் தெரிந்துகொண்டு பிரயோகம் பண்ண எவ்வளவு நிர்வாகமோ அவ்வளவு நிர்வாக மார்க்கந் தெரிந்து செய்வார் களென்பது எவர்களுக்கும் தெரியத்தக்கதாய்ப் பதினெண் சித்தாதிகளிலே போகமுனி யென்று சொல்லப்பட்ட மகத்துவமான பெரியவரும்.

*"பாடாண நாபியென்னு மால காலப்*
*பண்புநிலை யறிந்ததையே மலின மாற்றிக்*
*கோடான கோடியெனு மவிழ்த நன்மை*
*கொண்டாடு பண்டிதரே குணவார்காணே."*

என்றுங் கூறினாரென்று மற்றுமேலான பண்டித சிலாக்கியரான தெய்வ வயித்தியராகிய பலப்பட்ட கீர்வாணமென்னும் வடமொழிப் பண்டிதரானவர் தேவபாடையிலே செய்ததான முன்னூலென்னும் தன்வந்திரியமென்கிற சாத்திரத்திலேயும் "பாஷாணாதிமிறுதம்ப வெது சமத்தா விஷதபாண்டி தோத்தமே" யெனவும் விதந்து இப்படியே எல்லாப்

பொருண்மை யென்கிற அருமைப்பட்டிருக்கிறதான வடமொழிச் சுலோகார்த்தமும் பண்டிதாளுடைய நிர்வாக மெவ்வளவோ அவ்வளவுதான் அவிழ்தமையென்று சொன்ன படியே இவரும் அதையே வருவித்தோதினாரென்பதை எடுத்துக் காட்டுவமையலங்கிருதமாகத் தோற்றுவிக்க வேண்டியபடியினாலே இனிதான பெரியோர்களுடைய முன்னூலென்னுங் கீர்வாணத்திலுந் திராவிடத்திலு மெடுத்துக்காட்டு முதாரணங் காட்டினார். பின்னு மொருவித மெப்படியென்றால் இதற்குப் பொல்லாங்கென்பதொரு வேளையினாலே தப்பிதமான பிசகு வந்தாலெப்படியென்றா லிதற்கு முறிப்புப் பாகலிலை ரசமென்று சொல்லுவார்கள்; சில பேர்கள் அதனாலே முடியாது பின்னையெதுவென்று மயங்கவேண்டியதில்லை, மிளகு ஒன்று மாத்திரம் போதும். அதுமாத்திரம் மகாமர்ம்மாகப் பண்ணத்தக்கின கிரமப்படியே அறிந்து பண்ணிக் கொள்ள வேண்டியதாம்.

## நேர்வாள சுத்தி

*ஆமலகை யாந்தகரை யாமலத் தின்மஹை*
*ஆமலகை யாந்தகரை யத்திடைவீ - யாமலகை*
*பத்தரையு மையரையும் பார்த்திறுதி சோபியடு*
*பத்தரையு மையரையும் பார்.* 112

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா வென்னுதலிற்றோ வெனின் சோபி யென்றும் ஒருவகைச் சோபையென்றும் பேர் பெற்றிருக்கப்பட்டதான நேர்வாளத்தினது சுத்தியை விவரமாக்கி வழுவாமற் கூறுதனுதலிற்று. (எவ்வாறெனின், வரலாறு).

நேர்வாளமென்கிற சரக்கைச் சுத்திபண்ணிக் கொள்ள வேணுமென்றால் அதற்குபாயங்கூறுகின்றார். ஆமலகையாம் - நெல்லிப்பழக்காயை இடித்துச் சாறு பிழிந்து கொண்டந்த ரசமும், தகரை - கரிசலாங்கண்ணியை இடித்தந்த ரசமும் (கரிசலாங்கண்ணி

யென்பதற்கு முதற்குறை விகாரமாய்த் தகரையென்று பேராயிற்று. ஆம் - என்பது பொதுப்பெயராம் நீரின் பெயர்), ஆமலத்தின் மழை - பசுவினது சாணத்தைப் பிழிந்து கொள்ளப்பட்ட ரசமான சாணிப்பாலும் பின்னும், ஆமலகை - இப்படிச் சொல்லப்பட்ட செவ்வெண்ணான தொகைக் கணக்கிலே உட்பட்ட நெல்லிப் பழக்காயினது சாறும் கரிசலாங்கண்ணிச்சாறும் பசுவினது சாணிப்பாலுமான மூன்றுமாகிய பின்னும்; ஆந்தகர் - மனதை இடித்துப் பொடி பொடியாக்கிப் போடப் பட்டத்தை உண்டாக்குவதான வனுமானத்தை மெத்த மெத்தக் காண்பிக்கத் தகுமானதொரு தொகுப்பிலே வந்து நேரிடப்பட்டதான, ஐயத்திடை - மிகுந்த சந்தேகமென்கிற விரண்டா விதத்திலே அகப்பட்டுக் கொண்டு, வீயாமல் - மனம் சஞ்சலத்திலிறந்து உட்கிப்பாழ்த்த தேர்ச்சியாய்ப் போகாமற்படிக்கு, அகை - உள்ளங் கையிலே இருக்கப்பட்ட வஸ்துவானதெப்படி அருமையாய்க்காணப்படுமோ அப்படியேயிருந்து பார்க்குமிடத்தில் ஒன்றொன்றிலே அறிவுட் படாமற்படியே (அங்கை - அகையென விகாரப்பட்டது,) முன்னமே சொன்னபடியிடை வீயென்றபடியினாலே நேர்வாளத்தின் மத்தியிலிருக்கப்பட்ட நடு நரம்பை யெல்லாம் எடுத்துப்போடவேண்டியது. இப்போதன்று; இனிமேலூறிப் பருப்பானது பரிசுத்தமான போது மேலோடு நீக்கப்பட்ட காலத்திலே இதுவும் நீக்கப்படும், பத்தரையும் - பத்தென்று சொல்லப்பட்ட கணக்கிலே பாதியான ஐந்தும், ஐயரையும் - ஐந்தென்று சொல்லப்பட்ட கணக்கிலே பாதியான இரண்டரையும் எனவே, இரண்டு பங்கும் ஒரு பங்குமென்றாயிற்று.

அப்படியான போதே ஒரு பலமென்கிற நேர்வாளத்திற்கு இரண்டு பலம் என்கிற மேற்சொன்ன சாறு வகைகள் இரண்டு பங்காயிற்று. ஆன போதைக்கும் வகை யொன்றுக்கு இரண்டு பலமெனவே ஆறு பலமென்றாயிற்று. ஒரு பலம் நேர்வாளச் சரக்கிற்கு ஆறு பலமென்றாயிற்று. ஆகவுமேலே எவ்வளவு சரக்குப் பரிசுத்தம் பண்ணிக்கொள்ள வேணுமென்றாலு மிப்படியே நிதானமாகப் பார்த்துச் செய்து கொள்ளலாம், பார்த்திறுதி சோபியடு - இந்த நிதானமாகப் பெரிய பாண்டத்திலே மேற்சொன்ன மூவகைச் சாறுகளும் ஒருக்காலே கணக்குப் பிரகாரம் சரக்கையு மொரு மெல்லிய சீலையிலே வைத்துள்ளே

பொதிந்ததை மேலேமூடிக் கவிப்பாகவைத்துப் பின்னமில்லாம லுடனே கமலாக்கினியாக எரித்தான பின்னரு மப்படியே விட்டெரித்துத் திரும்பப் பின்னருமப்படியே முக்காலுமான பிரகாரம் விட்டெடுக்கப் பிறகு மேலோடும் முன்னே சொன்ன மத்தியிலிருக்கப்பட்டதான நடுநரம்பும் போக்கியதையெடுத்துக் கொள்ள வேண்டியதாம். அப்பாலே எப்படியெப்படிச் செய்து கொள்ள வேணுமோ அப்படி யெல்லாஞ் செய்யப் பண்பட்டசையாமலிருக்கப் படிந்து வயித்தியர் கைக்கு யானைக்கிடப்பட்ட அங்குசத்தினது கூர்மையாயிருக்கப்படும், பத்தரையுமையரையும் பார் - பத்தி பண்ணப்பட்டதான அன்பையுடைய சீடனும் அந்தச் சீடனாலே பண்ணப்பட்ட பத்தி விசுவாசகரமான அன்பை அங்கீகாரமாக வாங்கிக் கொள்ளுகிற யோக்கியதையுடைத்தான குருக்களுமெப்படி ஒருவருக்கொருவர் ஒருமையாக நடந்து கொள்ளுவார்களோ அப்படியே வயித்தியனென்று சொல்லப்பட்ட குருக்களும் இப்போது பரிசுத்தமான சரக்கென்று சொல்லப்பட்ட சீடனும் ஏகீபவித்தொருமையாகி இசைந்திருப்பார்கள். அதையறிந்து பார்ப்பாயாக வென்பதாம்.

இப்பேர்ப்பட்ட உவமானத்தைப் படைத்த சோபியை அல்லாமல் வேறொன்றுமில்லை மலபந்தஹரி யென்ப தறியப்படுத்துகிற நிமித்தியம் பெரியோர்களாலே முன்னமே அகத்தியராகிய நாயனாரும் பெருநூற்றிரட் டென்னுங் கரிசலிலே எடுத்தோதிய உதாரணமெப்படி யென்றால்,

"சுசிபடு வசிகார சோபியதாபிய தொலைத்திடு மலத்திறைய நிலந்தனிலலைந்தே" எனவு மெடுத் தொருப்பட விதந்தோதிய மேற்கோளுதாரணங்களானு மறிந்து கொள்ளத்தகு மென்றவாறு.

## சங்கு சுத்தி

*இலைக்கள்ளி யாநந்தை யேகமைந் தாயினவெய்*
*யிலைக்கள்ளி யாநந்தை ஈர்வா - யிலைக்கள்ளித்*
*தந்தவரை யாகத் தழுவுமுன்னர் நோயகலுந்*
*தந்தவரை யாகமது தான்.* 113

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா வென்னுதலிற்றோ வெனின் சங்கமென்று சொல்லப்பட்ட சங்கினது பரிசுத்தமான சுத்தியைச் சிறப்பித்துக் கூறுதனுதலிற்று (எப்படியெனில், வரலாறு).

சங்கமென்றெல்லாராலேயும் பெரும்பான்மையாகச் சிறப்பித்துச் சொல்லப்பட்ட சரக்கைப் பரிசுத்தம் பண்ண வேண்டியிருந்தால் அப்படியே செய்ய வேண்டிய தெப்படி யெனில் :- இலைக்கள்ளியாம் - இலைக்கள்ளியிலையைக் கொண்டு வந்திடித்து அந்தச் சாற்றை, நந்தை - பஞ்சமியென்கிற வடமொழிக் குறிப்பு வார்த்தையைக் குறிப்பினாலே திராவிட மார்க்கமான ஐந்து பலத்தையுறுத்தப்பட்ட ஐந்துபங்குக்கு, ஏகம் - ஒரு பலமுறுத்தப்பட்டதான ஒருபங்கும் (ஆகவே, ஐந்து பங்கு ரசமான சாறும் ஒரு பங்குச் சரக்கான சங்கினது பொடியுமென்பதாயிற்று) ஆகவே ஏற்பாடுண்டாம், ஐந்தாயின் - இதற்கு நாளெத்தனை யென்று விசாரணை பண்ணுமிடத்திலே ஐந்துநாள் ஒரு நாளைப் போலே ஒரு பலம் பொடிச் சங்கத்துக்கு ஐந்து பலம் சாறு விட்டொரு நிறையாகத்தானே ஒருமித்ததிலே அசையாமற் படிக்கு, வெய்யிலைக்கள்ளி - நல்ல சூரிய உதயமாகிற காலந்தொட்டுச் சூரியன் அத்தமிக்கிறவரைக்கும் வேறே வித்தியாசப் படாமற்படிக்கு உண்மைக்கு உத்தாரமாகத் தானே பொருந்தி ரசமும் பொருண்மையான சரக்குங் கூடி அழுந்தத்தக்கதாய் வெயிலிலே நித்தியப்படிக்கு வரிசையாக ஒழுங்குபட ஐந்து நாளுமாகவே பிற்பாடு, ஆம் - இப்படிச் சொன்ன அவதி நாள்கள் ஐந்துமாகவே மலினமானது போய்ப் பரிசுத்தப்படும். அப்படியாகவே, நந்தை - அப்பேர்ப்பட்ட சொக்கமான பொருளென்கிற அந்தச் சங்கத்தை, ஈர்வாய் - செயப்படுபொருளான செய்யப்பட்ட முறை பற்ப முதலானதைச் செய்தப்படியான அவிழ்தமென்கிற திவ்வியாஸ்திரத்தைக் கொண்டு வயித்தியனென்கிற சீடனே நீ வியாதிகளென்கிற பகைவர்களை யெல்லாம் ஒருக்காலே அறுத்தெறிந்து போடுவாயாக வென்றவாறுடைத்தாகப் பின்னு மெப்படியென்றால், இலைக்கு - ஒன்றுமில்லாமலிருக்கப்பட்ட நீயான மாணாக்கன் கடைத்தேறிப் போகத்தக்கதா யுனக் குண்டாயிருக்கவேணுமென்று அள்ளித்தந்தவரை - கையிலே யெடுத்துப் பொருளைக் கிருபையுடனே,

யாதா மொரு பூர்வ புண்ணிய வசத்தினாலே ஒரு தெய்வமானாலும் பெரியோர்களானாலும் கொடுத்தவர்கள் உனக்கு எப்படி அனுகூலப் பட்டிருப்பார்களோ அப்படியே நன்மையுனக் குண்டாகத்தக்க திடத்தைத் தரப்பட்டது.

இந்தச் சங்கமான முறை அவிழ்தத்தை எடுத்துப் பிரயோகம் பண்ணவேணுமென்று பிரயத்தனமாவதற்கு முன்னமே, தழுவுமுன்னர் நோயகலும் - அப்பேர்ப்பட்ட திவ்வியமான அவிழ்தத்தை எடுத்துப் பிரயோகிக்கப்பட்ட பண்டிதனை ஒருமைப்பட்டு நம்பின நோயாளி ஆனந்தகரமாகக் கையினாலே ஆலிங்கனம் பண்ணிக் கைவசப்படுத்திக் கொள்ளும்படியாய் நினைக்கிறதற்கு முன்னே தானே அவன் சரீரத்திலேயிருந்த பிணிகளெல்லாம் பறந்துபோய் விடு மானபடியினாலே, தந்தவரையாக மதுதான் - அப்பாலே அவனுடைய சரீரமானது எப்படி உறுதியாயிருக்கு மென்றால் மதப்பட்ட யானையிலே அஷ்டதிக்கஜமானது எப்படி உறுதியாயிருக்குமோ அப்படியே யிருக்குமானபடியினாலே நீயும் பண்ணவேண்டிய உபாயப்படியே இந்தச் சுத்தப்பட்ட சங்கத்தை மேலே பண்ணவேண்டு முறைப்படியே பண்ணி அதையுட் கொள்ளவேண்டிய பிரகாரமே கனமான அனுபானாதிகளிலே கொள்வாயாக வென்று மாணாக்கனை முன்னிலையாகக் கூறுகின்றார்.

## பலகறை சுத்தி

*தமரத்தங் காய்வார் தமைப்புனித மாக்கத்*
*தமரத்தங் காய்வார் தசமை - தமரத்தங்*
*கண்டவரை யாகாயங் காமாலை மாமையுடற்*
*கண்டவரை யாகாயங் காண்.* 114

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா வென்னுதலிற்றோவெனின் முறையானே நிறுத்திய கணிதப்படியே கவடியென்று விதந்து கூறுதலான பலகறையினது சுத்தியை விவரமாகக் கூறுதனுதலிற்று (எப்படியெனின், வரலாறு).

தமரத்தங்காய் வார் - புளிச்சிருக்கப்பட்டதான தமரத்தங்கா யினுடைய நீரென்று சொல்லப்பட்டதான சாறு மிகவுந்தானே வைத்துக் கொண்டதிலே, தமைப் புனிதமாக்க - தங்களிலே தாங்களே உவமானமாகப் பிரயோசனத்தைப் பொருந்தியிருக்கப் பட்டவர்களான மகத்துவ மிகவும் மென்மேலும் படைத்திருக்கப் பட்டவர்களானவர்கள் எவர்களோ அவர்களை இனிமேற் கூறுவாம். ஆனபடியினாலே, அவர்களைப்பற்றிய மலினங்களைப் போக்கிப் பரிசுத்தப்படுத்த வேண்டிய முறையை வகைவிவரமாக மேற்சொல்லப்பட்ட பொருண்மையை வியப்பும் மகிழ்ச்சியும் வரத்தக்கதாய் உண்மையுடனே சொல்வதானார்.

தமரத்தங்காய்வார் - சத்திக்கத் தக்கதான கோஷப்புடனே இவ்வுலகத்தின் மேலான பெரியோர்களால் எடுத்துரைக்கப்பட்ட எண்ணாகிய சோதிட சாத்திரிகளான சோசியர் எல்லாரும் ஒருக்காலே, ஆயப்பட்டதான, கணக்கென்னுந் தொகைக்கு அனுகூலமாயிருந்து அவ்வெண்ணினது முடிவைப் பேர்பெற வுண்டாக்குவதான அலகு என்கிறதான நெல்லின் மணிக்கு நிகரொத்ததான இவ்வரிசைப் பேர் புனைந்த கவடியென்றுஞ் சோகியென்றும் பரிநாம பேதங்களுடையத்தான பலகறையை உண்மைக் குத்தாரப்படிக்கு முன்னாலே சிலாகித்து நாம் போற்றிப் புகழ்ந்தது என்பதாம். ஆகவே, வேறொன்றன்று என்பதாம், தசமை - பத்துப்பங் கதிகமென்று உருப்படச் சொன்னபடியினாலே ஒரு பலம் பலகறைப் பொடிக்குப் பத்துப் பலம் தமரத்தம் பழச்சாறென்பது ஏற்பாடாக வந்தது என்பார். தசமை யென்று உபசார வழக்கமாகக் கூறினா ரென்பதாம். இப்படியொரு நாள் எப்படியோ அப்படியே நித்தியமும் பத்துப் பலம் பழரச மொரு பலம் பலகறைப் பொடிக்காக விட்டு அதிலே இமிடிப் பரிசுத்தப்படத்தக்கதாய் இப்படியே பானுவாதபம் என்கிற சூரிய கிரணமென்கின்ற வெயிலிலே உதயகாலந்தொடுத்து அத்தமிக்கிற வரைக்கும், புடமாக வைத்து அதன்மேலேயெடுத்து வைத்து இப்படியே நித்தியப்படியாக பதினைந்து நாள் வைத்துலர்த்தியெடுத்து அதை மேலே பொருண்மையான ஒப்பான முறை செய்து கொள்ளலாம், தமரத்தம் - மெத்த ஆபத்துவமான பந்து சனங்களாகிறவர்கள் என்று உரைக்கப்பட்ட பண்டித சிலாக்கியவான்கள் கையிலே இப்படிப் பரிசுத்தப்பட்டுப் புனிதமாயிருக்கப்பட்ட பலகறைப்

பொருண்மையானது திவ்வியாஸ்த்திரமிருக்கிறது போலே வைத்துக் கொண்டு அப்பேர்ப்பட்ட வியாதியென்கிற பகையை எல்லாம் எளிதிலே வெல்லுவார்கள் என்பது குறிப்பெச்சம்.

கண்டவரையா - முன்னமே பண்டிதரென்கின்ற சுத்த வீரர் கையிலே அகப்பட்ட வீர கோதண்ட வில்லைப் போலே இந்த முறைப் பொருண்மையை வைத்துக் கொற்றம் பொருந்திய செயத்தை யடைவார்கள் ஐயா; எப்படி யென்றால் வேறே யோசனையில்லை ஐயனே நீயும் அப்படி யோசனை பண்ணத்தேவையில்லை, காயங்காமாலை மாமையுடற்கண் - அப்பாலே நோயாளியினது மெய்யிலே இருக்கப்பட்டதான வியாதிகளிலே பேதாபேதமான காமாலைகளிலே வெகு விதங்களும் தேமல்களிலே வெகு விதங்களும் எரிந்து அதிக உட்டிணப் பெருக்கத்தை உண்டாக்கப்பட்ட நேத்திரப் பிணிகள் வெகு விதங்களும் பின்னேயும் பலப்பலவிதமான வினைக் கூட்டங்கள் எல்லாம் பலப்பட்டு இகல்புரிவதான காலத்திலே அந்த இகலைப் போக்கடிக்க வேறே உபயமில்லாமற் படியினாலே மனத்திலே ஒரு தயக்கத்தை உண்டாக்கி அறிவைப் பரிதவிக்கப் பண்ணும்.

அப்போது எப்படியென்று மனம் பேதிக்க வேண்டியதில்லை. ஒரு மனோதைரியத்தினாலே இப்படிப் பரிசுத்தப்பட்ட மலநின்மலோத்தம மாயிருக்கப்பட்ட பொருளைப் பிரயோகம் பண்ணவேண்டியதென்பதாம். அப்பாலே கொண்ட பேருடைய உடலைப் புனிதப்படுத்தி உரமாக்குமென்பதற்கு உவமானம் ஒன்றுமில்லை. மகாதவஞ் செய்த பேர்களுடைய காய கல்பமான தேகமெப்படியோ அப்படியாகும். பின்னும் மேலான உண்மைப் பொருளான சஞ்சீவி எப்படியென்றால் அரிதான கருநெல்லி, வெண்சாரை, ஆல் அடியால் இப்பேர்ப்பட்ட பொருண்மை யுண்டபேர்களுடைய காயமெப்படி உண்மைப்படுமோ அப்படியாம், தவரையா - மகாத்துமாக்களை ஆச்சரியமாகச் சொல்ல வேணும் போலேயானால், காயங்காண் - மேலே பாயப்பட்ட ககனக் குளிகையை உண்டபேர்களுடைய சரீரமானதெப்படி உரமாகி மெய்யுணர்ச்சிக்கு ஏதுகரமாகிய பண்பை உண்டாக்குவ தெப்படி யிருக்குமோ அப்படியே பண்ணபடுமாதலான் வேறே யோசனை பண்ணாமற்படியே உண்மையாக

நீ அதனைக் கொள்ளக் கடவையென்று வற்புறுத்திக் கூறினாரென்பது தோன்ற முன்னோனான அகத்திய முனி முதலான பெரியோர்களாலே எடுத்துரைக்கப்பட்ட நன்னூன் முறைகளினுமிதனையே விதந்தெடுத்துக் காட்டும் அம் மார்க்கமாகவே கொங்கணரும் குறுந்திரட்டிலே, 'சோகிய மலத்தாலே யுலகிங்காச்சே சோர்வற நீ யறியப்பா' வென்றுஞ் சொன்னார். இஃதுண்மை யென்றே எவர்களும் மேற்கொள மெல்கித்தென்று அறிதற்கு ஏதுகரமாம் என்றதையும் மனதறியவேண்டும்.

## இலவண மென்கிற உப்பின் சுத்தி

*கழுநீ ரறலவணக் காய்ச்சியதண் டுலக்*
*கழுநீ ரறலவணக் கக்கிக் - கழுநீர்*
*விடவா று நாண்முழுது மேலுமதே செய்து*
*விடவா று நாண்முழுதும் வெல்.* 115

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா வென்னுதலிற்றோ வெனின் இலவணமென்னும் உப்பினது சுத்தி என்கிற பரிசுத்தத்தைக் கூறுதனுதலிற்று (எப்படியென்றால், வரலாறு).

கழுநீரறலவண - பரிசுத்தம் பண்ணவேண்டியதற்கு இசைவாக மலத்தை அந்த மேன்மையுண்டான பொருளான சரக்கினிடத்திலே இல்லாமறபடிக்குப் போக்கடிக்கத் தகுமான நல்ல குணத்தைச் சேர்ந்த கிரிகையானது உரித்தான சுட்டுப் பொருளினிடத்தில் வசிக்கத் தக்கதானது தோற்றப்படவும், காய்ச்சிய தண்டுல - மேலே எப்படி என்றால், நன்றாய் அக்கினியிலே எழுவகைப் படத்தக்க விதமாகக் காய்ச்சுகிற நிமித்தியமாகப் பெரும்பான்மையாக வேகம் பொருந்தி வரவே மேலும் எப்படி அரிசியைத் தவிடான மாசு ஒழிந்து போக நீரினாற் பற்றறக் கழுவுகிறபோது உண்டாக்கப்பட்ட கழுநீர்ச்சலமும், பின்னும், பின்னும் நீரினிடத்திலே எப்போதும் வசித்துக் கொண்டிருக்கப்பட்ட செங்கழுநீர் வேர் முதலான சமஸ்தமு முட்படத்தான் போட்டு நன்றாய்க் கசக்கி ஊறவைத்திருக்கப்பட்ட சலமான தண்ணீரும் பின்னும், கழுநீரறல் -

பின்னுங் குவளையிலே கொஞ்சம் பேதப்பட்டிருப்பதான இந்தீ வரமென்கிற சாதிப்பெயரை யுடைத்தான நல்ல லக்ஷணங் கொண்டிருப்பதான புட்பத்தையும் மேற்படியாகத்தானே கலந்திருக்கப்பட்டதான சலமென்கிற தண்ணீரும் இந்த மூன்று விதமான தண்ணீரையும் முன்னே சொன்னப் பிரகாரமே, லவணக்கக்கு - வீட்டிலே வழங்கத்தகுமான மார்க்கப்படியே ஆதாரமாகச் சொல்லப்பட்ட வீட்டுப்பைவிட்டு வெளிப்படையாகத் தள்ளுபடியாய்ப் பொங்கி வழியப்பட்டதிலிருந்து தோன்றும் மலினம் என்கிற கீழ்மையான குணக்கசடு, இகழுநீர் - எல்லா மேலெங்கெங்கு நிகழ்ச்சி பண்ணுவதற்கிடனில்லாமல் ஒழிந்து போகத் தக்கதாய் வரிசையுண்டான நன்மையைப் பண்ண வேண்டியது ஆன படியினாலே வகைமை ஏற்பாடுண்டாக, விட - அதைவிட்டுப் பிரிந்து போகவும்.

ஆறுநாள் முழுதும் மேலுமதே செய்து - ஆறுநாள் ஒவ்வொன்றுக்கு மாத்திரமாகவே மூன்றிற்கும் மூவாறு பதினெட்டு நாளென்றாயிற்று. அஃதெப்படி யென்றால் முதல் கழுநீரான அரிசிக் கழுநீராலே ஒரு பலம் உப்புக்கு ஆறு பலம் விழுக்காடு ஒரு நாளைக்குச் சூரிய உதயந்தொடங்கி அஸ்தமனமாகிற பரியந்தம் முன் வெயிலிலேவைத்து நாள்முழுதும் அப்படியாய் இமிடின பிற்பாடு மறுநாளைக்கும் அப்படியே. இப்படியே ஆறு நாளான பிற்பாடு நீலோற்பலப்புட்பத்திலிருக்கிற தண்ணீரிலேயும் இப்படியே ஆறுநாளான பிற்பாடு மேலே இந்தீவர மென்கிற சாதிப்பெயர் கொண்ட குவளையினது சமூல நீரிலேயும் இப்படியே ஆறு நாளான பிற்பாடு மேலே அடுத்த நாளான பத்தொன்பதாம் நாள் சூரிய உதயத்திலே முன்னே சொன்ன மூன்று வகைக்கும் வகையொன்றுக்கு ஆறுபலம் விழுக்காடு பதினெட்டுப் பலமும் வேறு விட்டு அதிலேயும் முன்செய்திருக்கப்பட்ட இலவணம் என்கிற உப்பைவிட்டுக் கமலாக்கினியாக காய்ச்சினால் அதிலே அந்த நீர்வற்றுகிறதே, எரிப்புக்கு இறுதியான பிரமாணகால மென்று அறிந்து கொள்ளவேண்டியது. அப்படியாகவே மேலே அப்படி யாக்கையைப் பொருந்திய பின்னர், விடவாறு - குற்றம் பொருந்திய நஞ்சென்று விகற்பப்படத்தக்கதாக முன்னேதான சொல்லிய உப்பினது அகந்தையான மாசு என்கிற களங்கப் பிழையினது மார்க்கங்களெல்லாம்

பற்றற்றுப் போய்விட்டு மேலே அதுதானே நன்றுறுவதான திவ்வியாமுத போசனாங்கி யென்று மேலான உண்டியாதிவாகினி யென்றும் பெரியோர்களான பதினெண் சித்தாதிகளாலேயும் மென் மேலாகச் சொல்லோத்துகளினாலேயும் பண்ணப்பட்ட நூல்களில் உதாரணமாக உரைக்கப்பட்டது. பின்னும், வடமொழிப் பனுவலான கீர்வாணத்திலே உண்டான தன்வந்திரியத்திலேயும்.

"நீ தோஷமுந்தகிறமெனாதரகாமாரத சமஸ்ததெனு" என்று (சுலோகம், மூல நூலோடு ஒப்பிடல் வேண்டும் (ப-ர்) உதாரண வாய்பாடாகச் சொன்ன முறையான) திராவிடம் என்கிற தமிழ் வாய்பாடான தமிழ் முனியாகிய அகத்திய முனிவரும் பரிவாகத் தானே எடுத்துரைக்கப்பட்ட வாகட சாத்திர மென்கிற கரிசலிலேயும் உதாரணம்.

*"நக்களங்க வமுதொன்றில் துளங்க மேவும்"*

என்று உப்பினது மகிமையைத்தானே எடுத்தோதினார். பின்னும், வசனவாகடம் என்கிற விபுதானம் என்கிற வயித்திய நூல்களிலேயும் இப்படித்தானே அநேகம் அநேகமான நன்மார்க்க வசியமாகத்தானே இலவணத்தினாலேதானே எல்லா முறைகளும் விரிவாகி எப்படியுங் காயசித்திக்கு ஏதுகரம் உண்டாகு மென்று உண்மைக்கு உத்தாரமாகத்தானே எடுத்துரைத்தார்கள். ஆனபடியினாலே இங்கும் இப்படியே கருத்தையுள்ளடக்கிக் கூறினாரென்பது வெளிப்படை குறிப்பென்னும் இரண்டு வகைகளும் இசைவாகத்தானே விடாவென்று உரைத்தாராகையால் விவரிக்கப்பட்டதான அருத்தாபத்தி ஏகாரலோபமென்கிற வாய்பாட்டினாலே அமுர்தமென்கிற உதாரணப் பொருண்மையும் அதனாலே எப்பேர்ப்பட்ட நன்மையுங் கிடைத்து உடலைப் பஞ்சேந்திரிய உற்பத்தியான பூமி ஏதுகரம் வாய்க்கப் பண்ணுவதான வசியகார்த்தம் இசையப்பண்ணுமென்றும், பண்ணவே, தேவபோசனம் என்னும் அமுர்தபான ராச்சியமென்னுஞ் சுவர்க்காதி போக பாக்கியங்களெல்லாந் தானேவந்து கிட்டப்பண்ணவரும் என்றும் பொருள் படத் தகுமென்றாயிற்று, நாண்முழுதும் வேல் - ஆனபடியினாலே, பெண்களுக்கணியாய் நின்ற பூஷணங்களிலே பிரதான

பூஷணங்களானவை நான்கு. அவைகள் எவையென்றால் நாணமென்றும் - அச்சமென்றும் - பயிற்பென்றும் - மடமென்றும் வரிசைக் கிரமமான நான்கும் எப்படி இசைவாகி யிருக்குமோ அப்படிப் போலே வாதமென்றும் பித்தமென்றும் சேட்பமென்றும் தொந்தப் பிணிவிடமென்றும் இப்போது உரைக்கப்பட்டதில் அண்டாகாரம் என்கிற உப்பை அடுத்ததற்கு அணியாகியதற்கு உட்பட்டடங்கியிருக்கும். ஆனபடியினாலே நீயும் இப்படியே நாம் பரிவாக வெடுத்து உரிமையுண்டாகச் சொன்ன இலவணமென்கிற உப்பை நின்மலமாக்கிக் கொண்டு அதனாலே பிணிப்பகையை வெல்வாயாக என்று உண்மையாகச் சொன்னார்.

## முத்து சுத்தி

*முத்தினத்தை மாசொழிக்க முன்னினளை மூன்று*
*முத்தினத்தை மாறார் முயலுவார் - முத்தினத்தைக்*
*கொண்மூவா மாத்தியரைக் கும்பிட் டறநோயைக்*
*கொண்மூவா மாத்தியரைக் கும்.* 116

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா வென்னுதலிற்றோவெனில் முத்தினது சுத்தியைக் கூறுதனுதலிற்று (எவ்விதமென்றால், வரலாறு)

முத்தினத்தை - மவுத்திகம் என்று சிலாக்கியமாகச் சொல்லப்பட்டதான இராசரத்தினம் என்று முன்னோர்களாலே உவமானமாக எடுத்துரைப்பதான முத்தினது, மாசொழிக்க முன்னின் - களங்கத்தைப் போக்கடிக்க வேணுமென்று மனத்திலே யாதாமொரு வாகட சாத்திரிமார் என்கிற பேர்கள் யோசனை பண்ணுவார்களே யாமாகில் அதற்கவர்கள் செய்யவேண்டிய காரியம் என்னவென்றால், அளைமூன்று - தயிர், நல்ல பசுவினது பாலிலே தோய்த்து நல்ல புளிப்பு உண்டாயிருக்கப்பட்ட தயிரிலே ஒன்றுக்கு மூன்றென்று சொல்லப்பட்டதான ஒரு பலம்முதற் பொருளான முத்துக்கு மூன்று

பலமென்று நியமிக்கப்பட்டதான மேற்படி சொன்ன தயிர் மூன்று பலம் ஒருக்காலே அதிலே விட்டு ஊறவைத்து முன்னே சொன்ன பிரகாரஞ் சூரியபுடமாகக் காலமே தொடுத்து சாயந்திர பரியந்தமாக வெயிலிலே வைத்து இந்தப் படியே, முத்தினத்தை மாறார் முயலுவார் - ஒருநாள் எப்படியோ அப்படியே அந்தப்படியே ஒன்பது நாள்வரைக்கும் விடாமல் ஒரு கடைப்பிடியாய் வரிசைக்கிரமப்படியே பிரயத்தனத்தை விட்டுவிடாமல் வகை விவரமானது உண்டாகத்தானே செய்ய வேண்டிய கிரிகையைச் செய்யவேண்டியது.

அப்படிக்குத்தானே செய்த பின்னரான மறுகாலத்திலென்னும் பத்தாம் நாளிலென்கிற பிற்காலத்திலே, முத்தினத்தை - முந்தி பரிபக்குவமானதான நின்மலப்பட்டிருப்பதானதாகிய முதன்மை என்கிற மவுத்திக மானது மலின மென்னுங் களங்கத்தைவிட்டுப் பிரிந்து அமலமென்னும் பரிசுத்தத்திலே அதிகப்பட்டிருப்பதென்னுந் திவ்விய யோக்கியதை பெற்று இப்புவியென்னும் பிரபஞ்சத்திலே அதிகார முதன்மை கொண்டதனாலே இ ராசரத்தினம் பொருந்தின, கொண்டு - இப்பேர்ப்பட்ட மவுத்திக மென்கிற முத்தைப் பரிசுத்தப்படப் பண்ணியதைக் கை வண்மை உண்டுபண்ணப்படுமென்கிற திவ்வியாஸ்திர மகிமை யாக்கையிலே இருக்கத்தக்கதாகக்கொண்டு அதனாலேயுங் காலதேச வர்த்தமானங்களாலேயும் வார்த்தீபமென்கிற முதுமையை அடையப் பட்டவர்களென்கிறவர்களான, ஆமாத்தியரை - பண்டிதசிலாக்கிய வல்லமையுடைத்தான வயித்தியரை மெத்த வணக்க வினைய நன்மையைப் படைத்த வெகுமதிகள் உண்டாகத்தானே அனுதினமும் என்கிற சதா நித்திய காலமுந் தெய்வதரிசனமனோலய வாக்கியப் பரமானந்த உற்சவம் மிகவு முண்டாகத் தாம்பரம் என்னுந் தன்மை உற்பத்தியாகவும், கும்பிட்டு - வணக்க நமஸ்கார தோத்திரங்களென்கிற மூன்று விதங்களும் மென்மேலும் உண்டாகத்தானே மனமென்றும் வாக்கென்றுங் காய மென்றுஞ் செவ்வெண்ணாகத் தரமாகக் கூறாநின்ற திரிகரண சுத்தியாக மானத பூசை செய்வதெப்படியோ அப்படி மனத்தால் துணிவு தோன்ற நினைத்தலும், வாக்கால் துணிவு தோன்ற வாழ்த்தலும் காயத்தாற் பணிவு தோன்ற இறைஞ்சலும் மிகுமாறு கும்பிட்டென்றார், அறநோயை - வியாதிகணங்களென்கிற பிணிக்

கூட்டத்தினது மீசுரத்தையெல்லாம் ஒருக்காலேயற்றுப் பரிகரித்துப் போகத்தக்கதாய் அதிக வெப்பமறவும்.

கொண்மூவாம் - மேகமானது எப்படி முன்னாடிக் கடலிலே போய் நீரையுண்டு உலகத்தை இரட்சிக்குமோ அப்படியே வயித்தியர்கள் கைமுறையென்கிற ஆகாச மார்க்கத்தில் சென்று வாகட சாத்திர மென்கிற சமுத்திரத்திலே படிந்து அவிழ்தானுபானம் என்கிற நீரையுண்டு உலகத்தை இரட்சிக்குமோ அப்படியே வயித்தியர்கள் கைமுறை என்கிற ஆகாச மார்க்கத்தில் சென்று வாகட சாத்திரம் என்கிற சமுத்திரத்திலே படிந்து அவிழ்தானுபானம் என்கிற நீரையுண்டு இனிப்பென்கிற வருஷத்தைப் பெய்து சீவாத்துமா வென்கிற பயிரைப் பிணியென்கிற கோடையால் வருந்தாமல் இரட்சிக்கும் என்பதாம். மாத்தியரைக்கும் - வினையாளனென்கிற பிணிகொண்டவனைப் பக்குவமாகத் தன்னைப் பண்டிதன் முகாத்திரமாக நல்ல உபாயமாகப் புசிக்கச் செய்து அதனாலே ஆனவுடனே வியாதிகளென்கிற உருப்பட்ட பொருளை யரைத்து மசியக் கெடுத்துப் போடுவதே யல்லாமல் விட்டு விடுவதிராது. ஆகையால் இதையறிந்து முறைப்படி செய்து கொள்க.

## பவள சுத்தி

*துப்பேக மாறு தொடியீந் திரதநவ*
*துப்பேக மாறு தொடியாமே - துப்பேக*
*மத்தனத்தை யாக மருட்டு மருந்தைநட்டா*
*மத்தனத்தை யாகபத்தை மாய்.* 117

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா வென்னுதலிற்றோ வெனின் பவளத்தினது சுத்தியையாம் பகுதியைக் கூறுதனுதலிற்று (எவ்வாறெனில், வரலாறு).

பண்டிதாள் பாமராள் உபயத்தார்களான இருதிறத்தவர்களுக்கும் மேலே எடுத்துக்காட்டுவமை எக்காலத்திலும் ஒப்பத் தக்கதான

மார்க்கத்தையே இவர் இங்கே எடுத்துக்கொண்டார் ஆனபடியினாலே, துப்பு - பவளமானது முதன்மையான பொருள் அதுதான் சுத்தப்படுத்த வேண்டியதாகையால், ஏகம் - ஒரு பலம் பவளத்திற்கு, ஆறு தொடி ஈந்திரதம் - ஆறுபலம் அதற்குக் கூட்டுறவான பேரீச்சங்கள் ஆதரசமென்கிற சாறும் இப்பிரமாண மாகவே ஒரு நிறையாகத்தானே ஒரு நாளைக்குண்ணுகிற பிரமாணிக்கப்படியே கடைப்பிடியாகப் பிடித்து நித்தியப்படி சூரிய உதய காலமே ஆரம்பித்துச் சூரியாஸ்தமானமாகிற காலம் வரைக்கும் வெயிலிலே வைத்து நித்தியப்படிவைத்து எப்போதும் ஒரு நிதானமாகி இருக்கத்தக்கதாய் இப்படியே, நவம் - இப்படியே இடைவிடாமற்படிக்கு நித்திய உபாதையுண்டாக்கத்தகுமான புதுமையுண்டானதென்று எவர்களும் இறும்பூதுகொள்ளத்தகுவதாக ஒன்பது நாள் ஒரு நாளைப்போலே இந்த வகைக்கு நித்திய சுத்தி செய்து பின்னர் மேலே எப்படியாமென்றால் அந்தப் பவளத்தைப் பிரியாமல் வெகுநாளாகப் பற்றியிருந்த, துப்பேக - பகைமை யென்கிற மலினமானது அதைவிட்டு எப்போது நீங்குமோ அப்போதே முன்னாலே பேதைமையினாலே அறிவு, நசிவு பொருத்தியிருந்தது பேதைமை யானதொரு காரணத்தினாலே வாங்கிப் போய்விடவே அப்பாலே அந்த அறிவானது எப்படி விளங்குமென்று மனுக்களிலே சொல்லப்படுமோ அப்படியாகும்.

மாறு தொடியாமே - வித்தியாசப்படாமல் வேறே ஒருமார்க்கம் படைத்தவர்களுடைய பெருமிதமான குணாதிசயத்தை நன்மையாகக் கொண்டாடிக் கொள்ளச் சமரசப்படுவதுபோலே அணியப்பட்டதான அஸ்தகங்கணத்தைப் போலே கைக்கும் பார்க்கிற பேர்களுடைய கண்ணுக்கு மெப்படி ஆனந்தத்தை யுண்டாக்குவது போலே ஒருக்காலே இந்த உவமானமே உதாரணமாக வயித்தியனுக்கு மிகுந்த பற்றுக்கோடென்னும் ஆதாரமாகிப் பின்னும் பிணியாளனுக்கு எப்போதும் உபகாரமாகித்தோன்றுமென்பதே கருத்தாகலான் இப்பதார்த்தத்தையே வியந்து கூறினார். துப்பேகம் - மேலேயிந்த முறைமை தப்பாமற்படிக்குச் செய்தாகிற வெண்மையுஞ் செம்மையுமான பற்ப செந்தூரங்கள் இரண்டிற்கும் அனுபான விதங்கள் வெகுவாகத் தானே நியமித்திருந்தாலும் அவைகள் வேறே இருக்கட்டும்; இவை

களிரண்டிற்கும் முதன்மையான அனுபானமானது நெய்யொன்று மாத்திரமே முக்கியமான அனுபானம், இரண்டாவது தண்ணீராம்; பெரும்பான்மையான முதன்மை நெய்யான படியினாலே துப்பேயென்று துணிவு தோன்றவே தேற்றேகாரங் காட்டினார்.

பிற்பாடு நீரென்பதிருக்க ஒன்றும் பேசாமற்படிக்குக் கம்மென்று விட்டு விட்டார். மற்றவைகளெல்லாம் பெரும்பான்மை சிறுபான்மையான விதங்க ளெல்லாம் ஒருக்காலுமில்லாமல் பண்டிதர்களுங் கால தேசவர்த்த மானங்களை ஆராய்ந்து பார்த்துக் கருமத்தையும் பார்த்துக் கொண்டு நேரெப்படியோ அப்படியே மற்ற அனுபான வஸ்துக்களையும் பாராட்டிக் கொள்ளுவார்களென்பதாம். பின்னேயும், அப்படிக்கு வராநின்ற அவிழ்தங்களாலே என்ன நன்மையைத் தருவதற்கிடமாமென்றால், மத்தனத்தையாக மருட்டு மருந்தை - வெகுவிதப் பொல்லாமையை யுடைத்தாகியதனாலே தொந்திப்பையே அதிகாரமாகப் படைத்து எப்போதும் விடாமல் தாலேலோ என்பதுபோலே அக்கினி மாந்தியம் முதலான வாத பித்த வெப்பையுண்டாக்கிக் கொண்டதனாலே பீசங்களிலே வாயுக்காற்றடைந்து தோல்துருத்தியிலே எப்படி நெருப்புக் காற்றடைந்து எப்போதும் உறுமோ அப்படியே ஏறியதனாலே இரண்டு அண்டங்களும் பருமிதமாக மிகவும் பருத்ததால் நீட்சியைக் கொண்டு மத்தளாகிருதியாகத் தொங்கி அலைமோதிக் கொண்டதனாலே ஆகமெங்கும் மாரி பொழிவது போலே நீர்ததும்பத் தக்கதாகத்தானே வேர்வை வேர்த்துவிட வெப்பமும் பொருமலும் மேலும் மேலும் வரச்செய்யுமென்கிற வாதாதி முப்பிணி வர்க்கத்தையே நாடோறும் பெருக்கிக் கொண்டிருப்பதான அக்கிரமாதிகாரத்தினாலே துர்ப்பிணிக்காதரவு உபத்திரவ மேலிட்டு அதுதானே ஆத்தும புருடனைப் பயப்படப் பண்ணப்பட்ட வெப்பத்தையே யுடைத்தான முதன்மையானே தானான இராசனென்கிற வாதப் பெரும் பிணியாகிற ஒரு புருடனைத்தானே அகலாது எப்போதும் ஒருமைப்பாடென்பது எவர்களுக்குங் காணத்தானே.

நள் - வாஞ்சையாகவும் - மேலான தோழமை கொள்ள வேண்டிய பிரகாரமே பிராண பதமான பொருத்தமுண்டான பண்பு தோன்ற, தாமத்தளத்தையா - தாமசப்பட்டு அதிகப்பொல்லாத குணத்தை எப்படியும்

மென்மேலும் பொருண்மையாகக் கொண்டிருக்கிற வாத பித்த தொந்த மத்தமாகிற பிணியுடனே கூடிய வெகுவிதமாகிற சேனைகளென்கிற பிணிவர்க்கங்களெல்லாம் வரப்பட்ட மூர்க்க வேகத்துடனே கூடின நோய்வர்க்கத்தை மாத்திரம் பரிகரித்தடித்துத் துரத்தும் என்பதை விட்டுவிடு, கபத்தை மாய் - பின்னும் வற்புறுத்திக் கூறுகின்றார் என்னவென்றால் வரலாற்று முறை வந்து நிற்கப்பட்ட சேட்பமென்கிற பிணியினது வன்கண்மையை முன்னேதானே அடித்து அதமாகிப் போகப் பண்ணும்; எப்படியும் அதற்கட்டியில்லை ஏனென்றால், வாங்காமற் பூமியின் கண்ணிலே அதிகவெயிலென்றும் வெப்பக் கோடையான கிரணாகரம் பரவவே முன்னமே வெளிப்படை நீரான குளங்கள் ஏரிகளிவைகளிலிருக்கப்பட்ட தண்ணீரெல்லாம் ஒருக்காலே வற்றிப் போகிறதற்கு முன்னே கிணற்றிலிருந்து ஊற்றாக ஊறிக் கொண்டிருக்கப்பட்ட தண்ணீரும் வற்றிப்போய் விடுமென்பது உண்மையார்த்தமாவது போலே வாதபித்தம் அத்தமென்பது வாங்கிப் போவதற்கு முன்னமே கபப்பிணிவர்க்கங்கள் எல்லாம் கெட்டு முறிந்தோடிப் போய்விடுமென்பது குறிப்பெச்சம் பெற்றிருக்கத்தக்கதாகப் பிரித்து இவ்வாறு கூறினார். பின்னும் மேலோர்களான வடமொழிக்காரரும் பிரதிவாதியான திராவிடக்காரரும் மிகவும் பத்திமையுண்டாகத் தானே உதாரணம்.

*"பிரவா ளேனா சுகுணம் பவேது*
*சதானந் தேது நகர்மானி"*

என்றும், மென்மேலும் இதையே யுரைத்தார், பின்னும்

*"வித்துரு மத்தொழி னித்திய மளித்திடும்,*
*மத்த மறப்பின ரித்தரை மீதே*
*வீறான கூறாகு. மாறாத மலமேல்"*

பின்னும் மேலோர்களான சித்தாதிகளுடைய நூல்களிலேயும் இப்போது சொன்ன அகத்திய முனிவருரைத்த கரிசற்படியே

தன்வந்திரியார் எடுத்துக் காட்டென்னும் அறப்பெருமார்கலியென்கிற தன்வந்திரிவாகடத்திலே

*"துகிரையே யழக்கொழித்துத் துவிதமும் பண்ணலாமேல்*
*வகிர்வடு வனையவுண்கண் வனிதையே இனிதுகேண்மோ*
*உகிர்முனி இரத்தகாச முப்பசம் பல்லைசோபை*
*நகிர்தமா நெய்நீர்பின்னர் நவில்வன வென்று முன்னே"*

இப்படிச் சொன்னது போலே பின்னும்,

*"பவளமப்பா மலப்போனா னன்மையுண்டாம்*
*பற்பமுத லாகுமதை நன்றாயாடும்."*

இப்படியென்றும் ஒருக்காலே வண்மையுண்டாகத்தானே சொன்னபடியே இருவரும் இப்படியான பவளத்தையே அருமைப் படுத்திக் கோடலே வேண்டியபடியினாலே இவரால் வரன்முறை தப்பாமற்படிக்கு ஒருவிதமாக உண்டான குணங்களையே யோசிக்கப்பட்டுரைத்த போதைக்கும்மேலான உபாதையை உரித்தான புத்தியாட்சி நல்ல வணக்க ஒருமைப்பாடான உறுதியால் விபரீதம் அனுமானமென்பதைவிட்டுப் போதக சத்தியார்த்தம் என்கிற உண்மைப் பெயரினாலே அறிவுண்டான பேர்கள் செய்துகொள்ள வேண்டிய முறைமைப்படியே செய்து கொள்ளத் தகுமென்று உத்தம வாக்கியப்படியே எடுத்தோதினா ராதலான் பண்ணப்படுவன ஒத்தறிந்து கொள்வார்கள் எப்படியும் மெய்யாயவர்.

## நாபி சுத்தி

*நாவிதனா லாசை நறுக்கவெனச் சுத்திசெய்த*
*நாவிதனா லாசை நடத்தலாம் - நாவிதனால்*
*கூறவற்றோ மோர்கவினங் கோமயமுன் றாதியொரு*
*கூறவற்றோ டோர்மதியிற் கொள்.* 118

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா என்னுதலிற்றோவெனின் சர்வாங்கவிடமென்று உலகத்திலே அதிகப் பயங்கரத்தைக் காட்டப்பட்டதான பச்சை நாவியினது சுத்தியைக் கூறுதனுதலிற்று (எவ்வாறெனில், வரலாறு).

நாவிதனால் – அமங்களமாய் இருக்கப்பட்ட ரோமத்திரள்களை யெல்லாம் அம்பட்டனென்கிற சவரகனாலே போக்கடித்து மங்களகரம் பண்ணுவதெப்படியோ அப்படிக்கு மிகவும் பண்ணப்பட்டதான மேம்படாத பரிசுத்தப்பட்ட நாணயம் பண்ணவல்ல சாமர்த்தியத்தையுடைத்தா னவனாலே, ஆசைநறுக்கலென – சமஸ்தமான மாசுகளையும் போக்கடிப்பதுபோல, சுத்திசெய்த – பரிசுத்தப்படுத்தி யிருக்கப்பட்டதான, நாவிதனால் – பச்சை நாபியினாலே, ஆசை நடத்தலாம் – பண்டிதனானவன் மனத்திலே எண்ணின இஷ்டப்பிரகாரமே இரண்டுவகை அவிழ்தானுபானச் செய்கைகளெல்லாவற்றையும் பார்த்து மேற்படியே செய்துகொண்டு அப்படித்தானே பிரயோக காரியங்களை நடப்பிக்கலாம்.

எப்படியும் அதற்குச் சமுசயமில்லையானபடியினாலே, நாவிதனால் – என்னுடைய புல்லிய நாக்கிலேயிருந்து தெரிக்கத்தக்கதான நீண்ட புன்சொல்லைப் பெருக்காநின்ற இந்த நாக்கென்னும் என்னுடைய அவயவத்தினாலே என்னுடைய புல்லிய அறிவைக்கொண்டு, கூறவற்றோ – சொல்வதற்குந்தான் என்னாலே யாகுமோ ஆகமாட்டா தானபடியினாலே ஆனபோதைக்கும் பேரவையினது மேன்மை பொருந்தியதானத்திலே விளங்காநின்ற பெரியோர்களென்கிற தங்களுடைய பேரருளினாலே அடியேனும் என்னாலியன்ற மாத்திரம் எடுத்துச் சொல்லுகிறேன் எப்படியென்றால், மோர் – பச்சையினது ரூபமாகிச் சுபாவதற்சாதியான நாவியானது கொண்டு வந்து பரிசுத்தப்படுத்துகிற நிமித்தியமாகத்தானே அதற்கு வேண்டிய சாத்திரப்பிரகாரமே முன்னே நல்ல பசுவினது மோர் புளிச்சும் புளியாமலும் நடுத்தரமாயிருக்கப்பட்ட மோர் மேலே சொன்னபடியே ஒரு பலம் நாவிக்கு ஆறு பலம் மோர் ஒரு நாளைக்கு விட்டு வெயிலில் வைத்து உதயகாலந்தொடுத்து அத்தமிக்கிற பரியந்தம் வைத்தெடுத்துக்

கொள்ளவேண்டியது. இப்படியே பத்து நாள் வரைக்கு மேலே சொல்லி யிருக்கிற பிரகாரமே செய்து பிற்பாடு, கவினம் - நல்ல பசுவினது வெண்ணெயிலும் அப்படியே ஒரு பலம் நாபிக்கு ஆறுபலம் பசுவினது வெண்ணெயிட்டு.

மேற்படியே சூரிய உதய காலந் தொடுத்து அத்தமிக்கிற பரியந்தம் முன்னே சொன்னபடியே தினமும் இப்படியே பத்து நாளான பிற்பாடு முன்போலேதானே அடுத்த இருபது நாளைக்குமேலே, கோமயம் - பசுவினது சாணிப்பாலும் முன்போல் ஒரு பலம் நாபிக்கு ஆறுபலம் ஒரு நாளைக்குச் சூரிய உதயகாலமே தொடங்கி அத்தமிக்கிற வரைக்கும் வெயிலிலே வைத்தெடுத்து இப்படிப் பத்துநாள் வரைக்குமாக இப்படி முப்பது நாள்களும் பக்குவப்பட்ட பிற்பாடு, மூன்றாதியொரு கூற வற்றோடு - மேலே இப்படிப் பரிசுத்தப்பட்டதான சரக்கையே முதன்மையாக வைத்துக் கொண்டதனாலே பற்பமும் செந்தூரமும் மாத்திரையும் இப்படி முப்பகுதியான அவிழ்தங்களைச் செய்யும் முறைப்படியே செய்து வைத்துக்கொண்டு ஒருபங்கீடாக மேலே அந்த முறையவிடதங்களைப் பிரயோக முறைப்பிரகாரம் பண், ஓர் மதியிற்கொள் - ஒரு மதியென்ற சத்தார்த்தப்படியே முன்னாடி இந்தச் சரக்கென்னும் நாபியைப் பண்ணும் விதமாகப் பண்ணப் பட்டதாகிய சுத்திக்கும் ஒரு மாதமென்கிற முப்பது நாள் இதனாலே பண்ணப்பட்ட அவிழ்தம் புசிக்கிறதற்கு நாளுமொருமிக்க ஒருமாத முப்பது நாளென்கிற பிரமாணமும் அவிழ்தங்களைப் பண்ணுகிற அளவை நாள்களும் முப்பது நாள் ஒரு மாதமென்கிற அளவைப்பிரமாணமும் பொருந்தி இருக்கத்தக்கதாகவே சொன்னது மல்லாமலும் பின்னுமொரு வேற்றுமையும் ஒற்றுமையும் இருக்கத்தக்கதாகச் சொன்ன தெப்படியென்றால், ஓர் மதியிற் கொள்ளென்ற தன்னுட விசாரணைக்குப் பாத்திரமான புத்தியாலேயும் நன்றாயாராய்ந்தறிந்து கொள்வாய். மேலும், பண்பாக ஓதிய செயற்கை அறிவென்னுங் கல்வியறிவினாலேயும் இயற்கையறிவென்னும் இயல்பான சுவாபீகக் குணத்துடனேயும் பெரிதான நன்மையைத் தராநின்ற குணத்திரயமான உபாதையுடனென்கிற மகத்துவ மகிமை உபசாரங்களெல்லாம் வெளிப்படையாகி விளங்கவென்று இதற்குத்தானே மேலோர்களிலே ஆதிக்கியம் மிகுந்த கும்பமுனியானவர்

தம்மாலே செய்யப்பட்டதான குறுந்திரட்டாசிரியக் கரிசிலிலே உதாரணங் கூறினார். எப்படியென்றால், வரலாறு :-

*"பச்சை நாவியைச் சொச்சமாக வுன்*
*பண்டித வறண்டிருமு னுண்டிஃதோர் பாதைசெய்*
*பலித்திடு முலகத்து கெலித்திடு தறிணமே."*

என்று இப்படியே மெய்யுண்மையைச் சிறப்பித்தோதினார். பின்னும், இதனையே அடுத்து இவ்வாறு இவர் கனப்படுத்தி யோதினாரேனும் ஏனோரென்னும் பண்டிதரெல்லாம் வரன்முறைப்படியே கொண்டாரென்பது அறிந்தெடுத்துக் கொள்ளவேண்டியது.

## பொதுச் செய்யப்படு பொருண்மைக்கு இனி வேறு வரலாறு

*செய்யகரு வெண்மைத் திறமாவது பலித்துச்*
*செய்யகரு வெண்மைச் செயமாகச் - செய்ய*
*வரன்மறையா மென்ன வழுவா தளிப்பான்*
*வரன்மறையா மெங்கபெரு மான்.* 119

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா வென்னுதலிற்றோவெனின் மேலேஇது வரைக்கும் பண்பாகச் சொல்லி வந்த பிரகரணமாகப் பரிசுத்தமான சரக்குகளை மேலே செய்ய வேண்டியது இவ்வாறென்றும், அப்படிக்கு ஒப்பத்தானே செய்வதற் கிடையூறுகள் வராமற்படிக்கு இசையத்தக்கதாகிய தெய்வ வணக்கமுங் கூறுதனுதலிற்று. (அஃதெவ்வாறெனில், வரலாறு).

செய்யகரு - இதுவரைக்கும் மேலோர் வாய்பாடென்னும் நூலுங் காரணங்களென்னும் வடமொழித் தென்மொழிஉபய மார்க்கங்களினால் எடுத்தோதி இன்னூலாற் சொன்னபிரகாரமாகப் பரிசுத்த மென்னும் புனிதமாகிற சுத்தியான சரக்குகளையெல்லாம் வைத்துக் கொண்டு,

எண்மை - மேலே பண்டிதர்களுடைய கண்ணியப்பட்டிருக்கத்தகுமான கனதந்தியான பெருமையும் வண்மையான உத்தியோகபாக்கிய நன்மை யெல்லாம் உண்மைக்கு உத்தாரமாக எப்படியும், திறமாவது பலித்து - நித்தியமாக ஒரு நிலையான விளக்கமானது மேலிட்டவர்களுக்கெல்லாம் மேலான மகிமையும் வண்மையும் உண்டாகத்தக்கதாய் அந்தப் பரிசுத்தப்பட்ட சரக்குகளிலே பலிதப்பட்டபடிதானே நன்மையுண்டாக வேண்டி மேலும்மேலுமதிக்கப்பட்டுடனே எப்படியெப்படியாகிற மார்க்கமெல்லாம் ஒரு நிலையாகப் பின்னும் வமிச சாம்பிரதாய நன்மைகள் என்று பண்டிதர் எல்லாருங்கொண்டாடிக் கொள்ள ஒருக்காலே வயித்தியருக்கு எல்லாம் ஒரு கற்பக விருட்ச மென்று நானாவித உபாதையெல்லாம் வசப்படவும், செய்ய - செந்தூரங்களும், கரு - மாத்திரைகளும் பின்னும் இலேகியங்கள், கிருதங்கள், தைலங்கள் இவை முதலான கிட்டின பட்சமான பொருள்களும், வெண்மை - பற்பங்கள் - சூரணங்கள் இவைமுதலான பின்னும் பலப்பல பேதமான வகைகளும், செயமாக - இப்படி வரப்பட்ட அநேக விதங்களான அவிழ்தங்களெல்லாம் மென்மேலும் ஒருக்காலே அதிகமான நன்மையுடைத்தாய் விளங்கிப் பிரகாசிக்கத் தகுதியுண்டாகி வழக்கமாகிப் பெரும்பான்மை அகிலாண்டகோடிப் பிரமாண்ட நாயகரான சிவாசாரிய சம்பன்ன மூர்த்தியான சகல புவன கர்த்தத்துவம் வளரத்தக்க உண்மையுண்டாகும்.

செய்ய - இப்படிக்கு உண்மைக்கு உத்தாரமாகத் தம்முடைய சாமர்த்திய மென்று ஏறெடுத்துக் கொண்டாடிக் கொள்ளத் தக்கதான அனுக்கிரகத்தினாலே மேலோங்கி வீறுபட தயவுசெய்ய உடனே கடாட்சிக்கவும், வரன் - அப்படி வருகிறதற்குப் பாரம் பரியமான ரகசியப் பொருளென்கிறவர்களும் பணிந்து மேற்காணப்படாத பொருள் என்கிற வஸ்துவினுடைய நிலையை எப்படி மனோரதப்படுத்திக் கொள்ளுவார்களோ அப்படியே உடன்படுமெய் போலே உயிரெழுத்தானது தனிமெய்யெழுத்தைக் கண்ட மாத்திரத்திலே எப்படிக்கட்டிக்கொள்ள வருமோ அப்படிப்போலவும் அடியேனுடைய மகிமையுண்டான வந்தன உபசார வணக்கத்தைக் கண்டு அந்தக்கணமே வரங்கொடுக்கிறதான இரசத்திலே மேலாடிக்கொண் டணுகத்தானே அங்கீகாரம் பண்ணவும்.

மறையாமென்ன வழுவா தவிப்பான் - பரம மருமம் பொருந்திய அந்தரங்கமான வார்த்தையை மறவாமற்படிக்கு நிசத்திட வார்த்தையாகப் பூமியின் கண்ணிலே இருக்கப்பட்ட நிரதிசயமான அலங்கார கோலா கலத்தை அடியேனுக்கு உபதேசப்பொருளாக செய்தருளி மேலும் கடாட்சிக்கப்பண்ணுவார். அவர்யாரென்றால், வரன் - பிரம தேவனைப்பார்க்கிலும் அதிகமான நன்மையும் தாதாவென்கிற ஆதாரசக்தியும் புனிதமும் மோனமும் ஆசாரயோக்கியமும், மறையாமென்ன - நான்கு வேதங்களும் எப்படி யொன்றுக்கொன்று முன்னும் பின்னும் அடுத்தும் அந்தமாகியும் வருவதாக நின்று சாயலாக நேருக்கு நேரேயாகி ஒழுகிப் பிரபலிப்பது போலே சரிதாதியை போலவும் நான்கு வர்ணங்களைப் போலவும் நான்கு ஆச்சிரமங்களைப்போலவும் நான்கு பதங்களைப் போலவும் அடங்கி வரக்கணுவை மனமே என்னவும் வேண்டிய வேண்டிய வாறே யாசிரிய மூர்த்தமாய் எழுந்தருளிப் பின்னுந் திருமந்திரத்திட்டமான சாத்திர வழிப்படத்தருவதான திருமூலமூர்த்தியை முன்னிலைப்படுத்தியும் அருளினார். அவராரென்றால் அல்லற்படா திருப்பவரான மனரசவமுதுண வரந்தருங் கருணை எந்தையாகிய நந்தி கேஸ்வர ரென்பது குறிப்பாகத்தானே, எங்கள் பெருமான் - எங்களை யாராகிலும் பண்டேதொண்டு பட்டிருப்பவரான சிவசம்பந்தப்பட்ட அடியார் கூட்டங்களை யெல்லாஞ் செவ்விதாக்கி பரிபாகப் படத்தக்கதான தீக்கை மார்க்கத்தையெல்லாம் ஐவகையாகம மறைமுறையாசிரியச் சீட வர்ணமும் முறையுந் தோன்றத் தகுமான உபதேசக்கிரமத்தைச் செய்யப்பட்ட வெகுவித மகிமையை யடியார் முன்னே,

*"சஞ்சித்தக் கைவைத்த காத்தாண்டருள் வோமென்ன*
*வெஞ்சலிற் பெருந்தகை யெம்மா முன் வந்தருள்*
*அங்கணம் கயிலே யசலத் திருந்தருள்*
*நங்குரு நந்தி நாததே சிகனே"*

என்புழி, முன்னமே வைத்திய மார்க்கத்துக்கும் ஆதிவரன்முறை பரமசிவன் வரன்முறையாக நந்திகேஸ்வரமூர்த்திக்கு அனுக்கிரகஞ்

செய்ய அவர் பின்பு திருமூலர்க்கும் அகத்தியருக்கும் தன்வந்திரி யாருக்கும் அனுக்கிரகஞ் செய்யவும் அப்படியே பின்பு பூலோகம் என்கிற இந்த உலகத்திலே திருமூலரிடத்திலே தொண்டுபட்டவராலே இந்த உலகஞ்செய்த நன்மையினாலே பிரபலப்பட வேண்டித் தெய்வபண்டிதரான தன்வந்திரியார் தாமே பிராமண மரபு விளங்கத்தக்கதாய் வந்து தர்மசவுமியாசாரியரான சுவாமியார் அவதாரஞ் செய்ய அவரறிந்து கொள்ளவும் அவரிடத்திலேயிருந்து முன்னதே தானே தெய்வபண்டித சீடரென்னும் பேர்பெற்றிருக்கப் பட்ட தேரரானவர் இந்த நூலுக்குக் கர்த்தாவானவர் அறிந்து கொண்டு இப்படியே வரன் முறை சம்பிரதாயப்படிக்கு இருப்பதானார்கள் என்கிற வரலாறு எல்லாரும் நன்றாய் அறிந்துகொண்டு இவ்வுலகத்திலே வாகடசாத்திரத்தைப் பிரபல்லியம் பண்ணவந்தவர் ஆனபடியினாலே இவர் முன் சம்பிரதாயத்தைக் காட்டினாரென்னும் தொல்லாசிரியரை வணங்கி இனிமேல் எல்லாப் பொருளினும் பரிவாகப் பார்க்குமிடத்திலே அரிதாகலான் தெய்வ வணக்கத்தையுஞ் செய்யப்படுவதற்கு இசைந்த பொருளையுங்காட்டி இனி மேலைக்கியன்ற சாமர்த்தியத்தையே காட்டவேண்டிப் போற்றினார். இதற்கு முன்னே இந்தப் பெரியார்களான பண்டிதோத்தமர்களான பெரியோர்களும் பனுவலில் எப்படி ஓதினார் களென்றால்:-

*“முன்னந் திகைத்த முயற்சியை நான்செய்ய*
*நன்னந் திகைத்தல நாடிய தென்சென்னி*
*வன்னந் திகைத்தற வாய்த்ததா லுள்ளமே*
*அன்னத் திகைதவ மாயுள விழ்தமே”*

இப்படியே தவக்குறைவா லவதாரஞ் செய்தருளிய திருமூலநாயனா ரென்கிறவர் திருமந்திரம் மூவாயிரத்திலே ஞான காண்டம் ஆயிரமும் வைத்திய கர்மகாண்டம் ஆயிரமும் தொந்த காண்டமாயிரமுமாகக் காண்டம் மூன்றிற்குந் திருமந்திரம் மூவாயிரமாகச் சொன்னதிலே இந்தத் திருமந்திரச் செய்யுள் தொந்தகாண்டம் ஆயிரத்திலே ஆராய்ந்து கொள்ள வேண்டியதாம் என்று சொல்வர்.

## ஈஸ்வரர் முன்னிட தன்வந்திரியார் தோத்திரம்

*ஆதித் தருக்கை யவிடதத்தி னாலகற்றி*
*ஆதித் தருக்கை யருளுமிறை - ஆதித்*
*தருவையனையமந்திரி தந்திரியா மெய்மை*
*தருவையனை யாமனை நீ தான். 120*

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா வென்னுதலிற்றோ வெனின் இம்முறைகள் வழுவின்றி நன்மை யாதற் பொருட்டு முதன் மகிமைத் தெய்வ பண்டிதரான தன்வந்திரி யென்னும் முதலாசிரியரைப் பரவுதனுதலிற்று (எவ்வாறெனில், வரலாறு).

ஆதித்தருக்கை - வியாதிகளிலே முதன்மையான பிணியென்கிற வாதத்தைப் பற்றியது தன்மையாகப் பந்தப்பட்டிருந்து மேலிட்டுக் கொண்டதனால் வருத்துவதான வெம்மை தண்மை நண்மை (நடுத்தன்மை) என்கிற வியாதிகளுடைய கூட்டங்களைப் போக்கடிப்பதான பிணியை, அவிடதத்தினாலகற்றி - மணிமந்திர அவிழ்த மென்று உடன்படப் பரிபக்குவமான நன்மையை அன்புடனே உரித்ததாக எடுத்தோதப்பட்டதாம் என்றறிஞராலே சொல்லப்பட்ட மருந்தினாலே அந்த வியாதிப் பெருக்கை யெல்லாம் ஒருக்காலே போக்கடித்து மேலும் பண்பான தேகத்துக்குரித்தான நன்மையை வருவித்து உடனே விரும்பின படிக்குத்தானே.

ஆதித்தருக்கு - தேவேந்திராதி தேவர்கள் முப்பத்து மூன்று கோடி தேவர்களையும் பண்பாகவே ஒருநிலையிலே இருந்து வாழத்தக்கதாக அவர்களுக்கெல்லாம் அமுத போசன சிரஞ்சீவிகரான உறுதிப் பெயரை எக்காலமும் பொருந்தியிருக்கத்தகுமான பேர் பெற்றிருப்பதற்கென்ன வரந்தரும் பெரும்பொருளென்ன, ஐ - மெல்லிய நன்மை யோடுங் கூடிய ஒப்பற்ற வாழ்வான போகபாக்கியத்தை, அருளுமிறை - கொடுத்ததுங் கொடுப்பதுங் கொடுக்கிறதுமான பூதமென்றும் பவுஷியமென்றும் வர்த்தமானமென்றும் பிரித்துச்

சொல்லப்பட்ட மூன்று காலத்திலேயும் வருவிருத்திகள் வழுவாமற்படிக்கு உதவுவதாகிய வாஞ்சையைத்தானே சதா நித்தியமும் பாலித்தருளுவதான கர்த்தனென்கிற என்னுடைய நாயகனான பண்டிதாசிரிய பரமகுருநாதனான தன்வந்திரியானவர் பின்னும் வெகுவிதமான வண்மைகளுடைத்தான சிற்சக்தி மேற்கொண்ட தெய்வவயித்தியராச பண்டித சாமர்த்தியரானவர் பின்னும் வரப்பிரதான மகிபதியானவர், ஆதித்தருவையனைய மந்திரி - நந்திகேஸ்வர மூர்த்தியார் பாரம்பரியமான சம்பிரதாயத்தை உறுதியாக விசாரணை பண்ணுமிடத்திலே நேராயொருவகை ஒழுங்காய் ஓங்கின ஒழுக்கமாக வரிசைப்பட்ட ஒளதாரிய மென்கிற முறைமையின் கண்ணிலே பிணியாளரை அஞ்சவேண்டாமென்று அவர்களுடைய உயிரைக் கொடுப்பதற்கு இரக்கத்துடனே கிருபையுண்டாய் அருளுகிற நன்மையிலே பார்க்குமிடத்திலே தேவேந்திரபட்டத்திலே இருந்தருளுகிற கற்பக விருட்சத்தைப்போலே மென்மேலுமதிகமான அனந்த கலியாண குணாதிசயத்தைப் பெற்றிருக்கப்பட்ட தன்வந்திரியா ரென்கிற பரிநாம விசேஷ பூஷணதாரியாள என்னுடைய முதற் குருநாதனுக்கு இரண்டாவது குருநாதனான சர்வோத்தமருடைய நற்குண நற்செய்கைகளையெல்லாம் வரப்பிரசாத மகிமையாகத் தானே மேலிட்டுண்டாகவும்.

தந்திரியா மெய்மை தருவை - இராச, தந்திரோபாயமென்கிற சாமபேததான தண்டமென்று சிறப்பித்துச் சொல்லப்பட்டதான நாலுவிதப் பேதாபேதங்களென்கிற சாமர்த்தியமாகிற உபாதையுபாயங்களெல்லாம் வந்து சித்தித்து நான் பண்டிதார்த்தமாகப் பண்ண வேண்டியெடுத்துப் பண்ணத்தக்கதாய் முயலுவதான பற்பமும் மாத்திரையும் இலேகிய முஞ்செந்தூரமும் எண்ணெயுந்தைலமும் நெய்யும் அருந்தும் உப்பறிவும் தோன்றும் படியாகச் செய்யும். இவைகளெல்லாம் வழுவாமற்படிக்கு என்னுடைய கைமுறைக் கிணங்கி வரத்தக்கதாய் அந்தத் தெய்வ பண்டிதருடைய அமிசைச் சாமர்த்தியமும் வந்து மேலிட்டு என்னிடத்திலே வந்து நேரிடத்தக்கதாக அனுக்கிரகத்துடனே வரவேண்டிய நன்மைகளெல்லாம் மெத்தவுந்தானே எனக்குக் கிடைக்கவும் வாய்ப்பான நல்ல வரத்தை அடியேனான உன்னுடைய குமாரனென்கிற எனக்கு எப்படியுங் கொடுக்க வேண்டியகடனான பாரம்

உனக்கே வந்திருக்கப்பட்ட பாத்தியமான படியினாலே இந்த வரத்தை எப்படியும் எனக்காக நீ நான் அனந்தகோடி பூசை பண்ணியதாகப் பாவித்துக் கொண்டு இந்த வேளையிலே அருள்புரியம்மா, அணை - மாதாவைப்போலவும் பாரிலே அன்னையும் பிதாவுமுன்னறி தெய்வமென்பது போலே உலக வழக்கமான லௌகீக மார்க்கமும் சக்தியாய்ச்சிவமுமாகி, என்கிற வேதமார்க்கம் என்கிற வரிசைப்பட்டதான வைதீகமார்க்கமும் இரண்டு வகையுமொக்கப் பொருந்தி வரவிருப்பதான உலக மாதாவாகிய நீ, யாமளை நீதான் - யாமளாதேவி யென்கிற திவ்வியமான பேர்பெற்றிருக்கப்பட்ட உமாதேவிநீயே என்னைக் காப்பாற்றி அருள்செய்ய வேண்டிய கடன் பூண்டவளானபடி யினாலே அடியேனைத் தற்காத்து இன்னாருடைய சம்பிரதாய சாமர்த்தியானுக்கிரகத்தையும் வருவித்தருளி ஆள வேணும்.

## தருமசவுமிய குரு தோத்திரம்
## கணபதி - அநுமார் - வீரபத்திரர் - வயிரவர் முன்னிலை

*சாலியங்க முந்தனமாஞ் சற்குருவா லாயுண்முறை*
*சாலியங்க முந்தவழுத் தாங்கலிற்பாஞ் - சாலித்*
*திரபாலா வரதேயா தேவாந்த காகெத்*
*திரபால வாதேயா செய்.* 121

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா வென்னுதலிற்றோவெனின் தரும சவுமிய சுவாமி யென்னுங் குருவைப் பையப் பணிகுதனுதலிற்று (எவ்வாறெனில் வரலாறு).

சாலியங்கமுந்தனமாம் - வைக்கோலினது தாளென்கிற துரும்பைக் கையிலே பிடித்துப் பொருந்தாத மனதுடனே பிடித்த போதைக்கும் அதுவும் பொன்னாகிய சொன்னக்காம்பாகி விருத்தியாய் விளங்குமென்று உலகத்திலே உபய வகையாரென்று சொல்லாநின்ற பண்டித பாமராளாலே

வழக்கமான சொல்லாய் எடுத்தோதப்பட்ட நூலினது விவரத்தை எடுத்து, சற்குருவால் - நல்ல உபதேசப் பொருண்மையினால் வரப்பிரசாத மகிமையுண்டாக்கப்பட்ட தேசிகோத்தமனென்கிற குருவைப்பணிந்து அவராலே யருளிச் செய்யப்பேறுபெற்று உண்டாகிய நல்லூழ் விரிவாகத் தரும் ஆனபடியினாலே அத்தப்பாக்கியமும் மென்மேலும் உண்டாகிப் பெருக்கத்தக்கதாய்.

ஆயுண்முறை - இந்த வைத்திய சாத்திரம் என்கிற வாகடநுண்மையானது சாலியங்க - அதிசுமான பெருமிதத்துடனே உலகின் கண்ணில் ஒத்திருக்கப்பட்ட பண்டிதர்களிடத்திலே என்னுடைய முன்னிலையாக விபவத்துடனே நண்ணுவதாகத் தானே வழங்கவும், முந்தவழுத்தாங்கலில் - முன்பாகத் தானே நடக்கத்தானே ஆதித்தன்பில் காத்து இரட்சித்து மேலேற்பாடாகக் கொண்டிருக்கத்தகுமான வரப்பிரசாதத்தைக் கொடுக்க வல்லவரார் என்றால், பாஞ்சாலித்திர பாலா - பாஞ்சாலியான பஞ்ச கிருத்தியங்களென்கிற சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகம் என்று உரித்தாகச் சொல்லப்பட்ட ஐந்தொழிற்கு மிறைவியான பரதேவி யென்கிற உமையவளுக்கு உகந்துறுதியான புத்திரனென்கிற கணபதியே நீயும், வாதேயா - வாயுபகவான் குமாரனாகிய ஆஞ்சநேயனே நீயும், தேவாந்தகா - தங்களுடைய யாகத்திலே சகலமான தெய்வங்களையும் பறந்துபோகத்தக்கதாய் அதம் பண்ணின வீரபத்திரா நீயும், கெத்திர பாலா - காலபையிரள மூர்த்தியென்கிற கர்த்தனே நீயும் மனது வைத்து அடியேன் கடைத்தேறிப் போகத்தக்கதாய் அனுக்கிரகஞ் செய்யாமல் என்னுடைய சற்குருவான தரும சவுமியரை என்னிடத்திலே கடாட்சிக்கத்தக்கதாய் அவர் திருவுளத்தை அடியேனிடத்திலே திருப்பாமல் இன்னமுந் தர்க்கம் பண்ணிக்கொண்டிருக்கவும், தருமமா - உமக்கிது தருமமன்று சீக்கிரத்திலே கடாட்சிப்பை யென்றிப்படியே இப்போது சொன்ன தெய்வங்களை யெல்லாம் வரிசைக்கிரமங்களொன்றுந் தப்பாமறப்படிக்கு வணக்கஞ் செய்கின்றார். ஏனென்றால் இனிமேல் தாமெடுத்துக் கொண்ட முறைமைப் பிரகாரம் பற்ப முதலாகச் சொல்லப்பட்ட சகல அவிழ்தங்களும் பண்ணுகிறகாலத்திலே இப்படியான சகல தெய்வங்களுடைய மகிமையான தெய்வ பலத்தினாலே தம்முடைய

சற்குருகடாட்ச மாத்திரம் பெரும்பான்மையாகத் தனக்குச் சித்திபெற்றிருக்குமேயானால் பொல்லாத ஊழென்கிற பொல்லாத காலமும் நல்லஊழென்கிற நல்லகாலமுமாகப் பொருந்தியபடியே துரும்பைப் பிடித்தாலும் அது வச்சிரத்தூணாகிப் பலப்பட்டிருக்கும்.

அப்படியே வைக்கோல் காரையும் பலப்பட்டு ஆதிக்கியத்துடனே - பொற்காரையாமென்பது நிசமாகித்தோன்ற வருமென்று முன்னோர்களெல்லாரும் மேன்மையாகத்தானே வரமென்கிற நன்று பொருந்தினார்களென்று வடமொழி வாக்கியமென்கிற மாபுராண வாகடத்திலே பஞ்சமமென்கிற ஐந்தாவது அத்தியாயத்திலே

'யசிய சாலியாங் கெனாவித்த சொரூபாணிப வேது. இப்படி யென்ற' சுலோகத்தால் பொருண்மை தோன்ற ஓதிக்காண்பித்தார்கள். பின்னும் ஆன்மியார்த்த மிகுதியும் வண்மையாக வரத்தக்கதாய் முன்னவரென்கிற அகத்தியரும் முறைப்படியுரைத்த கரிசலிலேயும் :-

*"வைத்தது வித்தமெ*
*னத்தருமுத்தம*
*வாகான காலமென*
*வேகான மோதுமிது*
*வரிசைப்படி*
*விரிசற்குரு*
*மந்திர - தந்திர*
*முந்திர - மெந்தை"*

என்றிவ்வாறுரைத்தார். ஏனையோரும் வேறுரிமையாக வேதாகம சாத்திரமென்கிற மார்க்கத்தை யெல்லாம் பெருகாமற் சுருக்கிப் புகன்ற திருமூல சுவாமியாரென்கிற கர்த்தாவும் முன்னுரைத்த கன்ம காண்ட மாயிரத்திலே ஒரு திருக்குறிப்பாக ஒப்பப்படியான திருமந்திரத்தில்-

*சாலிப்படி வந்தன மாகுஞ் சற்குரு*
*பாலிப்ப தான பரம ரகசியம்*
*மேலிப் பருவ விளையாட் டயருதி*
*சூலிப் பரையுமை சூத்திர தாரியே*

இப்படியே அவா அறுத்த பொருண்மை யெல்லாம் முன்னர் வந்து நிற்கத்தக்கதாக ஓதினார். இப்படியறிய வேண்டியது.

# பற்ப முதல்

## அய பற்ப முறை

*கரும்பொன் றவளங் கழறது மொன்றிற்குக்*
*கரும்பொன் றவளங் கணிவேர் - கரும்பொன்*
*பதுமாழை கன்னி பனிரெண்டு மூன்று*
*பதுமாழை மத்தன்மேல் பண்.* 122

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா என்னுதலிற்றோவெனின் அயமென்று சிறப்பித்துச் சொல்லப்பட்ட இரும்பினது பற்பத்தைச் செய்யும் முறைமையைக் கூறுதனுதலிற்று, (எவ்வாறெனில் வரலாறு:-)

கரும்பொன் - உலகத்திலே அனைவரும் பெரும்பான்மையாகி வழக்கமாகச் சொல்லிக் கொள்ளத்தக்கதாக உலோகங்களிலே பலப்பட்டு முதன்மையான லோகமாவது கரும் பொன்னென்று பரியாய நாமதேயஞ் சொல்லிக் கொண்டாடப்பட்டது இரும்பென்கிற அயமேயானபடியினாலே அந்த இரும்பைப் பொடியாக்கி அதைப் பிரத்தியட்சப் பிரமாணமாகச் செய்யப்பட்ட, தவளம் - மிகவும் வெண்மையாகச் செய்யப்பட்ட பற்பத்தினது, கழறுதும் - ஆரம்பித்துச் சொல்லத் தகுமான வசனத்துடனே

சம்பிரதாயகமாகத்தானே வழக்கமாகச் சொல்லுகிறோம் என்று பண்டிதோத்தமர் சொல்லுகிறார். ஒன்றிற்கு - முதற்பொருளான பரிசுத்தமாகிக் களங்கரகிதமான அயப்பொடி ஒருபலத்திற்கு, கரும்பு - அசுவனி நட்சத்திரத்தை முதலிலக்கமாகப் பூர்ணபூச நட்சத்திர வரைக்கு மெண்ணிப் பார்த்தால் அதிலே வருகிற தொகை ஏழு, ஒன்றவளங்கணி வேர் - அப்படியே ஒத்துவரத்தக்கதாய் எண்ணிக்கையுண்டான ஏழுபலம் ஒரு நாளைக்கு வேங்கைவேர்ப் பட்டைச் சாறுவிட்டுப் பகல் பொழுது முப்பது நாழிகையும் அரைத்து இராத்திரி காலத்திற்கு வில்லை தட்டி வைத்து மறு நாளைக்கும் மேற்கண்டவாறே செய்து இப்படியே ஏழுநாளுமானவுடனே எட்டாம்நாள் உதயத்திலே ஆரம்பித்து மேலே ஏழு நாளுதயமுதல் அத்தமிக்கிற வரைக்கும் வெயிலிலே வைத்துப் பதிநாலாம் நாளுதயத்திலே நாற்பது காட்டு விராட்டியிலே புடமிட்டு ஒருநாள் போகவிட்டு மறு நாளுதயத்திலே எடுக்க ஒரு கால்வாசியாம்.

அதற்குள்ள குணரூப நன்மை யெல்லாம் அப்பாலே பதினேழாம் நாளுதயத்திலே தொடுத்து ஒன்பது நாள் வரைக்கும் நித்தியப்படி, கரும்பொன்பது - செங்கரும்பினது ரசமான கருப்பஞ்சாற்றை ஒரு பலம் முன்னையான கால்வாசி அயப்பொடிக்கு நாலரைப் பலம்விட்டு மேற்படியாக மர்த்தனஞ் செய்து இராத்திரி காலமெல்லாம் முன்போல வில்லை தட்டி வைத்து மறுநாளும் அப்படியே செய்து இப்படி ஒன்பது நாளான பிற்பாடு மேற்படி ஒன்பது நாள் வெயிலிலே உலர்த்தி அப்பாலே ஐம்பதுகாட்டு விராட்டியிலே புடம்போட்டெடுக்க அரைவாசிப் பக்குவமாகக் குணரூப நன்மையுண்டாம். அப்படியாகவே பிற்பாடு இருபத்தைந்தாம் நாள் முதற்கொண்டு மாழைக்கன்னி பனிரெண்டு, மூன்று- புளிய மரவேர்ப்பட்டைரசம் அரைவாசி அயப்பொடி பற்பமாயிருக்கப்பட்டதற்கு ஒரு பலத்துக்கு மூன்று பலம் புளிமர வேர்ப்பட்டைரசம் விட்டரைத்துப் பகலெல்லாம் விட்டுவிடாமல் அரைத்து இராத்திரிக்கெல்லாம் வில்லை தட்டி ஆறப்போட்டு இப்படித்தானே பனிரெண்டு நாள்வரைக்கும் பண்ணி அப்பாலே பன்னிரெண்டு நாள் வரைக்கும் மேற்படியாக வெயிலிலே உலர்த்தி அப்பாலே முப்பத்திரண்டு காட்டு விராட்டியிலே புடமிடு.

மேற்படியாகத்தான் ஒரு நாளாறவிட் டப்பாலே எடுத்துப் பார்க்க முக்கால் வாசியான தாகி மேற்படி யெல்லாக் குணரூபமும் பெற்றிருக்கும்.

அப்பாலே கன்னி - கற்றாழை வேர்ச்சாறு மேற்படியாகக் கண்டிருக்கப்பட்டதான அயப்பொடி ஒரு பலத்திற்கு ஒன்றரைப் பலம் விட்டரைத்து இப்படிப் பகலெல்லாமகத்தனம் பண்ணி வில்லை தட்டி இராத்திரி முப்பதும் ஆறவைத்து இப்படியே மறுநாளும் முன்போல் இப்படிப்பதிமூன்று நாள் வெயிலிலேவைத் தப்பாலே பதின்மூன்று நாளொழிந்த பிறகு இருபத்தேழு காட்டுவிராட்டியில் புடமிட்டு ஒரு நாளாறவிட்டு எடுத்தால் முழுதும் வெண்மையாகி அதற்குள்ள ரூபமுங்குணமும் பெற்று நன்மையுண்டாகிய சிலாக்கியச் சொக்கமான அயபற்பமாகும். அப்படியாக்கப்பட்ட பற்பமானது மெத்த மெத்தஉசிதமான திவ்வியாஸ்திர சம்பன்ன பாக்கியங் கிடைத்தது போலே வன்மையைக் காட்டிக் கொண்டிருக்கப்பட்ட தரமானதினாலே அது கிடைத்திருக்கப்பட்ட பண்டிதரை மனிதரான போதைக்கும் இந்த உலகத்தின் கண்ணிலே இருக்கப்பட்ட வானவராக நன்கு மதிக்கப்படுமென்றெல்லாரும் உரைப்பார்களென்றும் பின்னும் வகுத்து உண்மையாகப் பார்க்குமிடத்திலே. பது - சொர்க்கலோக மென்கிற பொன்னுலகத்தின் கண்ணிலே வசிக்கப்பட்ட தேவாகட மென்று உத்தமத்திலுத்தமமாக வகுப்பதான பதின்மடங்கதிகமான மற்றினாலேயும் வரணத்தினாலேயும் பத்துப் பங்கதிகமாகச் சொல்லப்பட்ட, மாழை - தங்கத்தைப்போலே உண்ட பேருடைய உடம்பைச் செய்வதற்கு அனுமான மில்லையென்பதாம். ஆன போதைக்கும் இப்படியிந்த முறைப்படியே உண்மையாகப் பண்ணவல்ல சாமர்த்தியத்தை யுடையவனை ஒருவழி அருந்தனப்பெருமானாகிய பெயர்கொண்ட தேரனென்றே சொல்லத்தகும். மத்தனமேல்பண் - இவரிந்த முதற்பாவென்னும் பிரமவருணத்திற்கு நிகரான வெண்பாச்செய்யுளான படியினாலே குறிப்பும் வெளிப்படையும் என்னும் இருவகை முறையுள் விரிவஞ்சியோதினாரெனும் நூன்மைப் பிரானென்றுங் கிரந்தகர்த்தாவானவர் இவ்வாறு உரைத்தாரெனும் பொருண்மைப் பிரானென்னும் வியாக்கியான கர்த்தாவானவர் தொகை வகை விரியென்னும் முத்திற முறைமையும் நெறியுற ஓதுவதவர்க்கு

உரித்தாதலின் வரலாற்று முறைமையின் எஞ்சி நின்றுவையும் எடுத்துக் கொள்கின்றா ரெப்படி யென்றால் அரைக்க வேண்டிய தொழிலெல்லாம் பகற்காலத்திலே தானேயென்று பிரித்து வேறுபாடாகச் சொன்னபடியினாலே அப்படியன்று என்று இராத்திரி காலத்திலே வைத்துக்கொண்டாலது செம்மைப்பட்டுவரமாட்டாது. என்னத்தினால் என்றால், அரைக்கிற தொழிலுக்கு நித்திரை, கோபம், பலவந்த மிவைக களெல்லாம் இருக்க லாகாது. இருந்தால் அந்தமருந்து கெட்டுப் போய்விடும், ஆனபடியினாலே இராப்பொழுதை ஆகாதென்றார். தாமதகுணத்துடனே கூடின இருட்டைத் தள்ளினார் ஆகாதென்றான படியினாலே மேலெப்படியெப்படிப் பண்ணவேண்டிய சம்பிரதாய குணங்களுண்டோ அப்படியே பண்ணிக் கொள்ள வேண்டியதாம்.

பின்னுமிந்த அயபற்ப முதலான பற்பங்களுக்கெல்லாம் ஆதாரமான வரிசைக் கிரமங்களும் அவை பண்ணப்பட்ட உபாயங்களும் அவைகளையெல்லாம் பிரயோகானுபானங்கள் பண்ணவேண்டிய வண்மைநயபயநன்மைகளும் இவைகளெல்லாம் மேலே வாய்ப்பாக்கிக் கூறுகின்றார். அவ்வார்த்தைப்பாடெல்லாம் எப்படியறிய வேண்டியதோ அப்படியே உண்மையறிவென்னும் பயனிலை கொண்டிங்கிதமான விற்பத்தியினாலே அறிந்துகொள்ள வேண்டியது ஆற்றலுடை வாகட சாத்திரிகளான பேர்கள்.

## அய பற்பத்திற்கு அனுபான விவரம்

*காண்டம்பிர சங்கவின் நெய்பால்கொங் கைவெந்நீர்*
*காண்டம்பிர சங்க வினவிழ்தங் - காண்டம்*
*படலமத்தி யாயமனு பானப்பிர யோகம்*
*படலமத்தி யாயமனு பண்.* 123

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா வென்னுதலிற்றோவெனின் அயபற்பத்திற்கு அனுபான வகை விவரங்களும் அதனாலே நீக்கப்பட்ட வாதம் முதலிய பிணிகளினது

வகைவிவரங்களுந் தொகுத்துக் கூறுதனுதலிற்று. (எவ்வாறெனில், வரலாறு.)

காண்டம் - நல்ல தண்ணீரும், பிரசம் - தேனும், கவினம் - வெண்ணெயும், நெய் - நெய்யும், பால் - பாலும், கொங்கை - முலைப்பாலும், வெந்நீர் - காய்ச்சின நல்ல தண்ணீரும், இப்போது இப்படிக்காகப் பொறுக்கியெடுத்துச் சொன்ன அனுபான வஸ்துக்களேழுமல்லாமல் பின்னும் அனுகரணமாகக் கூட்டப்பட்டதான அனுபான வஸ்துவகைகள் எப்பேர்ப்பட்டதென்றால், காண்டம் (என்று சொன்னபோதே) - இஞ்சிரசமும், மிளகு ரசமும், திப்பிலி ரசமும், சுக்கு ரசமும் கூட்டப்பட்டது. பிரசம் (என்றுரைத்த போதே) - கள்ளும் கருப்பஞ்சாறும் பழரசத்தில் முந்திரிகைப் பழரசமும் தீவதிராட்சைப்பழரசமும் பேரிச்சம்பழரசமும் கூட்டப்பட்டது, கவினம் (என்றபோதே) - கற்கண்டு, சர்க்கரை, வெல்லம் இவைகளுங் கூட்டப்பட்டது.

நெய் (என்ற போதே) - வில்வாதிலேகியம், வித்தாதியுக்களி, தக்கோலாஉக்களியுங் கூட்டப்பட்டது, பால் (என்றுரைத்தபோதே) - மோழைகஞ்சியுங் கூட்டப்பட்டது, கொங்கை (என்றுரைத்தபோதே) - சிறுநீர் - உமிழ்நீர் முதலானதுங்கூட்டப்பட்டது. வெந்நீர் (என்றுரைத்த போதே) துளசிச்சாறு, வெற்றிலைச்சாறு முதலானதுங்கூட்டப்பட்டது.

இப்படிக் கூட்டிப்பார்க்கவே அனுபானங்களினது முதற்பொருளுஞ் சினைப்பொருளுமாகக் கூட்டிப்படிக்குமிடத்திலே ஏழும் இருபத்து மூன்றுமாகச் சேர்மானமாகச் சேர்ந்தது முப்பது, இப்படியான முப்பதுக்கும் பிரயோகம் பண்ணுமிடத்திலே நல்ல வைத்தியகுலசேஷ்ட கண்டீரவமான பண்டிதோத்தமனே உன்னுடைய சகல குணாதிசயச்சாமார்த்தியத்தினாலே நிதானிப்புடனே, காண் - அறிந்து கொள்ள வேண்டியது உனதுபாரமே. அது உன்னுடைய இயற்கை செயற்கை என்றெடுத்து ஓதப்பட்ட புத்தியினாலேயும் விற்பத்தினாலேயும், தம்பி - என்னுடைய சகோதரத்துவமான நரேந்திர சேனேந்திராதிக்கியன் என்கிற கவுமாரத்துவ குணேந்திரனே, ரசம் - கருணைவீரமென்று முன்னோர்களுடைய மனுக்களிலே எடுத்தோதிய நன்மைகள் பயப்பதான நவரச புஞ்சமான,

கவின - அழகிய நன்மதிப்புடைத்தாகியிருக்கப்பட்ட, அவிழ்தம் - தெய்வ பண்டிதார்த்தமான தன்வந்திரிய சாத்திரப்படிக்கு இசைவாகவுங்காலதேச வர்த்தமானங்களை அறிந்ததனால் ஒரு விக்கினங்களும் இன்றியே காலானுகூலத்துடனே செய்திருப்பதான மருந்தென்கிற அமுர்த்தாகிறுதியை.

காண்டம் - சுத்தவாயுவுடனே கூடின முதன்மையாயிருக்கிற வியாதிகளுக்கெல்லாம் முதலாளியாகிய இராஜனென்கிற வாதத்திற்குக் குணங்கள் இலக்கணங்கள் இவையெல்லாம் யோசனையினாலேயும் பருவ முறைமையினாலேயும் பகுத்தறிந்துகொண்ட படிக்கு மேலோர் நூலறிவினாலேயும் பார்த்துக்கொண்டபடிக்கு ஒத்திருக்கிற காலத்திலே நேரிட்டிருப்பதான காண்டமென்னுந் தலைக்குறை உவமானச் சங்கிரமமான வாதத்திற்கு அது தீரத்தக்கதாய் இனி மேலைக்கு அடுத்துடனே வரப்பட்ட செய்யுண்முகாந்திரத்திலே அவிழ்தப் பிரமாணஞ் சொல்லுவதான அப்பிரமாணப்படியே மேற்படி பரிசுத்தமாகச் செய்த அயபற்பத்தைப் பிரயோகம் பண்ணுகிற போது அனுபானம் நல்ல தண்ணீரும் முதல் அவிழ்தத்திற்கு எண் மடங்கதிகமென்கிற பிரமாணமாகக் கொடுக்க வேண்டியதென்றும், அந்த வாதத்தினது கொட்டாலையைப்பற்றி வருகிற அண்டவாதத்திற்கு இஞ்சி ரசத்திலே மேலே சொன்ன பிரமாணமான அளவின்படியே கொடுக்கவேண்டியது என்றும் அந்தவாதத்தினது கொட்டாலையைப்பற்றி வருவதான மகோதரமென்கிற கீர்வாண வடமொழி திராவிடமென்கிற தமிழ் வழக்குப் பெருவயிற்றுக்கும்.

மிளகுத் தைலமாவது அல்லவென்று அதனது ரசமாவது இதிலேயொன்றில் அவிழ்தப்பிரமாணம் முன்னே சொன்னபடியே அதிலே அனுபானமாகக் கொடுக்கவேண்டிய தென்றும் அந்த வாதவியாதியினது உருப்பமிகுதியினாலே யுண்டாகி வருத்தப்பட்ட பல்லைக்கு மேலே சொல்லி இருக்கப்பட்ட அவிழ்தப்பிரமாணத்துடனே திப்பிலித் தைலத்திலேயாவது அந்த ரசத்திலேயாவது இரண்டிலே யொன்றில் மேலே சொன்ன ஏகாஷ்டம் (ஒரு எட்டு) என்கிற பிரமாணப்பக்குவம்பிசகிப் போகாமற் படிக்குக் கொடுக்கவேண்டிய

தென்றும் அந்த வாதவியாதியினது சீதளத்தொடர்ச்சியாதியாக வந்த பலவந்த வியாதி என்றுரைக்கப்பட்டதான பக்கசூலை வியாதிக்குமேலே சொல்லியிருக்கப்பட்ட அவிழ்தப்பிரமாணத்துடனே சுக்கினது ரசத்திலே அனுபான மாகத்தானே மேற்படியாய் ஏகாஷ்டமென்கிற பிரமாணப்படி பிசகாமற் கொடுக்க வேண்டியதாகும்.

மேற்படிவாதப் பிணியினது ஆதாரத்தொடர்ச்சியாலே வாத பித்த சயித்திய முப்பிணி தொந்தத்தாலே உண்டான பந்தமென்கிற பிடிப்பு நோய்க்கு மேற்படி அவிழ்தப் பிரமாணப் பிரயோகத்துக்கு அனுபானந் தேனிலே கொடுக்கவேண்டியது.

மேற்படி வாதத்துடனே பித்த மாத்திரங்கலந்ததினாலே உற்பத்தியான குன்மமென்கிற வயிற்றுவலிப்பிணிக்கு மேற்படி அவிழ்தப் பிரமாணப் பிரயோகத்துக்குக் கள்ளிலே மேற்படியாகக் கொடுக்கவேண்டியது என்றும் மேற்படியான வாதப்பெருக்குடனே சேட்பமானது சந்தித்து அதனாலே கொதித்து வளர்ச்சியுண்டாகப்பட்ட சத்தியென்கிற வாந்தி நோய்க்கு அனுபானமாகக் கருப்பஞ்சாற்றிலே எட்டொன்றென்கிற மரியாதைப்படியே கொடுக்க வேண்டியதென்றும் மேற்படியான வாதச் செருக்குடனே உட்டண பந்தமேலிட்டு அதனாலே உண்டாகப்பட்ட பலத்தபிணியாகிய சூசிசையென்கிற வியாதிக்குமுன்னே சொன்ன பிரமாணப்படிக்கு அனுபானமானது முந்திரிகைப் பழரசத்திலே ஏகாஷ்டமப் பிரமாணமாகத் தப்பாமற் படிக்குக் கொடுக்க வேண்டியதென்றும் மேற்படி ஏகீபவித்திருக்கப்பட்ட வாதப்பிணியுடனே சேட்ப உட்டணமானது தொந்தித்து அதனாலே யுண்டான பாரீச வாய்வென்கிற வியாதிக்கு முன்னே சொன்ன அவிழ்தப்பிரயோகத்திற்குப் பிரதமாஷ்டமி மரியாதை யாகத்தானே அனுபானந்தீவதிராட்சிப் பழரசத்தினிலே கொடுக்க வேண்டியதென்றும் இப்படியாக வரப்பட்ட விவரமாக வந்த பிணிகள் பத்தும் வாதாதி குடும்போறபத்தி ரோகாதிசயங்களுக்கு அதற்கேற்ற அவிழ்தம் ஒன்றேயாயினும் அனுபானம் பலவிதமாகிவரவேண்டியவை வந்ததறிந்து இனிதான மதியுக்தியூகையா லறிந்து செய்யவேண்டியது. இனிமேலைக்கு (வேறுபடலம்) இரண்டாவது இராசனென்கிறவாதத்திற்கு இசைவான

மந்திரா லோசனைவாய்மையுடைத்தான மந்திரியென்று சிறப்பித்த பித்தத்தினது வகைவிவரமாகச் சொல்லத்தக்க தெப்படியென்றால் படலகாச மென்னவே பித்தமென்கிற அவயவிக்கு அவயவமாகச் சொல்லவேண்டியதான குறிப்புப் பெயரைப்பற்றிப் பைத்திய காரியான முதன்மையாக விளங்குகிற பிணிகள் பத்து.

அவைகளாவன இவையென்றும் அவைகளுக்கு முதன்மையான அவிழ்தமும் அனுபானமும் வரிசையாகச் சொல்லுகிறார். முதல்படலமென்று சினைப்பெயர் கொள்ளப்பட்ட பித்தத்துக்கு அவிழ்தமென்கிற அயபற்பம் மேற்படி சொல்லுவதான பிரத்தியட்சப் பிரமாணப்படியே ஆனபடிக்கு இருந்தபோதைக்கும் அனுபானமானது ஏகாஷ்டமப்படிக்கு மேம்பாடாகத்தானே பேரிச்சம்பழரசத்திலே கொடுக்கவேண்டியதென்றும் அதுவேயென்று சொல்லப்பட்ட அந்த வியாதியிலேதானே நெடுநாளாக ஊறியது குழம்பி மிகவும் மேம்பாடாக உண்டான பித்தகுன்மமென்கிற வியாதிக்கு மருந்து மேற்படியாகத்தான் ஆனபோதைக்கும் அனுபானமானது பிரமாணப்படிக்கு வெண்ணெய்யிலே கொடுக்கவேண்டிய தாம் என்றும் இப்படிக்கு உண்மை உடனே உறுத்தப்பட்ட பித்த வியாதியுடனே வாதமுங்கூடக் கலந்து அத்திவாரம்போலே பலப்பட்டிருக்கச் செய்து அதிலே சேட்பமும் பொருந்தியதனாலே சத்தியென்கிற வாய்கான்றலான வாந்தி மேலிட்டதற்குப் பேர் பைத்திய சத்தியென்பதாயிருந்தால் அப்போது அதற்கு மருந்துமேற்படி யாகத்தான் ஆனபோதைக்கும் அனுபானப் பிரயோகமானது சர்க்கரையிலே கொடுக்கவேண்டியது.

அந்தப் பைத்தியகாரகமே மேற்பட்டதனாலே அதிக உட்டணச் சீதளமானது சிரசிலே ஏறிப்போய் அது நாபியை விட்டறாமல் எந்நேரமும் வம்சமான இருதயமானது வறண்டதினாலாகிற விக்கலென்கிற பிணிக்கு மேற்படி அயவிழ்தப்பிரயோகம் பண்ணப்பட்டதான போதைக்கும் அதற்கு அனுபானம் மேற்படி பிரமாணப்போக்கு விவரமாகக் கற்கண்டிலே கொடுக்க வேண்டியதென்றும் உண்டாகிய பித்தாக்கினி அகோர உக்கிரத்தினாலே சயித்திய உற்பவமுகாந்தரமாக உண்டான பயித்தியகாசமென்கிற சய நோய்க்கும் மேற்படி அவிழ்தமே அவிழ்தப்

பிரமாணமானபோதைக்கும் அனுபானம் நல்ல வெல்லத்திலே முன்னே சொன்ன பிரகாரமே கொடுக்க வேண்டியதென்றும் வெறும் பயித்திய வாதத்தில் சயித்தியந்தொந்தப்பட்டதனாலே யுண்டாகிய பித்தாதியுப்பச மென்னும் பொல்லாத வினைக்கு முன்னமே சொல்லியிருக்கப்பட்ட மருந்தே மருந்து வேறின்மையான போதைக்கும் அனுபான மாத்திரம் முன்னே சொன்ன பிரமாணப்படிக்கு நெய்யிலே கொடுக்க வேண்டியதாம்.

அதிகார மேற்கொண்டுமீறிய நாகத்தைப் போல் வெளிப்படாமலுள்ளே தகிக்கப்பட்ட பித்தாக்கினிப் பழக்கத்திலே உண்டாகிப் பயித்திய இருமலான பிணிக்கு மருந்து மேலே யதுவே வேறில்லை ஆனபோதைக்கும் அனுபானமாத்திரம் பண்ணப்பட்ட மகாவில்வாதி லேகியத்திலே தானே கொடுக்க வேண்டியதென்றும் அரசாட்சி செய்யப்பட்ட வாதமென்கிற இராசப் பிணிக்கு அனுகூலித்த மந்திரியுதவியினாலே யுண்டாகிறதான பித்த வெப்பமென்கிற பயித்திய சுரத்துக்கு மருந்து இப்படியா மென்ன மேற்படி பண்ணியிருந்த அவிழ்தப் பிரமாணமேயான போதைக்கும் அனுபானம் விதைவர்க்கங்களினால் பண்ணப்பட்டதான வித்தாதி உக்களியிலே கொடுக்க வேண்டியதென்றும் பழம்பட்ட பித்த சுரத்தினாலே உற்பத்தியாகிறதான பித்த பாண்டுவை என்கிற நோய்க்கு முன்னரோதிய மருந்துதானே பிரமாணப்பட்ட மருந்தான போதைக்கும் அனுபானம் வேறொன்றும் யோசனை பண்ணவேண்டியதிராமற்படி துணிந்து சாதிக்காயை முன்னிட்டுப் பண்ணத் தக்கோலாதி உக்களியிலே அதற்கு விதித்த பிரமாணப்படிக்குக் கொடுக்க வேண்டியதென்றும் சுத்த சலதோடப் பெருக்கிலே உற்பத்தியாய் வரப்பட்ட பித்தசோபை என்கிற பொல்லாத வினைக்கு மேற்படி விதித்த மருந்தே மருந்தானபோதைக்கும் அனுபான மாத்திரம் புசிக்கத்தகுமான உபசாந்தியுடனே பண்ணப்பட்டதான 'ஆச்சியவிசையார்த்தம்' என்கிற உக்களியில் உவாவிலே கொடுக்க வேண்டிய தென்றும், இப்படிக்குச் சொன்னதும் அல்லாமல் பண்டிதருண்மைக்கு அடுத்தபடியே செய்துகொள்ள வேண்டிய பருவானுகூலத்துக்குப் பொருந்தினபடி வேறுளதாயினும் அது பார்த்துச்செய்து கொள்ள லாமென்பது கருத்தாயினது செய்யவேண்டியது. (இனி வேறு அத்தியாயம்.)

மூன்றாவது - இராஜனென்கிற வாதத்திற்கிசைவான பிரதானி யென்கிற பேர்கொண்டு சேனாதிபதியாகி இராஜனுடைய ஆணையை மகாவீரத்துடனே செலுத்தப்பட்டவன் கண்மைபடைத்து மீறியே விளங்குவதான சேட்பத்தினது கிலக்கத்தை வகைவிவரமாகச் சொல்வ தெப்படியென்றால் அத்தியாயம் என்கிற ரூபத்தியான உவமானத்திலே சமுத்திரத்தை நிகரென்று உவமிக்கத்தக்க நீர்மையுடைத்தானதென்கிற பிறிது மொழிதலென்னும் அலங்காரத்தைக் கொண்டிருக்கப் பட்டதென்று சிறப்பித்துச் சொல்லப்பட்டதான கபத்தின் சம்பந்தமான பிணிவர்க்கங்களுக்கு முதன்மையான மருந்துமேற்படி அயபற்பமே, வேறன்று. அனுபான வித்தியாசத்தைச் சொல்லப்படும் அவையாவன "கபகர ரோகாதி தசமி" என்கிற சுலோகார்த்தப்படியாய் நியமிக்கப்பட்டது பத்து. அவையாவன இவை யென்றும், அவைகட்கு முதன்மையான அவிழ்தமும் அனுபானமும் விவரமாகச் சொல்லப்படும் பிரதானமான சேட்பத்துக்குண்டான குணாதிசய லட்சணங்களிலே அதிகப்பட்ட காலத்திலே யாக்கையை மீறி உபத்திரவப்படுத்துவதாகத் துணிவானால் அப்போது பண்ணத்தக்க சிஷ்டையாவது மருந்து முன்னமே சொல்லிய அயபற்பமே.

அந்த மருந்துக்குரைத்த பிரமாணப்படிக்கு அனுபானம் பாலிலே அதற்குள்ள பிரமாணப்படிக்குக் கொடுக்க வேண்டியதென்றும், முதன்மையான சேட்பப் பிணி வன்மையினாலே அதிகரித்துண்டான சேட்பச் சன்னியென்கிற பிணிக்கு மேற்படி பிரமாணப்பட்ட மருந்தையே மோழையிலே அனுபானப்படிக்குக் கொடுக்கவேண்டிய தென்றும் வேற்றுமைப்படாமல் ஒற்றுமையுண்டாகி வழங்கப்பட்ட சேட்பமுகாந்திரோற் பத்தியாய் வராநின்ற சன்னியை முன்னிட்டுக் கொண்ட சிரோபத்திரவமென்கிற தலைவலிப் பிணி நோய்க்கு மருந்து முன்னதான அயபற்பம் ஆன போதைக்கும் அனுபானமாத்திரம் முன்னரி சைத்தபடி கஞ்சியிலே கொடுக்க வேண்டியதென்றும் ஆனால் கஞ்சியாவது கோதுமைநொய், சாமைநொய் ஆகிய இவற்றின் கஞ்சி. இந்தச் சேட்ப வித்தியாசமான சன்னிபாதப்பிணி நாபியைப்பற்றி உண்டாகிற நீராமை என்கிற வியாதிக்கு மருந்து முன்னர் ஓதியதான

போதைக்கும் அனுபானம் மாத்திரம் பாயசத்திலே கொடுக்க வேண்டியதென்றும், பாயசமாவது, கசகசாவினாலே செய்யப்பட்டதாகும்.

மூங்கிலரிசியிலே செய்யப்பட்டதாவது. சலப்பிணி முதலான கபமும் பித்தமும் தொந்தித்த காலத்திலே உண்டாவதான சலபந்த மென்கிற நீர்க்கட்டென்னும் பிணிக்கு மருந்து முன் சொல்லிய அவிழ்தமே அனுபான மாத்திரம் முலைப்பாலிலே பிரமாணப்படிக்குக் கொடுக்க வேண்டியதென்றும், வாதம் என்கிற முதற்பிணியுடனே இந்தச் சேட்பம் விட்டுவிட்டுக் கூடின கூட்டுறவிலே பிறந்த நீரிழிவென்கிற பிணிக்கு மருந்து மேற்படியேயான போதைக்கும் அனுபானமாத்திரம் பிரமாணப் படிக்கு சிறுநீரென்கிற அமுரி மூத்திரத்திலே கொடுக்க வேண்டிய தென்றும் சுத்த வீரத்துவம் பெற்றிருக்கப்பட்டதான மாறாத கபப்பெருமையினாலது கட்டுப்பட்டதோமுகம் ஆகாமல் ஊத்த முகமாகிய பிணிவர்க்கமான சிரங்கு, கரப்பான், குட்டநோய், சொறி இவைகளுக்கெல்லாம் முன்னமே சொல்லிய அவிழ்தத்தைப் பிரமாணப்படிக்கு உமிழ்நீரென்கிற எச்சிலிலே அனுபானமாகக் கொடுக்க வேண்டியது என்றும், கபப்பிணியானது வாதத்தைச் சம்பாஷணை செய்து நீக்கமின்றி இருப்பதனால் அந்த வியாதி மேலிட்டதனாலே காயம் பூரிப்பான வீக்கம் உண்டாகி அதனாலே உபத்திரவம் உண்டாகிற காலத்திலே அது தீர மருந்து மேற் சொன்னபடி பிரமாணந் தப்பாமற்படி வெந்நீரென்கிற காய்ந்த நீரிலே கொடுக்க வேண்டிய தென்றும் இப்படியான சேட்பவியாதி பாதத்தைப்பற்றி உதைத்தெழும்பி முதன்மை ஆங்க மென்னும் உத்தமாங்கத்தை அண்டிக்கொண்டதனால் உபத்திரவத்தைச் செய்வதான நேத்திரப்பிணியான கண்ணோய்களுக் கெல்லாம் மொத்தமாக மருந்து முன்னம் ஓதியதேயான போதைக்கும் பிரமாணப்படியே அனுபான விவரமாய் துளசிச்சாற்றிலே கொடுக்க வேண்டிய பிரமாணத்துடனே கொடுக்க வேணுமென்றும் பெரும் பான்மையும் இப்படியேற்பட்ட சேட்பவியாதிப் பெருமிதத்தினாலே ஒருமிதமில்லாமற்படிக்காக வேர்வையைக் காண்பிக்கப்பட்ட கபா சுவேதாரந்தை யென்கிற பிணி நேரிட்ட போதைக்கு அதுதான் மருந்து.

மேற்படி பிரமாணமேயான போதைக்கும் அனுபானம் மாத்திரம் வெற்றிலைச் சாற்றிலே அனுபானப் பிரமாணப்படியே கொடுக்க வேண்டிய தென்றும் இந்தப்படி வாதபித்த சேட்பவர்க் காதிபத்தியங்களுக்கு விவரங்காட்டப்பட்ட நோய்களினது வரவும் அவை இவற்றினாலே செலவும் இப்படியான காரணகாரிய தொந்தங்களுக்கு முன்மையுஞ் சொல்லி முன்னே நிறுத்தி வைத்திருந்த அனுபானப் பண்புப் பொருண்மைத் தொகை எண்முறை முப்பதுக்கும் வகையுஞ் சொல்லி, இனி அப்பால் மேலே சொல்ல வேண்டியதுஞ் சொல்வதானார் - அனுபானப் பிரயோகம் இப்படிக்கெல்லாம் உண்மையாகப் பண்பு பெறச்சொன்ன அனுபானங்களையும் அப்படிக்கு நிதானமான அவிழ்தப்பிரயோகங்களைத் தப்பிதப்பிசகு வராமற்படிக்கு இயற்கை செயற்கையென்கிற இரண்டு வகையான உத்தியோக முயற்சிகளின் படியே, படலமத்தி - மருந்தும் அனுபானமுமான உபயப்பிரயோசனப் பலாபலங்களும் பிரிவாகி ஒவ்வத்தக்கதான உபாயங்களைச் செய்து மேலும், ஆயமனுபன் - உயில்நிலையான காரிய சித்தி உண்டாகத்தக்கதான காரியத்தை யறிந்து செய்யத்தகுமான முறைப்பிரகாரமறிந்து பண்ணக் கடவாயாக வென்றுஉபசார வழக்கபடியே எடுத்துரைத்தாரென்பது தோன்றத்தக்கதாக வெனவும் பார்த்துக் கொள்க.

## அய பற்பத்திற்குப் பிரமாணம், பத்தியம்

*சாமை தினையரிசி தர்மம் புராணமதி*
*சாமை தினையரிசி தர்மமுனஞ் - சாமை*
*அகத்தியமோர் காடிபுளி யாமலகங் கன்னி*
*அகத்தியமோர் நீக்கவறி யாய்.* 124

எ.து. இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா என்னுதலிற்றோ வெனின் முன்னே உண்டுபண்ணிவைக்கப்பட்டதான நல்ல இலக்கணம் பெற்றிருக்கப்பட்ட பற்ப சிலாக்கியம் மென்மேலும் படைத்ததான

அயபற்பத்திற்குப் பிரயோகப் பிரமாணமும் அதற்குண்டு பண்ணப்பட்ட பத்தியக் கடைப்பிடியும் அவ்வுணவுக்கு அவதிநாளும் வரன்முறைப் பிறழாது எடுத்துக் கூறுவானுதலிற்று. (எவ்வாறெனில், வரலாறு –)

சாமை – முதற் பிரமாணமாகச் சொல்லப்பட்ட உத்தமப் பிரமாணமான சாமையரிசியும், தினை – இரண்டாவது பிரமாணமாகச் சொல்லப்பட்ட மத்திமப் பிரமாணமான தினையரிசியும், அரிசி – மூன்றாவது பிரமாணமாகச் சொல்லப்பட்ட அதமப் பிரமாணமான நெல்லரிசியும் மேலே அவாய்நிலை எதிர்மறை முகத்தினாலே வருவிக்கப்பட்ட பிரமாணமான அதமாதமப் பிரமாணமாகிய நென்மணியும் இந்நான்கையும் ஒவ்வொன்றை நன்னான்குவென்னும் நான்கு நான்காகப் பிரித்துப் பார்க்கப் பதினாறு பாகமாகத் தோன்றும். அதெப்படியெனில், வரலாறு, முதல் உத்தமோத்தமம், உத்தமமத்திமம், உத்தமாதமம், உத்தமாதமாதமம்; மத்திமோத்தமம், மத்திமமத்திமம், மத்திமாதமம், மத்திமாதமாதமம்; அதமோத்தமம், அதமமத்திமம், அதமாதமம், அதமாதமாதமம்; அதமாதமோத்தமம், அதமாதமமத்திமம், அதமாதமாதமாதமம் இப்படிக்குப் பதினாறும் விவரமாகப் பேர் பெற்றவாறு கண்டு கொள்ளவும். இவைகளில் ஒன்றை நான்கு கூறிடுவதெவ்வாறெனில், ஒன்றைக்கால் – அரை – முக்கால் – ஒன்று என்ற விகிதப்படியே பிரித்துக்கொண்டு வைத்தியன் பண்டிதம் பார்க்கப்பட்ட தருணத்திலே எப்படி எப்படி நேர்நிர்வாகம் பிணியினது வன்மை மென்மை, காலதேச வர்த்தமானம் என்பதை யோசித்தறிந்து செய்ய வேண்டியதற்கு அடுத்தபடியே செய்யத் தக்கது, பின்னும் இவைகளெல்லாம் மேம்பாட்டுடனே சொல் வன்மையால் வயித்தியர்களெல்லாம் ஒப்பத்தானே பொது விதியாற் சொன்ன போதைக்கும் ஒருமையாகவே சிறப்பு விதியாகப் பார்த்து முடித்துக்கொள்ள வேண்டியது என்பதாம்.

தர்மம் – இதுவகையான அவிழ்தம் புசிக்க வேண்டிய நாள்களெல்லாம் முன்னோர் பழக்கமாகச் சொல்வது நாள் ஒரு மண்டலமென்கிற நாற்பத்து நாலு நாள் என்று சொல்வது சரியே. அது கற்பத்துக்கும் லேகியத்துக்கும் கிருதத்திற்கும் ஆனபடியினாலே

செந்தூரத்திற்கும் பற்பத்திற்கும் மாத்திரைக்கும் முன்னே சொன்ன நாற்பத்து நாலு நாளென்கிற மண்டலக்கணக்குக்கும் குறைவான கணக்கிலே முப்பத்தாறு, முப்பத்திரண்டு, இருபத்தேழு; இந்தக் கணக்கிலே பெருந்தொகையாக வைத்து எண்ணப்பட்ட செந்தூரத்திற்கும் பற்பத்திற்கும் மாத்திரைக்குமாக வைத்துக்கொண்டு அதிலே சுருக்கிக் கொள்ளலாம் போலே இருந்தால் அப்படியே குறைத்து வைத்துக் கொள்ளலாம் என்னும் விதியினாலே இவர் பற்பத்திற்கு உணவு நாள் இவ்வாறு கூறினார். ஏனென்றால், செந்தூரத்தைப் பார்க்கிலும் பற்பஞ்சுருக்கு பற்பத்தைப் பார்க்கிலும் மாத்திரை சுருக்கென்பது எல்லாருக்கும் நன்றாய் வெளிப்படையாலேயும் வேறு குறிப்பினாலேயும் அறியப்பண்ணவேண்டியதென்பதாம். ஆனபடியினாலே கற்மத்திற்குப் பிரமாணமான தொகை முப்பத்திரண்டுக்குக் குறிப்பிலே சொல்லவேண்டியபடியினாலே தர்மமென்றார். புராணம் - புராண மென்கிற தொகை பதினெட்டான படியினாலே முதலுத்தமம் போக இரண்டாவது மத்திமமென்கிற வெண்ணுக்குப் பதினெட்டு என்பது வெளிப்படையை நிறுத்திக் குறிப்பாகச் சொன்னார்.

மதி - மூன்று கணிப்பான மூன்றாவது அதமமென்கிறதொகையும் மேற்படியாக உருவகங்குறிப்பினாலே தோன்றப் பன்னிரெண்டென்று தெரியத்தக்கதாய் மதியென்றார்; மாசத்தினது கணக்கிலே கணக்குச் சரிப்பட்டுவரவும் இந்தப் பன்னிரெண்டுக்கு உட்பட்டு வருகிற நாளெல்லாம் அதமாதம மென்று வைத்துப் பார்க்கவேண்டிய தென்பதாம். ஆனபடியினாலே இந்த அவிழ்தத்தைக் கிரமப்படியே புசிக்க வேண்டிய நாளிலே முதலுத்தமமானது முப்பத்திரண்டு நாளென்றும் இரண்டாவது பதினெட்டு நாளென்றும் பன்னிரண்டு நாளென்றும் நான்காவது அதற்குக் குறைந்த நாளென்றும் வரிசையாக உத்தமமத்திமம், அதமமதமாதமமென்றும் பார்த்துக் கொள்ள வேண்டிய தென்பதாம். அக்கணிதப்படியே கூறினாரேனும் பண்டிதர் நேர்பாடறிந்து வரிசைப்படுத்தி அந்த நேர்மையிலே செய்வது ஆண்மையாமென்பார். பின்னும் பண்டிதனானவன் பிணியாளனை மெத்த உபசாரத்துடனே வேண்டிக் கொண்டு எப்படியாகிலும், அவிழ்தத்தைப் புசிப்பிக்கவேண்டுமென்கிற கணக்கினாலே, சாமை - ஐயனே என்னுடைய

சாமியான கர்த்தன் அல்லவா என்று மெத்த மெத்த நயவார்த்தையைப் பேசிப் பேசி அன்பாக வுடனே குழந்தையைப் பெற்ற தாய் தந்தையான பேர்கள் எப்படி அசனத்தை ஊட்டுவார்களோ அப்படியே மெள்ள மெள்ள இதவு பிறக்குமாறு பேசிப் பேசி இங்கிதவசனத்தினாலே, தினை - இந்த வஸ்துவை மாத்திரம், தயவு செய்து புசித்தருளத் தக்கதான தயவு செய்வாயாக வென்னும் பின்னேயும் எப்படியென்றால், அரிசி - இந்தவஸ்து எங்கேயும் அகப்படுவதன்று ; கிடையாத பொருள்;

என்னைப்பற்றி இதை மாத்திரம் உண்டுடார்: அப்பாலே உனக்கு நிகரான பேர் உலகத்திலே யாருமில்லை யென்றும் பின்னேயும், தர்ம முன் - என்று வைத்தியனானவன் எந்த விதத்திலேயாகிலும் பிணியாளன் என்கிற சீடனுக்குத் தெரியப்படுத்தி அவனுடைய மனதைத் திருத்தி நிசமாகத் தன்னாலே பண்ணப்பட்டிருப்பதான மருந்தினது குணத்தை யெல்லாருங் கொண்டாடிக் கொள்ளத்தக்கதான வழியைப் பார்க்கவேண்டிய கடனானபடியினாலே வயித்தியனைப் பார்த்து முன்னிலையாகச் சொல்லுகிறதாகையால் அந்த தர்மமென்கிற ஒழுக்கத்தை வகித்துக் கொண்டு செய்யக்கடவை யென்று சொல்லிப் பின்னேயும், அஞ்சாமை - வயித்தியனென்று சொல்லப்பட்ட நீ எப்பேர்ப்பட்ட மாறுபாடான காரிய வித்தியாசங்கள் வந்து நேரிட்ட போதைக்கும் அவைகளெல்லாம் எம்மாத்திரமென்று அவைகளுக்கெல்லாம் பயப்படாமற்படிக்கு மனோதைரியத்துடனே எதிர்நின்று உதாரணஞ் சொல்ல அப்பாலே அவிழ்தம் புசித்தது பலிதமாகிற நிமித்தியமாகப் பத்தியத்தைச் சாதிக்கத்தக்க மார்க்கத்தைப் பார்க்க வேண்டிய தெப்படி யென்றால், அகத்தி - அகத்திக்கீரையும், அம் - குளிர்ச்சியான நல்ல தண்ணீரும், மோர் - புளித்த மோரும், காடி - புளித்தசாறுங் காடித்தண்ணீர்க் கழுநீர்க்குழம்பும், புளி - புளிப்பும், ஆமலகம் - நெல்லிக்காய்ப் புளிப்பும், கன்னி - பெண்போகமும் என்றைக்கு மருந்து ஆரம்பித்ததோ அது முதற்கொண்டுசுத்தமாய் இப்படியாக இப்படிப் பிரித்துச் சொன்னதிலே எது ஒரு வேளை மறந்து பிசகியறியாமற்படிக்கு நடந்த போதைக்கும் ஒருபடிசாகி அவிழ்தங்கெட்டுப் போகிறதிராது, கடைசியிலே சொன்ன வஸ்துவான பெண்போக மாத்திரம் ஒரு வேளைப்பிசகாகக் கூடிவிடுமேயானால் இந்த

மருந்து என்கிற அவிழ்த பலன் எல்லாம் ஒன்றுமிராமற் கெட்டுப்போமென்பார். அகத்தியம் - எப்படியாகிலும் எந்த விதத்திலேயானாலும் பெண் போகத்தை மாத்திரம் போக்கிப் பத்தியத்துக்கு ஒரு பழுதும் வராமல் என்றைக்குமொரு தன்மைக்குத்தான நிலைமையான நிறையுடனே இருந்துகொண்டு உண்மைக்கு உத்தாரமாகத்தானே உறுதியுடனிருந்து தின்ற மருந்தைக் காப்பாற்றினால் அப்பாலே அவனுடைய தேகமென்ன பத்தரை மாற்றுத் தங்கத்தைப் போலே சாயலும் மகாமேருவைப்போலே சார்வான திடகாத்திரமும் பெற்றிருக்கப்படும் நெடுநாளைக்காகையாலே நன்றாயாலோசனை யினாலே, ஓர் - யோசனை பண்ணிப் பார்ப்பையே யாமாகில் அப்பாலே உன்னுடைய மனதுக்கு ஏய்ந்த நன்மையும் அந்த நன்மையினாலே உண்டாய் வரப்பட்ட யோக்கிய சிலாக்கியம் ஆனாலே அறிவுக்கு உறுதிப்பாடு மிக பர நன்மையும் வாய்மையான வாக்குந் திண்மையும் வண்மையும் வரகுணமாகிய தெய்வவரப்பிரசாதமும் வெகுவாகத்தானே யுண்டாகும்.

விவரமெல்லாம் பெருமையாகத் தானே வாய்ப்பதும் நீக்க ஆகையினால் வசனத்தினாலே நானென்ன சொன்னபோதைக்கும் நீ உண்மையாக மனோவாக்குக் காய மென்று சொல்லப்பட்ட திரிகரண சுத்தியாய்ப் பெண்போக மென்று இதுவரைக்கும் பொல்லாவஸ்து என்று சொன்னவொன்றையும் நீ கடிந்து தள்ளிப்போடுகிற உபாயதந்திரத்தை, அறியாய் - ஆகையினாலே உனக்குத் தெரியாது. தெரிந்து தள்ளிப் போடுவையானால் அப்பாலே உனக்கு நிகரான பேர்கள் இந்த மூன்று லோகத்திலேயும் கிடையாது. நீயே யோக்கியனாயிருப்பாய். எப்படியென்றால், இந்த அயபற்பத்தின் மகிமையைத் தேவேந்திராதிதேவர்களாலேயும் சொல்லி முடியாது. அப்படி மகிமை மகத்துவம் பெற்றிருக்கப்பட்டதாம். பின்னேயும் உலகத்திலே முன்னோர் நூலிலக்கிய மென்னும் வாகட சாத்திர நன்னூல்களிலேயும் உவமான உதாரண முதலினைப்பென்கிற வாக்கியப் பாசுரங்களிலேயும்.

*"எய்த்தவ னிரும்பை யுண்க"*

எனச் சிற்பறியற்றி னானே யென்னும், வேறு பின்னும்

*"அயப்பொடி*
*யெயப்பொடி*
*யயிற் பையெ*
*லுயப்பை*
*யங்கமுக*
*முங்கழறு*
*மாறுமறி*
*வாரால்"*

என்பது குறுமுனிக்கரிசல் வரலாற்று முறைமையும் வரைந்தனர். கோடலிலென்றும் வேறு வழி நூன்மருங்கினும் இவ்விரும்பையே பலப்படுத்தி ஓதினாரென்பது உண்மையாகையாலும், பின்னரும், ஏனை வடமொழிப்பனுவலென்கிற கீர்வாணப் பண்டிதாங்கமணிப் பிரவாளகாண்ட மென்று சிறப்பித்துச் சொல்லப்பட்ட காரகியரிஷி என்று சொல்லப்பட்ட தபோதன ஆரியராலே சொல்லப்பட்ட சாத்திரத்திலேயும் இப்படியே இந்த அர்த்தமென்கிற பொருளுண்டாகத்தானே

*"அய பரஸ் பெந்தி ராசனே*
*தினேதினே யமுதாசனே*
*சுபத்தியாசு பேது".*

என்று உண்மையாகத்தானே இரும்பினது பற்பம் மற்ற பற்பங்களுக்கெல்லாம் ராசனெப்படியோ அப்படிமேம்பாடான அதிகாரம் உண்டாயிருக்கும் ஆனபடியினாலே இந்த அயபற்பத்தை மாத்திரங்கிரமப்படியே ஒன்றும் பிசகாமல் முதலுத்தமப் பிரமாணத்தொகையுடனே சேர்ந்த முப்பத்திரண்டு நாளும் புசித்து அனுபான வண்மை தழுவிக்கொண்டு உண்டு மேலே பத்தியக்கடைப்பிடியுடனே உறுதியாக வண்மையுடனே மனத்தைப்

பிடித்தடக்கிக் கொண்டிருப்பானேயானால் அவனுக்கந்த மருந்தெப்படியா மென்றால் தேவாமுர்தபோசனஞ் செய்த தெய்வங்களுக்கெப்படி நின்மலத்திடகாத்திர சவுக்கியங்களுண்டாகுமோ அப்படியே சகல நன்மைகளையும் கொடுக்குமென்று அந்தச் சுலோகார்த்த மிருக்கிற படியினால் அப்படியே இந்த அயபற்பமானது மற்ற பற்பங்களுக்கெல்லாம் அரசனாகியிருப்பது நிசமானபடியினாலே நீ இந்தப் பற்பத்தை முதற்றொகை நாளின்படியே நல்ல அனுபானப் பிரயோகப்படியுண்டு பத்தியத்துடனே இருந்து சாதித்தால் உனக்கும் அப்படியாம்.

## முன்னர்கூறிய விவரத்தை விரிவாய்ச் சொல்வது

*களிப்பாக்கு வெங்காயங் கஞ்சா வபினி*
*களிப்பாக்கு வெங்காயங் கள்ளு - களிப்பாக்கு*
*பத்தியங்கெட் டாதவிழ்தம் பாவைபெரும் பாண்மை*
*பத்தியங்கெட் டாதவிழ்தம் பார்.* 125

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா வென்னுதலிற்றோவெனின் மேலே சொன்ன பத்தியத்தினது தொகைக்கு வகையும் விரியுங் கூறுதனுதலிற்று. எவ்வாறெனில், வரலாறு.

பத்தியத்தை விவரமாகச் சொல்லி விவகரிக்குமிடத்தில் எப்படி யென்றால்; களிப்பாக்கு - வேவித்தபாக்கிலே மெத்தவுங்குழம்பத் தக்கதாய்ப் பக்குவ வருவங்களிலே அப்படி நயப்பு வரத்தக்கதாய் வேவித்த களிப்பாக்கும், வெங்காயம் - ஈர வெங்காயமும், கஞ்சா - கற்பம் கோரகையாசியம் என்றும் பேர்பெற்ற கஞ்சாவும், அபினி - அபினியும், களிப்பாக்கு வெங்காயம் - புருஷனுடைய தேகத்தை லாகிரி உண்டாக்கி உடனே அலைக்கழிவுண்டாக்கிச் சுரதாந்த மென்று சொல்லப்பட்ட மகிழ்ச்சியைத் தருவதான பொல்லாத வெப்பத்துடனே கூடிய தேகமென்று சொல்லவே அது குறிப்பினாலே பெண்போக மென்றாயிற்று.

அப்படியான பெண் போகமும், கள்ளு - பனங்கள்ளும், ஈச்சங்கள்ளும், தென்னங்கள்ளும், அடுநறாவென்கிறசாரையும் பின்னும் லாகிரியைத் தருவதான பண்டங்களும், களி - இவைகளெல்லாப் பொருள்களும் இவைகள் போலப்பின்னும் நன்றாயாராய்ந்து பாராமல் எச்சி நிறமதாய் இருக்கப்பட்டதான லாகிரிப் பொருள்களும், பாக்கு - இப்போது மாத்திரமென்று சொன்ன நிகழ்காலத்திற்கும் இனி மேல் வரப்பட்டதான எதிர்காலத்திற்கும் பொல்லாத நடத்தை யாகியிருந்து, பத்தியம் - பண்டிதராலே செய்யப்பட்டதான மருந்தினது உண்மைப்பெருமையை நிலைநிறுத்தி அதனாலே உண்ட பேருடைய தேகத்தை நெடுங்காலம் உலகத்திலே நன்மையுடனே இருக்கப்பண்ணுவதான பத்தியத்தை, கெட்டு - கெடுதியாகப்போகப் பண்ணுவதும், அன்றியிலே இந்த அவபத்தியங்கள் இதற்கு முன்னாகத்தானே, ஆதவிழ்தம் - எந்த மருந்தைக் கொண்டிருக்கிறானோ அந்த மருந்தையும் பிரயோசனமில்லாமல் அப்பிரயோசனப்படுத்தப் பட்டது எதுவென்றால் அவபத்தியமே. அந்த அவபத்தியமாவது, பாவை பெரும்பான்மை - அப்படிக்குப் பொல்லாங்கையே கொடுக்கப்பட்டதான அவபத்திய மென்று பொதுமையாகச் சொன்னதிலே சிறப்பாகச் சொல்லுவது எது வென்றால் பெண் போக மென்கிற காமம் ஒன்றுமே பொல்லாத அவபத்தியம். மற்றதெல்லாஞ் சிறுபான்மை லகுவிலே போய்விடும்; பொருட்டன்று என்பதனால் பாவை பெரும்பான்மை யென்று வற்புறுத்திச் சொன்னார். ஆனபடியினாலே முனிவரிலே ஆதிக்கிய முனிவரான சிவமுனிவரும்:-

*"பெண்ணின்ப மென்ப தாலம் பிறைநர ருயிர்நி லைக்கே*
*யெண்ணினமற் றஃதானன்மை யெவற்றையுங் கெடுக்கு*
*முன்னோர்*
*பண்ணின வவிழ்த மென்னும் பாற்கொரு பிறைமோராகும்*
*புண்ணின்மொய்ப் பறவை மானப் புமான்களென்னயப்ப*
*ராலோ"*

என்றும், பின்னும் பாஞ்சுருபாதவ ரென்கிற முனிவர்,

*"நேரிய வனிதைமார் நீச வின்பமும்*
*பூரிய ரடிசிலும் பொருவும் பான்மையால்*
*வேரியி லதிகமாம் விடுதனன் றன்றோ*
*சூரிய னெனவுரந் துலங்குமெய் யர்க்கே."*

பின்னுந் திருமூலர் திருமந்திரத்திரட்டிலே

*"நோய்கொளக் கொள்ளலாம் நூறெனு மாயுட்கும்*
*பேய்கொள வெண்ணினும் பெண்கொள லாகுமோ*
*வாய்கொ ளவிழ்தமு மண்ணாகுஞ் சட்டகஞ்*
*சீய்கொ ளுதிரஞ் சிவணுமப்பா மெய்யே"*

பின்னும் அகத்தியர் கரிசலிலே

*"காமக்கடுநிகர்*
*தூமைக் கடிதட*
*மோமக் கனவென*
*வே மெய்க்*
*கழிவிது காணும்*
*பெரியவர், காணும்*
*பிணிவலை கண்டயர்ந் - தொழிந்துவிந்து*
*பந்த - முந்த*
*வுந்த - வந்து*
*கரதலாக நெல்லி வரதவாத வல்லி".*

இப்படியாகப் பெரியோர்களாலே சொல்லப்பட்ட முறைமைகள் எல்லாமிருக்கத் தக்கதாய் இவரும் இப்படியாகத்தானே யோசித்துக் கூறினார்.

*"பத்தியங்கெடாதவிழ்தம் பார்"*

ஆனபடியினாலே, பெண்போக மென்கிற அவிழ்த விரோதமான அவபத்தியத்திற்கு முதற்பாதமான பெண்போகத்தை அனுசரித்த பேர்களுடைய சரீரத்திலே உண்டான பலத்தையுங்கெடுத்துப் பின் செயற்கையான பலத்தினாலே உண்டான திண்மையென்கிற பலத்தையுங் கெடுத்துப் போடும். ஆனபடியினாலே அவிழ்தத்தினாலே உண்டாகிற குண நன்மையென்கிற இலட்சணத்தையெல்லாங் சேரவொட்டா தானபடியினாலே நான் சொன்ன முறைப் பொருளான சாத்திரப்படியே அதனது பொருளையெல்லாம் மேலான உதாரண வாய்பாடாக அறிந்து பார்க்க வேண்டிய தெல்லாம் அறிந்து பாரென்ற வரியான சுலோகார்த்தப் பெயராலே வடமொழிப் பெயர்ப்பை ஆராய்ந்து பார்க்க வேண்டியது.

## எஃகு பற்பம்

*உக்கிரவை வேலிவுளி யூன்வேர்ப் புறணிமழை*
*உக்கிரவை வேலிமுக மோர்மூன்றே - உக்கிரவை*
*கள்வார்க்கப் பாலாகுங் காபுடமூன் றாகில்முறை*
*கள்வார்க்கப் பாலாகுங் காண்.* 126

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா என்னுதலிற்றோவெனின் எழுகு, எஃகு என்றுரைக்கப்பட்டதான உத்தமோத்தமென்னும் உருக்குபற்பத்தினது கைமுறையாகச் செய்யப்படும் பற்பத்தினது சம்பிரதாயத்தை விவரமாகச் சொல்லுதனுதலிற்று. எப்படியென்றால், வரலாறு.

உக்கு - எஃகுவினுடைய, இரவை - ரவை ரவையாய்ப் பொடி பண்ணியிருக்கப்பட்ட பொடியை நன்றாய்ச் சீர்தூக்கி நிறை கட்டளையிலே நிறுத்திக் கொண்டு அப்பாலதற்கு இசைவாகத்தானே, வேல்வேர்ப்புறணி மழை - கருவேலம் வேர்ப்பட்டையினது சாறும், இவுளிவேர்ப் புறணிமழை - குதிரையென்கிற அனுகாரணப்

பேரானமாமரத்தினது வேரான அடியினது பட்டைச்சாறும், ஊனவேர்ப்புறணிமழை - ஊனான் கொடி வேரினது பட்டைச்சாறும், உக்கிரவைவேலி - மகா கோபரச பராக்கிரமம் பொருந்திய கூர்மையுண்டான சக்தி வேலாயுதத்தைக் கையிலே தரித்திருக்கிற அதிகாரத்தையுடைய சுப்பிரமணி சுவாமியார் தம்முடைய, முகமோர் மூன்றே - அந்த சுப்பிரமணியருடைய திருமுகமென்ற குறிப்பெச்சமென்னும் உவமானம் உண்டாகத்தக்கதாய்ச் சொன்ன போதே ஆறென்கிற தொகை வெளிப்படையாகத் தோற்றப்பட்டது.

ஆனபோதைக்கும் முன்னே நிற்கத் தக்கதாக நிறுத்ததன் முறைக்கிரமப் பிரகாரம் நிறுத்துவைத்த வேல்வேர்ப்புறணி மழையென்னுங் கருவேல மரத்தினது வேர்ப்பட்டையினது சாறு முதல்முதல் ஒன்றுக்கு மூன்று விழுக்காடான ஒரு பலம் முதற்பொருளாகிய எஃகு பொடிக்கு மூன்று பலம் ரசமானது விட்டு நித்தியபடியாய் அரைத்துப் பகல்காலமானபோதைக்கு ஆன பிற்பாடு இராத்திரிக் காலத்திற்கெல்லாம் பனியிலே வைத்து இப்படியே மறுநாளைக்கும் மேற்படியே செய்து இந்தப்படியே ஆறுநாளான பிற்பாடு மேலே ஆறுநாள் வெயிலிலே வில்லைதட்டிக் காயவைத்துப் பன்னிரண்டாம் நாளுதயத்திலே அறுபத்து நாலு விராட்டியிலே புடமிட்டெடுத்து ஒரு நாளாறவைத்துத் திரும்பவும் மறுநாளாரம்பித்து மேற்படி ஆறுநாள் புடமிட்டு எடுத்து மூன்றிலொருபங்கு பற்பமான பொடி ஒருபலத்துக்கு இரண்டு பலம் மாமரத்தின் வேர்ப்பட்டைச்சாறுவிட்டு அரைத்து இராத்திரிக்காலத்தில்விட்டு மேற்படி பனியில் வைத்து மறுநாள் உதயத்தில் மேற்படியே செய்து இப்படி ஆறுநாளான பிற்பாடு மேற்படியே வில்லைதட்டி ஆறு நாளிப்படியே வெயிலில் வைத்துலர்த்தி அப்படி ஆறு நாளான பிற்பாடு மேற்படி இருபத்தெட்டாநாளுதயத்திலே நாற்பத்தெட்டு விராட்டியிலே புடம்போட்டு ஒரு நாளாறவிட்டு மறு நாளெடுத்து கிரமப்படி திரும்பவும் மூன்றுக்கிரண்டு பங்குபற்பமான பொடியை ஊனான் கொடி வேர்ப்பட்டைச் சாறு ஒரு பலத்துக்கு ஒன்றரைப் பலம் விழுக்காடுவிட்டு அரைத்துத் தினமும் பகல்காலமெல்லாம் இடைவிடாமல்படிக்கு அரைத்தானபின்பு இராத்திரிக்காலத்தில் மேற்படியே பனியில் வைத்து

மறுநாளைக்கு முன்போலேதானே செய்து இப்படியே ஆறு நாளான பிற்பாடு மேற்படியே ஆறு நாள் வெயிலிலே வில்லை தட்டி உலரவைத்தெடுத்து நாற்பத்து நாலாம் நாளுதயத்திலே முப்பத்தாறு விராட்டியிலே புடம் போட்டாறவைத்து ஒரு விடமாகப் பாவித்து ஒரு நாள் விட்டெடுத்துப் பார்க்க வெண்மை தாவளியமாயிருக்கும்.

அப்படியான சொக்கமென் றேற்படப்பட்ட எஃகுபறபத்தை நன்றாய் இசைவான பரம் குருவாகப் பாவிக்கப்படும். உக்கிரவை - பலப்பட்ட சரக்கினுடைய வேகத்தையெல்லாம் எழும்பவொட்டாமல் அடக்கிப் போடப் பட்டதான இராத்திரி காலம் என்கிற பருவபக்குவத்தை எப்போதும் முன்னே நாம் பக்குவமாகச் சொன்னப் பிரகாரம் பனியில் வைக்கவேண்டிய கிரமப்படிக்கு வைக்காமல் வரன்முறை பிசகி அந்த மார்க்கத்தைத் தவறினபேர்களான உபய மதஸ்தரான மறந்த பேரானுஞ்சரியே மாச்சரியரானாலுஞ் சரியே அப்படியான பேர்களுக்கு, அப்பாலாகும் - வேறே வெகு தூரமாகியப் புறப்பட்டணுகாமல் அப்படியே கைமுறையும் பிசகிக் கெட்டுப் போய் விடும். அவிழ்தமான பற்பமும் பக்குவப்படமாட்டாது, ஆகமாட்டாது என்ன பிரயாசைப்பட்ட போதைக்கும், காபுடமூன்றால் அகிலமுறை - பத்திரமாகத்தானே பார்த்து வெகுவாகத் தான் வரிசைப்படிக்குச் செய்யப்பட்ட புடங்களினுடைய கிரமப்படி வரவர ஒன்றுக் கொன்று குறைந்து வரத்தக்க வயணமாகத்தானே மூன்றுவிதமான புடம்போட்ட போதைக்கும், மேலே சொன்ன ராத்திரி காலப்பனிகள் வேண்டியதென்பது தோன்றத்தக்கதாய்ப் பத்திரப்பட்டதென்று ஆலகிலென்றும் முறையென்றும் இவரிவ்வாறு வற்புறுத்தி எப்பேர்ப்பட்ட பேராலும் விள்ளாப் பொருண்மையுண்டாக்கிக் கூறினார். இவர் கருத்தைப் போலவே தானே கர்ம காண்ட மாயிரத்திரட்டிலே திருமூல நாயனார் அருளிச் செய்த திருமந்திரம் எப்படி யென்றால் -

“நனிபட்ட வாகடா நாட்டு முறைப்பொரு
டுனிப்பட்ட கங்குலிற் றுன்னிய சீதப்
பனிபட்ட தில்லை யேற்பாடு பட்டுங்கரி
கனிபட்ட வரமெனக் கண்டுகொள் வீர்களே”

என்று இப்படியே பின்னும் மத்தியாரண்ணியரென்கிற வடமொழிப் பெயர்கொண்ட இடைக்காட்டுத் தேவநாயனாரும் பஃறொடைப் பல்லாண்டு பாசுரத்திலே

*"கோனாட்டுக்குட்டி தாயார மனாட்டுக் குள்ளே*
*கூடாவிட்டாற் பாலைக் கூட்டக் கூடாதே*
*வானாட்டை வெள்ளாடு செம்மறியாட்டின்*
*மாற்கமறி நல்ல கம்பிளியாடேட்ளி*
*தேனாட்ட நீர்காட்டி மேலான மந்தை*
*சின்னக் குடிசையிற் சிக்கவைப்பாயே*
*நானாட்ட வேணுமோ நீயாட்டொணாதோ*
*நாமக்கோன கைத்தடிநாயும் போகாதே."*

முன்னர்க்கூறிய திருமந்திரம் வெளிப்படையாகையால், அதற்குரை வேண்டியதில்லை. அடுத்த பாசுரப் பஃறொடைக்கு மாத்திரம் வேண்டியதாகையால், கோனாட்டுக்குட்டி தாயென்னும் பனியை ராமனாட்டுக்குள்ளே யென்னுமராலிலே விடாவிட்டால் பற்பம் பண்ண வேண்டிய சரக்கை வைக்காவிட்டால், பாலைக் கூட்டக் கூடாதே - பற்பத்தைப்பண்ணி முடிக்க மாட்டார்களென்பதாம், வானாட்டை வெள்ளாடு செம்மறியாட்டின் - பின்னும் மேலான தேவர் முகத்தைக் கூடப் பழிக்கப்பட்டதான செம்மையென்னும் செந்தூரத்தை. மாற்க மறிநல்லகம்பிளியாடேட்ளி - கறுத்த மாத்திரையினுடைய வழியையும் மேலே விசாரணைபண்ணக்கடவாயாகவும். மேலே, தேனாட்ட நீர் காட்டி மேலான மந்தை - அனுபானங்களிலே தேனும் நீரும் இந்த ஏற்பாட்டினை யுடைத்தான இரண்டும் மேலான அனுபானமான படியினாலே இவைகளையறிந்து மேலே பின்னும் மேம்பாட்டை யுடைத்தான பத்தியங்களையும் அறிந்து கொண்டு, சின்னக் குடிசையிற் சிக்க வைப்பாயே - கறாடக மென்கிற மருந்துக் கூட்டிலே பத்திரப் படுத்திவைத்துக் கொள்ளுவாயாகவும், பின்னும். நானாட்டவேணுமோ நீயாட்டொணாதோ - நாங்களான பெரியோர்களிருந்து தாபனஞ் செய்யவேணுமோ? தேவையில்லை.

நீதானே யெடுத்து முறைப்படியே செய்து கொள்ளப் போகாதா செய்துக் கொள்ளலாம், நாமக்கோண கைத்தடி நாயும் போகாதே - அப்படிக்குத்தானே நீ நல்ல மருந்தும் அனுபானஃமும் நன்றாய் அறிந்து கொண்டு செய்குவையேயானால் அப்பாலே அந்த அவிழ்தானு பானங்கொண்டு பண்டிதம் பார்ப்பையேயானால் இந்த உலகத்திலே ஒரு பிராணியுமிறந்து போக மாட்டாது, நமனாருடைய கையிலே இருக்கப்பட்டகதையான தண்டமும் - நாயான பாசமுஃம் ஒருத்தரையொன்று செய்யமாட்டாது அப்பிரயோசனப்பட்டுப் போமன்றியிலே பிரயோசனப்பட மாட்டாதாகையால் வரலாற்றுப் பிரகாரமே நீ செய்து கொள்ள வேண்டிய தென்பது. இது இடைக்காட்டுத் தேவநாயனார் அருளிச் செய்த மாப்பாசுர அர்த்தமும் பார்த்துக் கொள்ளவேண்டியது, கள் வார்க்கப் பாலாகுங்காண் - இப்படி அருமையாகச் செய்த எஃகுபற்பத்தினது நன்மையாகச் செய்ததெனப்பற்பத்தினது அருமையைப் பரிட்சை பார்க்க வேண்டியிருந்தால் தென்னை மரத்தினது கள்ளாவது மற்றும் பனைமரத்தினது கள்ளாவது பின்னும் ஈச்சமரத்தினது கள்ளாவது வார்த்ததிலே இந்தப் பற்பத்திலே எள்ளளவு பற்பத்தைப் போடவே அந்தந்தப் பால்களென்கிற சாறாகப்போய் விடும் நிமிஷத்திலாவது சிறிது நேரம் பொறுத்தாவது அந்த வகையை அறிந்து பார்த்துக்கொள்ள வேண்டிதென்று சொல்வார்கள்.

## எஃகுபற்பத்திற்கு அனுபானமும் பிணிகளுக்குத்தக்க பிரயோகமும்

*கோடைக்கா மந்திரிக்கை கோறிக்குக் காயரதங்*
*கோடைக்கா மந்திரிக்கை குன்மக்கெண் - கோடைக்குத்*
*தேங்காய முதிர்க்குத் தேனா மெகுபற்பந்*
*தேங்காய முதலறி செய்.* 127

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா என்னுதலிற்றோ வெனின் மேலே அருமையாகப் பண்ணத்தகுமான

முறைப்படி செய்திருக்கப்பட்ட அரும்பொருளான எஃகுபறப்பத்தை அந்தந்தப் பிணிவர்க்கந்தெரிந்து கொண்டதற்கு ஏற்கப்பிரயோகம் பண்ணுவதும் கூறுதனுதலிற்று. (எப்படியெனில், வரலாறு).

கோடைக்கு - முதன்மையான வாதமென்று வாகட சாத்திரிகளாலே நியமிக்கப்பட்டதான இராச வியாதிக்கும் அந்த வியாதிக்குக் கூட்டுறவான பற்பல வியாதிகள் வரத்தான அண்டவாதமென்றும், தனுர்வாதமென்றும், பாரிசவாயுவென்றும், பட்சவாயுவென்றும், பரிமிதவாத மென்றும், நேத்திரவாயுவென்றும் இப்படி அநேகமான வாத வினைகளுக்கெல்லாம் பண்ணவேண்டிய பிரயோகப்பிரமாணப்படியே பண்ணுகிற காலத்திலே அதற்கடுத்த சர்வாபகர பட்சண மென்கிற, ஆம் - நல்ல குளிர்ந்த தண்ணீரிலே அனுபானம் பண்ணவேண்டியது, மந்திரிக்கு - இரண்டாவது இராசாங்கம் என்கிற மந்திராலோசனைக்குப் பண்பாயிருக்கப்பட்ட மந்திரியென்கிற சுத்தபித்தமான வியாதிக்குப் பண்ண வேண்டிய பிரயோகத்திற்கும் அந்தப் பித்தத்துடனே கூடின கூட்டுறவு வினைகளான வாதபித்த மென்றும், பித்தவெப்பமென்றும். பித்தசன்னியென்றும், பித்த பாண்டுவையென்றும், பித்த விக்கலென்றும், பித்தானலம் என்றும் பித்தவறட்சி யென்றும், பித்தசூலையென்றும், பித்தமகோதரமென்றும், பித்தநீர்க்கட்டென்றும் பேர்பெற்றிருக்கப்பட்டதான பிரபல பிணிவர்க்கங்களெல்லாவற்றிற்கும், ஐ - பண்ணவேண்டிய திடப்பிரமாணத்திற்கு அனுபானம் வெண்ணெய் என்றும், கோறிக்கு - கொல்லுதலையே மேற்கொண்டு அதிகார தோரணைப்படியே இராஜாங்க தானத்திற்கு மூன்றாவது தந்திரியாயிருக்கப்பட்ட சேனாதிபதி யென்கிற சேட்பப்பேர் பெற்றிருக்கிற கபத்திற்கும் அந்த கபப்பிணிக்குக் கூட்டுறவான சேட்பவாத சூலையென்றும், சேட்பதர சுரமென்றும், சேட்பாண்டமென்றும், சேட்பபல்லையென்றும் பின்னும் வெகுவெகு விதமாகக் கபதொந்த வினை களுள்ளவைகளுக்கெல்லாம் பண்டிதராலே பண்ணவேண்டிய பிரயோகப்படியே பிரமாணந்தப்பாமற் பண்ணச் செய்தற்கெல்லாம் பொதுமையான அனுபானம் என்னென்றால்.

வாயரதம் - வெள்ளை வெங்காயமென்ற உள்ளிப் பூண்டுச்சாற்றிலே அனுபானம் பண்ண வேண்டியது, கோடைக்கு - மாறுபாடாகி

லங்கணத்தின் பேரிலே அபத்தியத்தினால் வந்து மக்களித்துக் கொண்டு விகடிப்புப் பண்ணவல்ல பொல்லாங்குக்கிடமான சன்னியென்கிற பித்த சன்னி, விடபாக சன்னி, குரோதக சன்னி, மாரகசன்னி, உன்மத்தசன்னி இப்படிச்சொல்லப்பட்ட விகடகப்பிணியினது தொந்தாபாய நோய்களெல்லாவற்றிற்கும் பண்ணவேண்டிய பிரயோகப் பிரமாணங்களென்கிறது வேறே வேறே இசைவாயிருந்தபோதைக்கும் அதற்கெல்லாம் பொதுமையான அனுபான மென்னவென்றால், மந்திரிக்கை - பனங்கள்ளாவது, தென்னங்கள்ளாவது, பேரீச்சங்கள்ளாவது இப்படியான பேர் பெற்று இதற்கெல்லாம் பண்பானபேர்பெற்ற கருப்பஞ்சாறும் பிரயோகம் பண்ணவேண்டியதான அனுபானமென்றும். குன்மகுன்மமென்று சொல்லப்பட்டதான சகல வியாதிகளுக்கெல்லாம் பிரயோகம் பண்ணப்பட்ட வகைகளெல்லாம் வேறான போதைக்கும் அனுபானம், எண் - எள்ளினது ரசத்திலே ஊறவைக்கப்பட்டதான எண்ணீரென்கிற தண்ணீரும், கோடைக்கு - அதிகவெப்பமென்கிற மகா சுரத்திற்கும் அத்துடனே சேர்ந்து சுரானிலமென்றும், சுரபல்லையென்றும், சுரமாந்தியம் என்றும், சுரமீசுரம் என்றும் இப்படிப் பலபல விதங்களான சுரதொந்தவியாதிக ளுள்ளதற்கெல்லாம் மேலே உரைத்திருக்கப்பட்ட அவிழ்தமே அவிழ்தமான போதைக்கும் பிரயோகப்பிரமாணம் முன்னமேயாவது பின்னராவது வரன் முறை பிறழாமற்படியே பண்ணுவதான அனுபானம் என்னவென்றால், தேங்காயமுது - தேங்காயினுடைய பாலிலே எப்படிப்பண்ணவேணுமோ அப்படிப் பண்ணவும்.

அதிர்க்கு - நடுக்கலினது பிரிவான நடுக்குவாதமென்றும், நடுக்குன்மத்தம் என்றும், நடுக்கானல மென்றும் பேர் பெற்றிருக்கப்பட்டதான வியாதிகளுக்கெல்லாம் ஒருக்காலே, தேனாம் - தேனுமுதகமுமான கலப்புப் பானகமொன்றே அதிலே அந்தந்தத் தருணத்துக்கேற்றபடியே பிரயோகம் பண்ணவும், எகு பற்பம் - இப்படிக்கெல்லாம் பண்ணவேண்டிய அனுபானத்துக்கெல்லாம் முதற்பிரமாண வஸ்துவையாகியது எஃகுவினுடைய பற்பம் ஒன்றே

வேறேயன்று, தேம் - தேசங்களென்று சொல்லப்பட்ட அஞ்சுவிதமான குறிஞ்சிநிலமென்றும், முல்லை நிலமென்றும், பாலை நிலமென்றும், மருத நிலமென்றும், நெய்தல் நிலமென்றும் வகையேற்பட்டிருக்கப்பட்டதும், காயம் - சரீரப் பிரகிருதியான அவரவர்களுட தேகசம்பந்தங்களை யெல்லாம் வேறு வேறு வகையாகப் பார்த்தறியப்பட்ட உடற் கூறுகளை யெல்லாம் நன்றாய், முதலறி - முதன்மையான பிரதானப்பணியினது வகைகளை யெல்லாம் வாதபித்த சேட்பாதி யென்கிற விவரங்களையும் அவைகளுடைய உற்பத்தியும் ஒடுக்கமும் பாண்டிதோத்தம மார்க்கம் என்கிற நூனெறியாலே அறிந்துகொண்டு, செய் - பண்ணத்தகுமான பாண்டித்திய மார்க்கத்திலே மனத்தைச் செலுத்தி அதிக ஓட்டமாயோடாமற்படியே பண்ணுவாயாக வென்றவாறு. இந்தப் பிரகாரமே பண்ணுவாயாக என்று முற்காலத்திலே ரோகாந்தகரென்கிற பண்டிதராலே ஒருவர் தமது சொந்தச் சீடராகிற சவுபரிஇராஜாவை பார்த்துச் சொல்லிய வடமொழிப்படியே மொழிபெயர்ப்பென்னும் தமிழின் மார்க்கத்தைப் பார்க்கப் பண்ணின நிருத்தச் செய்யுளென்னுந் தன்வந்திரியத் திருவாகடத்திலே சொல்லப்பட்ட உதாரணமெப்படி யென்றால் :-

*“ஆயுள் வேதியராலே பண்ணு மாதி*
*அவுடதத்தை யெஞ்ஞான் று மனுபா னிக்கு*
*மீயுபர்தந் திரந்தந்து வாக்கிய முண்மை*
*விதரணைவாய் பாடிவைகள் விளங்கச் செய்து*
*பாயுமுவை உழைகவர்த வெனப்பொய் யாமற்*
*பண் ணுவ வெண்பிரயோகம் பண்ணப் பின்னர்*
*நோயுறுதானமு நோயு நெறியு நாடி*
*நோக்கறித வெப்படியோ நுவலொண் ணாதே”*

பின்னுமுன்னாலே நந்திகேஸ்வரருக்குக் கயிலாயத்திலே ஆதிகாலத்திலே பரமசிவனானவர் கட்டளையிட்ட ஆதித் தெய்வ வாகட சாத்திரங்களாறிலே மூன்றாவது சாத்திர மென்கிற கீர்வாணப் படியான வடமொழிக்குள்ளே சந்தோபிசிதியின் பூர்வ பாகத்திலே சொன்னார். எப்படியென்றால் :-

*"அனுபானேனாது வங்கர்தவம்*
*பிரதானார்த்த மவிழ் தெதினே*
*யசிய பட்சமானி கெற்வரோக*
*சம்கார திவ்வியாஸ்த் திரஞ்சியா"*

இப்படியாகத்தானே செவ்விதானுபோகமாகச் சொன்ன வழிபாடுகளெல்லாம் இனிமேல் வரவரப் பார்த்துப் பக்குவப்பட்ட பேர்களுடைய உதாரணங்களை யெல்லாம் விவரமாகத்தானே பார்த்துக் கொள்ள வேண்டியது. அவைகளை நாமின்னம் விரித்துரைக்கில் பெருகும்; ஆகையால் சுருக்கிச் சொன்னோம். அப்படிச் சொன்ன போதைக்கும் அறிய வேண்டிய பேர்க ளறிந்துகொள்ளு முகமாகத்தானே அறிந்து கொள்ள வேண்டியது.

## எஃகு பற்பத்திற்கு, பிரமாணமும், பத்தியமும், நாளும்

*கடலைப் பதம்பான்முக் காலேக மாதி*
*கடலைப் பதம்பான்முக் காலாய் - கடலை*
*புளியாம் பிரமாது பூணைய முதப்பப்*
*புளியாம் பிரமாது போல்.* 128

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா இங்ஙன மென்னுதலிற்றோ வெனில் இவ்விடத்திற் கூறிவைத்த எஃகுபற்பத் தினுக்குப் பண்டிதராலே பண்ணப்பட்ட பிரயோகப் பிரபலமான பிரமாணத்தையும் அதற்கு இசைவு பெற்றுச் செய்வன தவிர்வனவான பத்தியங்களையும் நாள்களையும் பான்மை பெற்ற முறையாற் கூறுதனுதலிற்று. எவ்வாறெனில் வரலாறு :-

கடலைப் பதம் - அவிழ்தமென்று சிறப்பித்து வயித்தியராலே வரப்பிரசாதத்தினாலே படைத்த திவ்வியாஸ்திரமென்ன விளங்குவதான எஃகுவினது பற்பத்தை நோயாளியினுடைய நோயென்கிற லட்சியத்தின்

பேரிலே பிரயோகம் பண்ணுகிறதற்கு நியமித்த பிரமாணமாவது முதலுத்தமமென்பது ஒரு கடலையை நாற் கூறிட்டு அதிலேயொரு கூறான கால்வாசியான கடலை எவ்வளவு பிரமாணமோ அவ்வளவுதான் பிரயோகம் பண்ண வேண்டியது, பான் - இரண்டாவது மத்திம மென்று சொல்லப்பட்டதானதற்குப் பிரமாணம் எப்படியென்றால் மேற்படியான கடலையை நாற் கூறிட்டு அதிலிரண்டு கூறாகிய அரைவாசிக் கடலை எவ்வளவோ அவ்வளவுதான் பிரயோகம் பண்ணவேண்டியது, முக்கால் - மூன்றாவது அதமமென்று சொல்லப்பட்டதானதற்குப் பிரமாணமெப்படியென்றால் மேற்படி கடலையை நாற் கூறிட்டு அதில் மூன்று கூறான முக்கால் வாசிக் கடலை எவ்வளவுப் பிரமாணமோ அவ்வளவு பிரயோகம் பண்ணவேண்டியது, ஏகம் - மேற்படியான கூறானது இடாமற்படிக்கு முழுக்கடலை ஒன்று எவ்வளவு பிரமாணமோ அவ்வளவு பிரமாணந்தான் பிரயோகம் பண்ணவேண்டியது அதமாதமத்துக்கு, ஆதி - முதலான உத்தமம், மத்திமம், அதமம், அதமாதமம் என்றுரைக்கப்பட்டதான, கடலைப்பதம் - அவைகளுடைய முதன்மையான வாக்கியத்தில் வசனத்தை எடுத்து உதாரணத்துடனே அறிவிப்பதான பொருண்மையை வெகுவிதமாகக் காண்பிக்கவல்ல சாமர்த்தியத்தையுடைய, பான் - வெண்மையென்கிற குறிப்புப் பெயர் பூண்ட பற்பத்தை, முக்காலாய் - ஓங்காரமாக ஓங்கினதாக உறுதிகொண்டிருந்தது போலே அதிக வேகமாகத்தானே பற்பம் முடியச்செய்து கொண்டதை அப்படியான பிரமாணப்பிரயோகத்தை முன்னே சொன்னபடியே நாலுவகையுந் தெரிந்து வரப் பண்பாகச் செய்யவேண்டியது.

கடலை - அப்பாலே பத்தியமாகச் செய்ய வேண்டிய சிட்சையிலே தவிர்வனவாகிய தள்ளிப்போட வேண்டிய தென்னவென்றால், புளி - புளிப்பையும், ஆம்பிரம் - பின்னேயுஞ்சிறிது வித்தியாசமான புளித்த மாமரத்திலே யுண்டான மாம்பழம், மாங்காய், மாம்பிஞ்சு முதலானவையும், மாது - பெண்போகம், பூண் - அப்பாலே பத்தியமாகக் கூட்டிக் கொள்ளவேண்டிய வஸ்துக்க ளென்னவென்றால், ஐ - வெண்ணெய், நெய் முதலானதும், அமுது - பால், பாற்குழம்பு, பால்வடை, பாற்கண்டம்

முதலானவையும், அப்பப்புளி - பலகாரமாகிய கணக்கிலே அஃப்பட்டதான, நெய்யினாலேயுங், கற்கண்டு, சர்க்கரை, கோதுமைமா. கடலைமா இவைகளாலே செய்யப்பட்டதுமான சிற்றுண்டிகளெல்லாம், ஆம் - இவைகளெல்லாம் பத்தியத்திலே கூட்டிக் கொள்ளப்பட்டதான பேர்பெற்ற பொருள்களானபடியினாலே பத்தியத்திலே பின்னம்வராது கொள்ளலாம், பிரமாது போல் - அப்பாலே இந்த அவிழ்தமானது எப்படி நன்மையைத் தருவதென்றால், மேலே அதிக உக்கிரபராக்கிரமத்தைப் படைத்திருக்கப்பட்டதான தாம்பிரபற்ப மென்கிற பாசுபதாஸ்திரமெப்படி பற்பங்களிலே சிலாக்கியமும் ஆண்மையும் பெற்றிருக்குமோ அப்படி இந்த எஃகு பற்பமும் படைத்து அந்தக் குணத்தையே காண்பிக்கப்படும். ஆகையினாலே தாம்பிரபற்பத்திற்கு வரன்முறை பத்தியங்களானவை எப்படியோ அப்படியே இதற்கும் பார்த்துக்கொள்ள வேண்டியதென்பதாம். பின்னும் மாது போலென்ற சத்தார்த்தத்தினாலே இந்த மருந்தை யுண்ண வேண்டியதான நாள்களினது கணக்கு மேலே நாலு வகையெப்படியெனில் முதலுத்தமத்திற் கொன்பது நாளென்றும் மத்திமத்திற்குப் பதினெட்டு நாளென்றும் அதமத்திற்கு இருபத்தேழு நாளென்றும் அதமாதத்திற்கு முப்பத்தாறு நாளென்றும் பிரித்துப்பார்த்துக்கொள்ள வேண்டிய தாகையா லிஃதெல்லா மேலே யோசித்து உபய குணங்களென்கிற இயற்கை செயற்கைகளாலே நன்றா யோசனையாகப் பார்த்துக் கொள்ளத் தக்கதென்று அறிவார்களிப்படி யென்றவாறாம்.

## தாம்பிர பற்ப முறை

*நாலுகைசா வாடு முவை நாகமுனை கள்ளிவன்னி*
*நாலுகைசா வாடுமுதி நாகநெய்யே - நாலுகைசா*
*தோன்றியடி நேயமுமேல் சொன்னவூர் மன்னிபநேர்*
*தோன்றியடி நேயமுமேல் சூழ்.* 129

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச்செய்யுள் வெண்பா என்னுதலிற்றோவெனின் இங்ஙனந் தாம்பிர மென்று உலோகங்களிலே

அதிக நன்மையும் வெண்மையும் படைத்திருக்கப்பட்டதான செம்பினுடைய பற்பம் பண்ணவேண்டிய மார்க்கத்தை எல்லாம் பண்டிதமாகத் தொகுத்தும் வகுத்தும் விரித்துங் கூறுதனுதலிற்று. எப்படியென்றால், வரலாறு.

நாலுகைசா - கால்பல மென்று கணிக்கப்பட்ட நிறையிலே நாலாகக் கூட்டிப் பார்த் தொருக்காலே ஒரு தொகையாகச் சொல்லப்பட்டதான ஒரு பலமென்கிற எண்ணெயுண்டான தாகிய, வாடு - செம்பினுடைய பொடியை நிறையாக நிறுத்துப் பார்த்துக் கொண்டு அந்த ஒரு பலமான அந்தச் செம்புக்கு, முவை - பதினைந்து பலத்தினது காற்கூறாகிற மூன்றே முக்காற் பலமான தொகையோடே கூடின கணக்கின் படிக்கு, நாகம் - வெற்றிலைச் சாறுவிட்டு ஒரு நாளைக்காலமே நாளையதினம் அரைக்க வேண்டிய தென்கிற எத்தனத்திற்கு முன்னாடி முதல் நாளினுடைய இராத்திரிக்கே ஊற வைத்து மறுநாளுதயத்திலே ஆரம்பித்து அத்தமித்திருக்கிறவரைக்கும் ஒரு பலமான செம்பின் பொடியிலே முன்னே ஊறவைத்த தெவ்வளவோ அவ்வளவு வெற்றிலைச்சாறு விட்டு அரைத் திடைவிடாமற்படிக்கு இப்படியான பிற்பாடு மேற்படியே மறுநாள் இராத்திரிக்கு மப்படியே செய்து அடுத்த மறுநாளைக்கும் அப்படியே செய்து இப்படியே ஒரு நேரான கடைப் பிடிப்பிரமாணமாகப் பதினைந்து நாளான பிற்பாடு மேலே பதினைந்து நாள் அரைத்தான மருந்தினது வில்லையை ஆறுநாள் நிழலிலே உலர்த்தி மேலே ஒன்பது நாள் வெயிலிலே உலர்த்தி ஆகப்பதினைந்து நாளான பிற்பாடு முப்பது நாள் போய் அப்பாலே நடக்கப்பட்ட முப்பத்தோராம் நாளுதயத்திலே அறுபத்தாறு விராட்டியிலே புடத்தைப் போட்டு ஒரு நாளாறவிட்டு மறுநாளெடுத்துப்பார்க்க முதன்மையான பற்பத்திற்கு ஆறுக்கு ஒரு பங்கு பற்பமாகும். அப்படியான பற்பசேடத்தை ஒத்த பொடியை முப்பத்து நாலாம்நாள் காலமே செய்ய வேண்டியதற்கதற்கு முன்னாள் இராத்திரியிலேதானே, முனை - முன்னையிலைச் சாறு விட்டூறவைத்து மறுநாளைக்குப் பின்னு மப்படியே அம்மாத்திரஞ் சாறுவிட்டரைத்து மேற்படியே இராத்திரிக்கு மேற்படியே செய்து மேற்படியே மறுநாளைக்கு மிப்படியே பன்னிரண்டு நாளரைத் தானதை எடுத்து வில்லை தட்டி அப்படியான வில்லையைப் பின்னும்

மேலே பன்னிரண்டு நாளென்கிற கணக்குச் சரிப்பட்டு வரத்தக்கதாய் நாலு நாள் நிழலிலே உலர்த்தி கொள்க.

எட்டுநாள் வெய்யிலிலே உலர்த்தி அப்பாலே அடுத்த நாளுதயத்திலே நாற்பத்து நான்கு விராட்டியிலே புடத்தைப் போட்டு ஒரு நாள் போகவிட்டு மறுநாள் எடுத்துப் பார்க்கவே ஐந்திலே ஒரு பங்கான பற்ப சேடமாம். அப்பாலே அறுபத்தோராநாளு மேற்படியே அப்படியான பற்பசேடப் பொடியை, கள்ளி - இலைக்கள்ளியிலைச்சாறு ஒருபலப்பொடிக்கு இரண்டரைப்பலம் விழுக்காடு விட்டூறவைத் தப்படியே மறுநாளைக்கும் அம்மாத்திரமே விட்டரைத்து மறுநாளைக்கு மப்படியே இந்தப்படியே எட்டு நாளைக்கு மகா மத்திரமாகச் செய்து மேலே எட்டு நாளைக்குக் கணக்குச் சரிப்பட்டு வரத்தக்கதாயிரண்டு நாளைக்கு நிழலிலே உலர்த்தி ஆறு நாளைக்கு வெய்யிலில் வைத்துலர்த்தி அப்பாலே அதையெடுத்து மறுநாளைக்காலமே முப்பத்து மூன்று விராட்டியில் புடத்தைப்போட்டு நடுவே ஒரு நாளாற வைத்து மறுநாளெடுத்துப் பார்க்கவே நாலிலே யொரு பங்கான பற்பசேடமாம்.

இப்படியானதை மேலே எண்பத்தோராநா ளுதயத்திலே, வன்னி - வன்னியிலைச்சாறு மேற்படியே ஒன்றான பற்பச் சேடப்பொடிக்கு இரண்டு பங்கான விகிதமாக விட்டூறவைத் தெப்படியோ அம்மாத்திரமே விட்டு அரைத்து ஒரு நாள் வகைமை எப்படியோ அப்படியே மறுபடி அடுத்தநாளைக்கும் பண்ணவேண்டிய முறைப்படி செய்து இப்படி நாலு நாளான பிற்பாடு மேலே நாலு நாளென்கிற கணக்குப் படியே வரத்தக்கதாய் ஒரு நாள் நிழலிலேயும் மூன்று நாள் வெய்யிலிலேயும் வைத்துலர்த்தி அப்பாலே ஒன்பதாநா ளுதயத்திலே இருபத்திரண்டு விராட்டியிலே புடத்தைப் போட்டு ஒரு நாளாற வைத்து நீக்கி மறுநா ளுதயத்திலே எடுத்துப் பார்க்கவே மூன்றிலே ஒரு பங்கான பற்பசேடப் பொடியாம். அப்படியான பற்ப சேடப்பொடியைத் தொண்ணூற்றிரண்டா னாளுதய காலத்திலே, நால - நன்மை யுண்டாகத்தக்கதான கிரமப்படியே சொல்லுகிறேன்.

அந்தவகை விவரங்களை யெல்லாம், உகை - நீ பத்திரமாகக் கேளு முன்னே சொன்னபடியே அரைக்கிற போதும் புடத்தைச்

செய்கிறபோதும் கைமுறைக் கிரமங்களெல்லாம் பிசகிப்போகாமற்படி உன்னுடைய வல்லமையினாலேயும், பெரியோர்களையடுத்து அவர்களுடைய வரப்பிரசாத மகிமை பெற்றிருக்கிற நன்மையினாலேயும் பண்ணப்பட்டதை உண்மை யாகத்தானே வரன்முறைப்படியே பண்ணுவாயாகவும். பின்னேயும் மேலே, சாவாடு - அடிக்கடி நீ இந்த முறையான பண்டிதத்தைச் சரக்கின்படியே பண்ணத்தொடங்கியபோது அது செய்துகொண்டு வந்து முடிகிறவரைக்கும் பெரியோர்களண்டைக்குப் போய் கேட்கிற பருவப் பொருண்மையை யெல்லாம் நன்றாய் அனுமான மில்லாமற்படிக்குக் கேட்டு மறுபடி ஐயமறக் கேட்டறிந்து கொள்ளுவாயாகவும்.

இல்லாவிட்டால் அப்பேர்ப்பட்ட பெரியவர்களாலே பண்ணப்பட்டதான சாத்திரத்தின் பொருண்மையையாகிலும் பார்த்து மனத்திலே உண்மைக்கு உத்தாரமான நம்பிக்கை வரப்பண்ணிக்கொள்ளுவாயாகவும். முதிநாக நெய்யே - மேலேஅப்படியாகி இருக்கப்பட்டதான பற்ப சேடப் பொடியை மேம்பாடான முற்றுப்பெற்று மிகவும் பூரணத்துக்கு அணித்தாகப் பண்ணவேண்டிய தெப்படி யென்றால் மூன்று நாளைக்கு மாத்திரம் இருப்புப் பாத்திரத்திலே வைக்குமுறைமையாகப் பற்ப சேடப் பொடியை வைத்துக்கொண்டு அதிலே தீபாக்கினி விளக்கைப் போலே சாமத்துக்கு நாலு நாழிகை விழுக்காடு இரவும் பகலும் பேர்பட்ட எட்டுச் சாமத்திற்கு முப்பத்திரண்டு நாழிகைப் பொழுதும் புன்னைவிரைத் தைலம் நித்தியப்படிக்கு இரண்டு பலம் தைலத்தை லகுவிலே சுருக்குக் கொண்டு மூன்று நாளைக்கும் ஆறுபலமாகவே உபாய தந்திர யுக்தியுடனே செய்து முடிந்தால் சாக்கிரதை தப்பாமற்படிக்கு அப்பாலே அது இரண்டுக்கு ஒரு பங்கான பற்பசேடமாம்.

பின்னேயும் மேலே இப்படியாகவே தொண்ணூற்றைந்து நாளாகும், நாலுகைசா - நீயப்பாலே செய்ய வேண்டிய பிரயாசமான வேலையுழைப்புக்கெல்லாம் வேசாறிப் போய் எப்படிச் செய்யப்போகிறோமென்கிற மெதுவாகிய ஆலசியத்தை விட்டுவிட்டு அதனால் வருவதான மந்தக்கெடுதியை யெல்லாம் சுத்தமாயடித்துத்

தள்ளிப்போடவேண்டிய குணத்தைத் தேடுவாயாகவும்; தோன்றியபடி நேயமும் மேற்படி பிரகாரமாய்ப் புன்னைவிரைத் தைலத்திலே மூன்று தினத்துக்குத் தீபாக்கினியாகச் சுருக்குக் கொடுக்கச் சொல்லிச் சொன்னோமோ அப்படித் தானே காந்தளென்கிற கண்ணோவுக்கிழங்கினாலேயுந் தைலத்தை உண்டுபண்ணிக்கொண்டு அந்த தைலத்தினாலேயும் மேற்படியாகத்தானே இரவு பகலிரண்டு வேளைக்கும் எட்டு சாமத்திற்கும் விசிதமான நாலு நாழிகை ஒரு சாமத்துக்கென்கிற தொகைப்படியே முப்பத்திரண்டு நாழிகைப் பொழுது மனசோ வலியொன்றி வரத்தக்கதாகச் செய்யத்தகுமான வேலையைச் செய்கிற சாக்கிரதையான கிரிகையை முயற்சி பண்ணவும்.

ஏல - நீ அதிலே பிரவேசித்தெப்படி எப்படிச் செய்ய வேணுமோ அப்படிச் செய், சொன்னவூர் மன்னிபநேர் தோன்றி - அப்படியேபண்ணவேண்டிய கிரிகைப் பிரகாரமே நீ பண்ணிமுடிப்பையேயானால் வரிசையாகச் சொல்லுகிறேன் உண்மைப்படிக்குப் பொன்னுலகமென்று எல்லாராலேயும் எடுத்துக்கூறுதற் கிசைவான சுவர்க்க லோகமென்கிற அமராவதிப் பட்டணத்தை அரசுபுரிந்து தேவர்களுக்கெல்லாம் இராசனென்கிற பிரதாபத்தைப்பூண்ட தேவராசனாகிய தேவேந்திரனானவன் ஏறிக்கொண்டு பவனி வரப்பட்டதான அயிராவதமென்கிற வெள்ளை யானையைப் போலே பிரகாசமாய் வெளிப்பட்டு உயருமெனவே குறிப்பினாலே முழுதும் வன்மை வெண்மையுடனே லட்சியமான பற்பசிலாக்கியப்படும் என்பதாம். ஆனபோதே சம்பூரணதாவள்ளியமாய் முற்றுப்பெற்றுக் குறைவற்றிருக்கு மென்பதாயிற்று. ஆகவே அந்தப் பற்பத்திலே கன்மசங்களிபமான களிம்புவெப்ப மொன்றும் இராமற்படிக்கு நன்மையான குணங்கள் மிகவுண்டாகி வேகத்திலே பாசுபதாஸ்திரத்தைப் போலவும் வண்மையிலே சஞ்சீவியாகிய பிராணபதார்த்தத்தைப் போலவும் வாக்கிய சவுக்கியத்திலே ஆதிக்கிய சிந்தாமணியைப் போலவும் உபகாரத்திலே பயாகரசீமுதத்தைப் போலவும் ஆக்ரூடணத்திலே காரூடப் பிரயோகம் போலவும் வசியமாதி யெண்ணெண் கலைக்கியான சித்தியும் பெறுதற்கேதுவான நன்மைகளை யெல்லாம் பண்டித புஞ்சங்களுக்குச் சர்வகாலமும் கொடுக்குமென்பதாம்.

அடிநேயமு மேல் சூழ் - நானிதுவரைக்கும் மேலான சிலாக்கியத்தைத்தானே சொல்லிக் கொண்டு வரப்பட்டதான இந்தப் பற்பத்தினது குணாதிசய மெல்லாம் இனிமேலைக்கு நான் சொல்ல வேண்டியதில்லை. நீயே உன்னுடைய புத்திமதி ஆலோசனைகளினாலே இந்த வியாதிக் கிம்மாத்திரம் பிரமாணத்திலே எடுத்திருந்த விதமாய் இந்த அனுபானத்திலே இப்படியாகப் பிரயோகம் பண்ணி இந்த வியாதியை அடிக்கவேண்டிய மார்க்கமென்று அந்த விவரமெல்லாமறிந்து கொள்ளுவா யென்பதாம். ஆனபோதே என்னால் சொல்லப்பட்ட வயணங்களும் அல்லாமல் நீயும் பலபல வகைமையெல்லாந் தெரிய வல்லமை இதனாலே சம்பாதிப்பையென்பது துணிபு. பெரியோர்களிலே ஒருவர் கூறிய வடமொழியான கீர்வாணப்படியே :-

*"பஸ்மரங்கெனாராஜராஜேந்திர*
*தாம்பிர நாமானி பாசுபதம்."*

இப்படியாக வருசிபகவான் முன்னே நாரதருங் கேட்கத்தக்கதாய்க் காற்கியரானவர் சொன்ன வாக்கிய சுலோகார்த்தத்தையும், பின்னுங் கண்கட்கினிமையைத் தரப்பட்டதான திராவிட மென்கிற தமிழிலே அகத்திய முனிவர் அருளிச் செய்த கரிசலிலேயும் உதாரணமாகத்தான் வகுத்ததெப்படி யென்றால் :-

*"வடுச் சுண்ண*
*மடுச் சுண்ண*
*வந்திக்க*
*முத்திக்கு*
*மாதேவசரமாகு*
*மாதேவசரமே*
*வங்கை கொண்டரங்கதுங்கு*
*மங்க விங்கரந்தை யை."*

என்றும், பின்னும் போகரானவர் குறுந்திரட்டு முன்னூற்றிலே எடுத்தோதினார். எப்படி யென்றால் :-

*"பற்பமென் றாற்றாம்பிரமே பற்பமாகும்*
*பாசுபத மஃதேயாகும் பார்த்தபேர்*
*விற்பன பண்டிதத்தாலே காலகேய*
*வினைக்கூட்ட வெம்படையை வீக்குமப்பா*
*உற்பவமே தினியஞரா மனிதர்வர்க்க*
*மோகோகோ செம்பினன்மை உரைக்கொணாதே*
*கற்பனைக ளல்லவடா மகனே குன்ம*
*காலனென்றால் வாதசன்னி கலங்கும்பாரே".*

இப்படிச் சொன்னது மல்லாமல் வேறே திருமூல நாயனார் திருமந்திரத்திரட்டிலே கர்மகாண்டம் ஆயிரத்திலே ஆதிக்கியம் ஆதலாலே பற்றி யோதினா ரெப்படி யென்றாலுதாரணம்.

*"செம்பி னடலை சிவாத்திர மாகுமே*
*நம்பி யெய்வார் கண்மனை வெல்வார்பிணி*
*வெம்பிய கலவி டாரியை நேர்பாயும்*
*வம்பியல் லார்பலன் வாய்க்க வல்லார்களே".*

இப்படி மேலான சாத்திரப் பெருமித உரனான உதாரணத் தினாலேயும் பார்க்க வேண்டியது, பின் கயிலாசச் சட்டை முனிவரானவர் முன்னாலே தமது சீடரிலே அறிவாகர மாணாக்கருக்கும் நன்மை யாளடிகண் மாணாக்கருக்கும் மிகவும் நித்தியானந்த மகிழ்ச்சியினாலேயே அனுக்கிரகம் பண்ணினாரெப்படி யென்றால் :-

"கேளப்பா உண்மையறி வாகரப்பேர்
கேவலா நமையாளடிக் கிருதாநீவிர்
மூளப்பா அனலான பரமவாளி
முதன்மையா ணவப்பிணியாம் பகையைச்சாடு
மீளப்பா வானிலத்தை அடக்கும்நாகம்
வேறல்ல செம்பினது பற்பமப்பா
நாளப்பா விலகுவதோர் பொழுதுமில்லை
நாரணாத் திரமிதற்கு நாணிப்போமே."

இப்படியே இன்னமும் பெரியோர்கள் சொன்ன உதாரணமும் பார்த்துச் செய்வாய்.

## தாம்பிரபற்பத்திற்குப் பிரமாணமும் நாளுங் கூட்ட வேண்டிய முறைவிவரம்

செப்பிடு வித்தை தினை சாமை காணமுன்னால்
செப்பிடு வித்தை தினமேழேழ் - செப்பிடுநெய்
அக்காரம் பாலை யபூபம் பலாவாழை
அக்காரம் பாலையுளை யாம். 130

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா வென்னுதலிற்றோவெனின் மேலே சொன்ன தாம்பிர பற்பத்திற்கு நிருத்தன் முறையானே வைத்த அவிழ்தப் பிரயோகப் பிரமாணத்திற்கு உறுதியா யேற்பாடான நாளும் வேண்டிய படியே கூட்டிக்கொள்ள வேண்டிய பண்டங்களும் விவரமாகக் கூறுதனுதலிற்று. எப்படி யென்றால், வரலாறு.

செப்பிடுவித்து - மேற்படியாகத்தானே செய்தருமையுண்டாக்கு வித்த தாம்பிர பற்பத்தை யெடுத்துப் பண்டிதம் பார்த்து இலக்கணப்படியே நோயாளியை இரட்சிக்கத்தக்கதாகி ஏற்பட்ட வயித்தியனானவன்

அவிழ்தத்தை அந்தந்த நோயை அறிந்து பிரயோகம் பண்ணுவதற்குப் பிரமாணமாகச் சொல்லிவைத்த தெப்படி யென்றால், ஐ - ஒரு கடுகு, தினை, ஒருதினை, சாமை, ஒருசாமை, காணம் - ஒரு கொள்ளு, முன்னால் - இப்படியாகப் பிரமாணப்பிரத்தியட்சமான அளவைகளான கடுகு, தினை, சாமை, கொள்ளு, என்று சொன்ன நான்கும் முதன்மைத்தான உத்தமமென்றும் மத்திமமென்றும் அதமமென்றும் அதமாதமமென்றும் இப்படிவகுக்கப் பட்ட நாலிலேயிருந்து பிரிந்து விளங்குவது பதினாறு. அதெப்படி யென்றால் முதன்மை அளவையான கணக்கோடே கூடிய முதலான ஒரு கடுகிலே கால்வாசியான காற்கடுகுப் பிரமாணம் முதல் உத்தமோத்தம மென்றும் அரைக்கடுகுப் பிரமாணம் உத்தம மத்திம மென்றும் முக்கால் கடுகுப் பிரமாணம் உத்தமாதம மென்றும் ஒரு கடுகு பிரமாணம் உத்தமாதமமென்றும்; இரண்டாவதான ஒரு தினையிலே கால்வாசியான கால்தினைப் பிரமாணம் மத்திமோத்தமமென்றும், அரைத்தினைப் பிரமாணம் மத்திமமத்திம மென்றும் முக்கால் தினைப்பிரமாணம் மத்திமாதமமென்றும் ஒரு தினைப்பிரமாணம் மத்திமாதமாதம மென்றும், மூன்றாவதான ஒரு சாமையிலே கால்வாசியான கால்சாமைப் பிரமாணம் அதமோத்தம மென்றும் அரைச்சாமைப் பிரமாணம் அதமமத்திமமென்றும் முக்கால் சாமைப்பிரமாணம் அதமாதமப்பிரமாண மென்றும் ஒரு சாமைப்பிரமாணம் அதமஅதமாதமப் பிரமாணமென்றும், நான்காவதான ஒரு கொள்ளிலே கால்வாசியான கால் கொள்ளுப்பிரமாணம் அதமாதமோத்தமென்றும் அரைக் கொள்ளுப் பிரமாணம் அதமாதம மத்திம மென்றும் முக்கால் கொள்ளுப் பிரமாணம் அதமாத மாதமப் பிரமாணமென்றும் ஒரு கொள்ளுப் பிரமாணம் அதமாத மாதமாதமப் பிரமாணமென்றும் இப்படி ஒன்று நால்வகை விரிவாகிப் பாகமென்று வித்தியாசத்துடனே ஏற்பாடாகிப் பதினாறு பிரயோகத்துக்கு நன்மையைத்தருவது பண்டிதற்கான படியினாலே இந்த வகைப் பிரிவை முன்னோர்களிலே ஆதி வடமொழியான கீர்வாண சுலோகத்திலே.

"அவிஷத்து பிரயோக சதுர்ப்பாகாதி
பாதாதிசாதுர்த்தி சோட சம்பவேது
உத்தமோத்தமப்பரகுர்தி
நித்தியே னாசுபாண்டிதக் கிரமம்"

இப்படியாகத்தானே திருமூலநாயனாரும் மேன்மையான திருமந்திரத்திரட்டிலே அருளிச் செய்தார் எப்படி யென்றால்,

"சுத்த வவிடதஞ் சொன்ன பிரயோகம்
வித்தள வாகநரல் வேற்றுமை யாயினு
முத்தம மாதி யுரைக்கு மிரண்டிரண்
டத்தனை யேதொகை யாகும் பதினாறே"

பின்னும் அகப்பைச் சித்தர்

"உத்தம மாதி முன்னா லகப்பை
யோது மருந்தளவே
வித்தளவாகு மடிய கப்பை
மேலது சோடசமே"

பின்னும் பாம்பாட்டிச் சித்தர்

"அவிழ்தப் பிரயோக முன்னர் நான்கே
யைய வியாதியென் றாடாய் பாம்பே
செவிதாகு முத்தம நாலு நாலாய்ச்
சேர்ந்த பதினா றென்றாடாய் பாம்பே."

பின்னும் அகத்திய முனிவர் கரிசலிலே

*"மருந்தினுக்கெண்*
*பொருந்து முத்து*
*மத்தை முதலாகுமிரு*
*பத்தை யொரு நாளொழிய*
*வரைவார் குடிப்பகை முன்*
*விரைவாய் விரைக்கெமனு*
*வினில னிலுதின*
*முன வரு மொழியே."*

இப்படியாகத்தானே ஏகாந்த நிஷ்டாபரரான பெரியோர்கள் சொன்ன கற்பனை உதாரணவாக்கிய வாய்மைகளினாலே அறிந்து கொண்டு மேலே நடக்கவேண்டிய மதி மந்திர தந்திரத்தினாலே செய்யவேண்டிய சிச்சைகளை அகத்தியம் பண்ணவென்பதாம், செப்பிடுவித்தை - இப்படியாக முன்னாடி அளவையாகச் சொன்ன பிரயோகப் பிரமாணங்களை நுட்பமான புத்திக்கூர்மையினாலே யோசனை பண்ணிக்கொண்டு அப்படியே அதற்கிசைவான அனுபானாதிகளுடனே பிரயோகம் பண்ணப்பட்ட காலத்திலேயும் வயித்தியனானவன் காருட வித்தையாடுகிற பேர்களுடைய கையிலே செப்புப்பந்தை எப்படி அஸ்தலாகவமாகத்தானே அடக்கிக் கொண்டு பிறருக்குத் தெரியப்படுத்தாமல் வித்தை ஆடுகிறது போலே அவிழ்தத்தைத் தொட்டு மேலே தொடாமலும் தானே பிணியாளனுக்குக் காட்டாமற்படிக்கு மேலுக்கு மேலாய் இருந்துகொண்டு அவிழ்தவேகத்தை ஏற்றியும் மேலே ஏற்றாமலும் பக்குவமாக வந்து அந்தந்த தேகத்தினது கூறுகளறிந்து பண்ணவேண்டியபடியே பண்ணக்கடவது.

பண்டிதோத்தமருக்கு இயற்கை ஆண்மையான குணமென்றறிவது, தின மேழேழ் - இனிமே லிப்படி அவிழ்தத்தைப் பிரமாணப்படியே பிரயோகம் பண்ணப்பட்ட பண்டிதன் முன்னிலைப்பட்டு நோயாளியானவன் புசிக்க வேண்டியதான நாளெத்தனையென்றால் விவரமாகப்பிரித்துப் பிரித்துப் பார்க்குமிடத்திலே, ஏழும் - பதினாலும்,

இருபத்தொன்றும், இருபத்தெட்டுமாகப்பகுத்ததனாலே இப்படியே முதல் முதல் உத்தமமான நாளேழென்றும், இரண்டாவது மத்திமமானநாள் பதினாலென்றும், மூன்றாவது அதமமான நாளிருபத்தொன்றென்றும், நான்காவது அதமாதமமான நாள் இருபத்தெட்டென்றும், விகிதப்பண்பேற்படத் தக்கதாய் எடுத்துரைத்தபடியே அறிந்து கொண்டு அப்படிக்கே இசைவாகச் செய்யவுமாமென்று.

செப்பிடு - பிணியாளனுக்கு உண்மைப்படியே நிச்சயமாகத் துணிந்து சொல்லுவாயாகவும், நெய் - மேலே இந்தப் பிரகாரமாகப் பண்டிதனாலே விதிக்கப்பட்டிருப்பதான அவிழ்தப் பிரமாணப் பிரத்தியட்சமான அளவையுடனே எல்லை ஏற்பாடான நாளின்படி மெய்மையான அவிழ்தத்தைப் புசிக்கிறகாலத்திலே நற்பத்தியமாகக் கூட்டிக்கொள்ள வேண்டியதான பண்டங்களிலே முதல் பொருளான நெய்யும்பின்னேயும் நெய்க்கு நிகரான பண்டங்களாகிய வாதுமைக் கொட்டை, பூசனிவிரை, பலாக்கொட்டை, கிட்டிக்கிழங்கு, உருளைக்கிழங்கு இவைகளும் பின்னுமிப்படியான நெய்ப்பண்டங்களும், அக்காரம் - சர்க்கரை, சர்க்கரைப்பாகு, கற்கண்டு பின்னேயுஞ் சர்க்கரைக்கு நிகரான தீவதிராட்சிப்பழமும் இனிப்பான தேனும் வள்ளிக்கிழங்கும் பலாப்பழமும், பால் - பசுவினது நல்ல பாலும், பாலுக்கு நிகரான பாயசம், பாற்கிண்டல், பாற் குழம்பு, பாற்பண்ணியம், பால்வடை, பச்சைமா, பச்சரிசி, பயற்றங்கஞ்சி முதலானவை, ஐ - வெண்ணெய்யும் அது முதலான பண்ணியக்குழம்பு, சர்க்கரைக் குறியம், பொரிக்குழைப் பிண்டி முதலானவை, அபூபம்பலா - பின்னும் வெகுவிதமான சிற்றுண்டியி லட்டு கமோ தமந்தகம், பிட்டுழைமா சுகி யனப்பம் இவைகளான பலகாரங்களிலே தோசை இட்டலிகளென்னும் புளித்தலும் திலசம்பந்தமுமில்லாத பலகாரமும், வாழை - வாழைப் பழம், அத்திப்பழம்.

இப்பேர்பட்ட கனிவர்க்கங்களும் பலப்பல விதமான பிண்டிவடை, பொங்கல், உக்களி போசனங்களெல்லா மெப்போதும் புசிக்கலாம், அக்காரம் - அந்த அவிழ்தத்தினாலே உண்டாகிற வேகமான காங்கைக் கடூரமானது நோயினது வர்க்கங்களெல்லாம் பற்றற்றுப் போக்கச் சுட்டு மேலுமீறியெரிந்து வருகிற போது அந்தத் தீயினுடைய வேக

வெப்பமடங்கிப் போய்விடத்தக்கதா யாகாரமான தண்ணீர் போலான பண்டங்களைப் போட்டால் வேகமடங்கி அதிகமான இரசவர்க்கம் உடலிலே பற்றிப் பாய்ந்து மயிர்க்காலுக்கு மயிர்க்கா லிரத்த புஷ்டி யுண்டாக வல்லைமையைக்கொடுக்கும். பின்னுமேலே எப்படியென்றால், பாலையுளை - யௌவனவாலிப சம்பந்தமான வண்மையையுந் திண்மையினது பராக்கிரமத்தையும் பெற்று நீடூழிகாலம் மேன்மையுடனே இருப்பாய். மீளவும், ஆம் - ஆனபடியினாலே உனக்கு மனதிலே உன்னினதெல்லாம் வரும் மகிமையும் உனக்குக் கிடைக்கும்.

## தாம்பிர பற்பத்தினால் தீரும் பிணியும் துணை மருந்தும்

*வல்லைக்குக் கங்கை வளிக்கறறீக் காச்சியம்பால்*
*வல்லைக்குக் கங்கை வலிக்கைபுலம் - வல்லைக்குத்*
*தண்டரிக்கு நாகவல்லி சாய்க்கிக்கு நோய்க்கமரி*
*தண்டரிக்குத் தேனலிக்குத் தார்.* 131

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா வென்னு தலிற்றோ வெனின் மேலே நிருத்த முறையானே செய்துவைத்த பொருளான தாம்பிர பற்பத்திற்குப் பிரயோகானுபான விதங்களும் அப்படிக்கு மெய்யாகச் செய்யப்பட்டதான பிரயோகானுபானத்தினாலே போகப்பட்டதான வியாதிகளையும் விவரமாகக் கூறுதனுதலிற்று. எப்படியென்றால், வரலாறு.

வல்லைக்குக்கங்கை - வியாதிகளிலே முதன்மையான அரசன் அமைச்சன் சேனாதிபதி யென்று சிறப்பித்துச் சொல்லப்பட்ட மூன்றிலே வாதமென்றும் பித்தமென்றும் சேட்பமென்றும் பெரிதான பேர்பெற்ற அதிகாரமும் வன்மையும் பெற்றிருக்கப்பட்டதான பலம் பொருந்திய சேட்ப வியாதிக்கு நல்ல தண்ணீரில் குளிர்ச்சியை விடாத பருவமான சுத்தசலத்திலே அதற்கு வேண்டிய மாத்திரமும் பிரமாணத்துடனே அனுபானஞ் செய்ய வேண்டிய தென்றும், வளிக்கு - சுத்தவாத மென்கிற இராசவியாதிக்கு மேற்படி அவிழ்தப் பிரயோகத்திற்கு வேண்டிய மாத்திரம்,

அறல் - வெந்நீரிலே வேண்டியமாத்திரம் பிரமாணத்துடனே அனுபானஞ் செய்ய வேண்டியதென்றும்.

தீக்கு - பித்தமாகிய மந்திரிவியாதிக்குப் பிரயோகமான அனுபானமாவது, ஆச்சியம் - நெய்யில் வேண்டிய மாத்திரம் பிரயோகானுபானஞ் செய்யவேண்டிய தென்றும், பால்வல்லைக்கு - பசுவின் பாலிலே செய்யவேண்டிய பிரயோக அளவுப்பிரமாணம் அனுபானஞ் செய்ய வேண்டியது பல்லையென்ற பொல்லாத வியாதிக்கு, கங்கை வலிக்கு - தலைவலியாகிய தலைநோவுக்கும், கைவலி - கையிலே உபத்திரவஞ் செய்யப்பட்டதான கைநோவுக்கும், ஐபுலம் - வெண்ணெயிலே அனுபானஞ் செய்ய வேண்டியதென்றும் சர்க்கரையிலே அனுபானஞ் செய்ய வேண்டியதென்றும், வல்லைக்கு - முலைச்சிலந்தி, தனக்கொப்புளம், கொங்கைப்பரு, நகில்கட்டி இவைகளுக்கெல்லாம், தண்டு - துளசிச் சாற்றிலேயே அனுபானம் பண்ண வேண்டியதென்றும், அரிக்கு - விடாமலெப்பொழுதும் நெருப்பைப் போல காயப்பட்ட சுரக்காய்ச்சலுக்கும், பிரமியக்காய்ச்சலுக்கும் நளிர்க்காய்ச்சலுக்கும், பித்தப் பிரமியக்காய்ச்சலுக்கும் இவை முதலான மற்றசுரங்களுக்கெல்லாம், நாகவல்லி - வெற்றிலைச்சாற்றிலே வேண்டிய மாத்திரம் அவிழ்தப் பிரமாணம் அளவைக்குத்தக்கின மாத்திரம் பிரயோகானுபானம் பண்ண வேண்டியதென்றும், சாய்க்கு - தேகத்தைவளைத்துக்கொண்டு மெத்த மெத்ததானே நிற்கவும் படுக்கவுமிருக்கவும் ஒட்டாமலெந்நேரமும் வாதிக்கப்பட்டதான நாடோறும் விதனத்திலே தள்ளுவதான நடுக்குவாதத்திற்கு, இக்கு - கருப்பஞ்சாற்றிலே வேண்டின மாத்திரம் பிரமாணப் பிரயோகத் தனுபானஞ் செய்யவேண்டியதென்றும், நோய்க்கு - மெய்யினது சம்பந்தப்பட்டதான கீல்களிலே நரம்பானது சுருட்டிக்கொண்டு ஒருக்காலே எப்போதும் வலிப்பாக வலித்து மேலும் மேனியிலே வேர்வையானது ஒக்கத்தக்கதாய்க் கடுக்கப்பட்ட இறப்பாகிற பித்தவாத சயித்திய விகடோபத்திரவ மென்னும் ஒரு பொல்லாத நோய்க்கும் பின்னும் அதற்கடுத்த வியாதிகளான வாதக்கிரந்தி வலிக்கும் பித்தமேக வாய்வுக்கும் பொல்லாத கபவாதனமென்கிற சுத்தமேகவுட்டிணத்திற்கும்

பின்னும், பேதாபேதமான சுத்த வாதானிலமென்கிற தாபசுரப்பிணிகளுக்கும் இவைகளுக்கெல்லாம், அமரி - கிரிகையினாலும் பேரினாலும் உவமானமுண்டாகிய கற்றாழை மடலினது சோற்றிலே அனுபானம் பண்ண வேண்டிய பிரமாணப்படியே பிரயோகம் பண்ணவேண்டியதென்றும், தண்டரிக்கு - அடிக்கடி அறியப்பட்ட மெய்க்குறுதியாகிய புத்தியை விட்டு மறதியை பண்ணப்பட்டதான உன்மத்த சேட்பத்திற்கும் உன் மத்த வாய்வுக்கும் உன்மத்த பைசாச சுரத்திற்கும் உன்மத்த மேகானலத்திற்கும் மூர்ச்சை, சன்னி முதலான துன்மரண சங்கமமான பலப்பல பிணிகளுக்கெல்லாம்.

தேன் - தேனிலே பண்ணவேண்டிய பிரமாணப் பிரயோகப்படிக்கு அனுபானம் பண்ணவேண்டியதென்றும், நலிக்குத்தார் - இப்படி இது வரைக்கும் சொல்லிக் கொண்டுவந்தது மல்லாமலின்னமும் பலப்பல பேதா பேதங்களாகிய நாமத்தை சாத்திய ரோகங்க ளென்கிற தான காக்காய் வலியென்றும் மாதங்கானலவலியென்றும் பாரிடாத்தரி வலியென்றும் பெருவாரிக்காய்ச்சற் றொந்தாதி வலியென்றும் பூத வேதாள சன்னிவலியென்றும் பிராந்தியாகிறுதி வலியென்றும் அப்படியான சகலசம்பந்தமான வியாதிகளாகிய சமஸ்தமான பிணிகளுக்கும் அனுகரணமான பிணிகளென்கிற வாதாபி வல்வியாதி யென்றும் மகா மூதண்டானு சாரமென்றும் மேனோக்கான லானுகாரமென்றும் பித்தசுர விக்கலென்றும் வாத நாராயணார்தசுவாச மென்றும் முயல் கனபொருமலென்றும் பாண்டுவையானலவிக்கலென்றும் ஈளையிருமல் அனலப்பிரமையென்றும் வரகுணரோகம், அனல மூலப் பொருமலென்றும் நீருறு திணரலென்றும் மகாசுவே தானல மென்றும் பருவரலாதி உப்புசமென்றும் பயித்தியக் கயப்பருவரோ பத்திரவ மென்னும் பித்த சேட்ப வன்மியமென்னும் இப்படி வெகு விதமான நோயாளனுக்கும் பிரயோகாவிழ்தப் பிரமாணப்படியே வேண்டியமாத்திரம் பக்குவமாகத்தானே நீலோற்பலபுட்பத்தினது சாற்றிலேயாவது தாமரைப் பூவினது சாற்றிலேயாவது அல்லிப்பூவினது சாற்றிலேயாவது நெய்தற்

பூவினது சாற்றிலேயாவது கொட்டிப் பூவினது சாற்றிலேயாவது அமைப்பான பிரமாணப் பிரகாரமே அனுபானம் பண்ண வேண்டிய தென்றும் இப்படியாகத் தப்பாமற்படிக்கு அவிழ்தானுபானப் பிரமாணப் பிரயோகப்படியே பண்டிதம் பண்ணவே எப்பேர்ப்பட்ட வியாதிகளும் விட்டுபோமென்பது தந்து நிச்சய மென்கிற சாத்திரத் துணிவென்பதையே மதிப்பாக உன்னிப் பெரியோர்களுக்கும் பரவிப் பணயத்தகுமான உத்தமரான திருமூலநாயனாரும்

*"வல்லை முதலாய் வருமல வாதைக்கு*
*நல்லை வடுப்பொடி நாட்டுமனுபான*
*மொல்லை யுதக முரமாகுமாதொடு*
*குல்லையிறுதி கொடுப்பதாயுண்மையே"*

இப்படியே கர்மகாண்ட மென்கிற ஆயிரத்திலே இவ்வாறு வற்புறுத்திக்கூறியது மன்றியிலே ஏனை வாகடாதிகளிலே சித்தாதி மகாத்துமாக்களு மிப்படியே உரைத்தார்கள். அவற்றுள் சட்டை முனியார் ஐந்நூற்றுத்திரட்டிலே

*"சோதியென்ற தாம்பிரமே சுண்ண மப்பா*
*சொன்னார்கள் வெகுகோடி சித்த ரெல்லாம்*
*பாதியென்ற வல்லைமகோ தரமா நோய்கள்*
*பறக்குமடா வனுபானுங் கங்கை யாலே*
*நீதியென்ற வாகடநூ லறிந்து பாரு*
*நிலையாத நீரளவாய் நெறிமா யாதே*
*வாதியென்ற பேரறிவார் அவிழ்தவண்மை*
*வயித்தியருக் காதிமுதல் வாதந் தானே"*

பின்னும் அவிழ்த வண்மையைத்தானே சிலாக்கிக்கப்பட்டதான அகத்தியர் கரிசலிலே இப்படியென்று :-

*"தாம்பிரப் பொடி*
*யாம்பிரப் படி*
*தன்மயத்தின்*
*னன்மயச்*
*சல்லியங்க - ளல்லியந்த*
*வல்லைமுன்பு மாயுமே*
*தப்பாது கரிசின்முறை*
*யிப்பாரி லாமே"*

இப்படியாகவும் பண்ணினார்கள் இந்த உதாரணங்களை அறிந்து செய்யவேண்டியபடியே செய்க.

## தாம்பிர பற்பத்திற்கு விலக்கல்

*சம்பீர மாமா துளைகிச் சிலிநரந்தை*
*சம்பீர மாமா தமர்த்தைகாச் - சம்பீரம்*
*வல்லிகளா காபித்த மாழையளை மோர்கார*
*வல்லிக ளாகா வடு.* *132*

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா வென்னு தலிற்றோவெனின் மேலை திருத்தி திருத்தன்முறைக்கிரமப்படிக்கு இசைந்திருக்கப்பட்டதான தாம்பிரப்பற்பத்தை புசிக்கிற காலத்திலே அந்த மருந்து தேகத்திலே இமிடத்தக்கதா யுண்ணப்பட்ட பண்டங்களி லாகா தென்று தள்ளவேண்டிய விதிக்கெதிர் மறையான விலக்கைத் தொகுத்தும் வகுத்தும் விரித்தும் கூறுத னுதலிற்று. எப்படி யென்றால், வரலாறு :

சம்பீரம் - இப்போது நன்மைகளிலேயும் அதிக நன்மை யுண்டானதாகிப் பிணிப்பகையென்னும் பேரான சேனாசமுத்திரத்தைப் போலாண்மைபடைத்த தாம்பிரபற்பத்தை உண்டு மறுபடி அந்த

நாளெவ்வளவு நாளோ அவ்வளவு நாளாகிற பரியந்தரமான வரைக்கும் மாத்திரந் தள்ள வேண்டிய பண்டங்களிலே எலுமிச்சம் பழரசமும், ஊறுகாயும், அதற்கினமான பெருங்கீரைக்காயும், கடுக்காயும் ஆகிய இவைகளாகாதென்றும், மா - மாம்பழமும், மாங்காயும், மாங்காயூறுகாயும், மாங்காய்க்கறியும், மாவடுவும், மாங்காய் வற்றலாணமும், அதற்கினமான கொளுஞ்சிக்காயும் புளியங்காயும், புளிக்குழம்பும், காட்டு மாங்காயூறுகாய் முதலானதும், மறுகங்காயும், தும்பிப் பழமுங்காயும் ஆகிய இவைகளெல்லா மாகாதென்றும், மாதுளை - மாதுளம்பழமுங் கிடாரம் பழமுங் கொடி மாதுளம்பழமும், முந்திரிகைப்பழமும், கள்ளி முளையானும் ஆகிய இவைகளெல்லாம் ஆகாதென்றும் கிச்சிலி - கிச்சிலிப்பழமுங் கிச்சிலிக்காயூறுகாயும் அதற்கினமான பச்சைத் தீவதிராட்சிப்பழமும் ஆகிய இவைகளெல்லாம் ஆகாதென்றும்.

நரந்தை - நாரத்தம்பழமும் நாரத்தங்காயூறுகாயு மதற்கினமான தேத்தாங்காயூறுகாயும் பாவட்டங்காயூறுகாயும் ஆகிய இவைகளெல்லா மாகாதென்றும், சம்பு - கருநாவற்பழமும் வெண்ணாவற்பழமும் குழிநாவற்பழமும் ஆகிய இவைகளெல்லாமாகாதென்றும் ஈரம் - வெள்ளரிப்பழமும், வெள்ளரிப் பிஞ்சும். வெள்ளரிக்காயாணமும், பிச்சம்பழமும், பூசனிக்காயும், பூசனிப்பழமும் பெரும்பூசனிக்காயாணமும் கறியும் வடகமும், புடலங்காயும், சுரைக்காயும், நுரைப்பீர்க்கங்காயும். கற்றாழைச் சோற்று மடலும், வெங்காயத்தாளும் பூவும் ஆகிய இவைகளெல்லா மாகாதென்றும், ஆ - நெல்லிப்பழமும் நெல்லிக்காயூறுகாயும் நெல்லிப்பருப்பும், வற்றலும், துவையலும், அதற்கினமான அரிநெல்லிப்பழமும், அன்னாசிப்பழமும் ஆகிய இவைளெல்லா மாகாதென்றும், மா - பனங்கள்ளும், பனம்பழமும் பனைநுங்கும், பனஞ்சக்கையும், அதற்கினமான தென்னைமரத்துக் கள்ளும், ஈச்சமரத்துக் கள்ளும் சாராயமும். அபினியும், கஞ்சாவும், புகையிலையும், புளித்த காடித்தண்ணீரும் அதற்கினமான கழுநீர்க்குழம்பும் ஆகிய இவைகளெல்லா மாகாதென்றும், தமர்த்தை - தமரத்தங்காயும், தமரத்தம் பழமும் அதற்கினமான வில்வப்பழமும் பிரம்பின் பழமும், நறுவிளிப்பழமும், வண்ணக் கம்பிளிப்பழமும் ஆகிய

இவைகளெல்லா மாகாதென்றும், காச்சம் - காச்சொறிக்கீரையும், அதற்கினமான சுக்காங்கீரையும், தராக்கீரையும் வசளைக் கீரையும், அகத்திக்கீரையும், பசறிக்கீரையும், முன்னைக்கீரையும் ஆகிய இவைகளெல்லா மாகாதென்றும், பீரம் - பீர்க்கங்காயும், அதற்கினமான தண்டுப்பீர்க்கங்காயும், வெள்ளைக்கக்கரிக்காயும், பெருங்கீரைத்தண்டும், வெந்தயக் குழம்புக் கீரையும், முள்ளங்கிக் கிழங்கும் ஆகிய இவைகளெல்லா மாகாதென்றும், வல்லி - இலந்தைப்பழமும், இலந்தைக்காயும், அதற்கினமான சூரைப் பழமும், மணத்தக்காளிப்பழமும் புல்லாஞ்சிப்பழமும், பதளிக்கைப் பழமும், வீரைப்பழமும் ஆகிய இவைகளெல்லா மாகாதென்றும், களா - பெருங்கிளாவிலே பேதமான கிருட்டினாங்கப்பழமும், இரும்பிலிப்பழமும், கிளாப்பழமும், கிளாக்காயூறுகாயும் அழிஞ்சிற்பழமும், வேப்பம் பழமும் ஆகிய இவைகளெல்லா மாகாதென்றும், காபித்தம் - விளாம் பழமும், விளாங்காய்க்கறியும், பச்சடியும், ஆணமும் அதற்கினமான கோவைப்பழமும், புளியாரைக் கீரையும், பொன்னாங்காணிக்கீரையும் கற்பூரவள்ளியிலையும் இவைகளெல்லா மாகாதென்றும், மாழை - கஞ்சி சுற்றின சோறும்: கஞ்சித்தண்ணீரும், புளியோதனமும் நீர்மோரும் ஆகிய இவைகளெல்லா மாகாதென்றும்.

அளை - புளித்தயிர் இளந்தோய்த்த தயிரென்கிற தயிர்களும் பின்னும் அதற்கினமான தயிர்க்கட்டிக் கறியுந் ததியோதனமுந் தயிர்ப்பச்சடியு மிவைக ளாகாதென்றும், மோர் - மோர்களிலே பேதமான குழம்புமோர், நீர்மோர்க் குழம்பு, ததியோதனக்களி இவைகளும் அதற்கினமான வெம்பாகுட்டணி கேப்பை, புல்லரிசிக் கூழ் ஆகிய இவைகளெல்லா மாகாதென்றும் காரவல்லி - பாகல்காய்க்கறி, பாகல் காய் வற்றல், பாகல் கீரை அதற்கினமான காட்டுப் பாகல்காய் கறிக்குழம்பு, சுண்டைக்காயூறுகாய், சுண்டைக்காய் வற்றல், நுணாக்காயூறுகாய், நுணாப்பழம், பச்சை மிளகாய், தூதுவிளங்காயூறுகாய், வற்றல் ஆகியவைகளெல்லா மாகாதென்றும், கள் - அத்திக்காயூறுகாய், வற்றல், கறி, பழம் ஆகிய இவைகளும் அதற்கினமான ஆலங்காய், அரசின் காய், கல்லாலின் காய், இச்சிக்காய், சூழிக்காய், அல்லிக்கா யிவை

களெல்லா மாகாதென்றும், ஆகு - மொச்சைக்காய், பயற்றங்காய், காராமணிக்காய், துவரங்காய், பெரும் பயற்றங்காய், உளுந்தினது காய், சோளப் பொரி, சோளக்களி, சோளக் கூழ், தினைமாவுடன் கூடிய பிண்டி, வண்டைகள், வள்ளிக்கிழங்கு முதலானவையும், மக்காச்சோளமென்றுந் துலுக்கச் சோளமென்றும் பேர்களில் மாத்திரம் பேதித்துப் பேசப்பட்ட முத்துச் சோளம் ஆகிய இவைகளெல்லா மாகாதென்றும் வகைப்படியே வயித்திய சாத்திரப் பண்டிதர்கள் விளம்புவார்கள், ஆதகாரிவடு - தாம்பிரபற்பத்தைப் புசித்து மறு பத்தியமாகிற வரைக்குங் கூட்ட வொண்ணாது. மத்தியிலே கூட்டினால் அவிழ்த பலத்தை இளமையிலே தானே கெடுத்துப் போட்டுப் பின்னுக்குப் பலஞ் செய்யமாட்டாது.

பிற்பாடு மருந்து பலப்பட்டவுடனேயானால் ஒருக்காலு மாறாதநெருப்பைப் போலே தீபன மென்கிற நெருப்பானது வடவாமுகாக் கினியைப் போலேயும் பிரமப் பிரளையத்திலே மேலிட்டிவ்வுலகத்தை யெல்லா மெரிக்கவந்த பிரளைய காலாக்கினியைப் போலவும் எப்போதும் மாறாதிருக்கும். அந்தக்காலத்திலே ஒரு நாளைக்குப் பதினாறு திறமாகப் போசனத்தைப் பஞ்சகச்சாய பாயசத்துடனே நல்ல மெல்லிய வெண்சாலியன்னமும் பொன்மை நிறத்தை யுடைத்தான பருப்பும் புத்துருக்கலான வெண்ணெயுருக்கின வாசனையுடைய நறுநெய்யும் பாளிதத்துடனே இனிப்பதான சர்க்கரையும், வாழைப்பழம், பலாப்பழம், மாம்பழமென்பதான முக்கனியும் அறுசுவை ஆச்சியப் பொரிக்கறியும் பச்சடியும், பாளித்த கறியும், பண்ணியமும், அபூபமும், வடையும் இலட்டுகமும், புட்டும் பூரியும், உக்களியும், பாயசமும், பானகமும், பாற்குழம்பும், வெண்மையான கட்டித்தயிரும் புசிக்கவே அப்போதைக்கப்போது சீரணிக்கப்பட்டு உதிரவர்க்கமாகி யாக்கை யினிடத்திலிமிடி அதிகப்பலத்தை நித்தியமுங் கொடுக்குமாதலான் மேலே அப்படிப்பட்ட நல்ல பண்டங்கள் பொல்லாத பண்டங்கள் எதைப் புசித்தாலும் நன்றாய்க் காய்ந்து சிவந்திருக்கப்பட்ட இரும்பிலே தண்ணீர் பட்டவுடனே எப்படி வற்றிப் போய்விடுமோ அப்படிப் போய்விடும். ஆனபடியினாலே இந்தத் திவ்வியாஸ்திரத்திற்கு நிகரான அவிழ்தத்தைப் புசித்து மகாசாக்கிரதையாகத்தானே பத்திரமாயிருந்து பிற்பாடு அறிய

வேண்டியதை யெல்லா மறியலா மென்றவாறு இதற்குமுன்னோராகிய திருவள்ளுவநாயனாரும் பாண்டித லட்சணக்கிரமமாகத் திருவுளம் பற்றினார், எப்படி யென்றால்

*"மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய*
*தற்றது போற்றி யுணின்"*

என்றாராகையால் பத்தியக் கடைப்பிடி நன்மை யென்ற வாற்றலே மிகுந்த தென்றவாறு.

## தாம்பிர பற்பத்திற்கு விதிமகிமை

*இப்படிக் குணாருணியை யின்முன் முதுமைதள்ளி*
*இப்படிக் குணாதிசெய மெய்திமெய் - இப்படிக்கு*
*வாலிபத்தை மேம்பாட்டை வாச்சியத்தை நீளுயிரை*
*வாலிபத்தை யெய்திமகிழ் வார்.* 133

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பாவென்னு தலிற்றோ வெனின், மேற்கூறிய திருத்தன் மார்க்கமான தாம்பிரத்தினை யுண்டு சாதித்து அதனுடைய குணாதிசய நன்மையை அறிந்த பேர்கள் எவர்களோ அவர்களுக்குண்டாக்கப்பட்ட நித்தியாரோக்கிய திடகாத்திர ஆரோக்கிய சவுக்கியத்தை எடுத்து உரித்தாகத்தானே அநேக விதாரதம் பகர்வத்தை யெல்லாம் ஒரு முகத்தோற்றம் படியத்தக்கதாகக் கூறுதனுதலிற்று. எப்படியெனில், வரலாறு :

இப்படிக்கு - இந்தப் பிரகாரமா மென்று விதியினாலே விதிக்கப்பட்டுப் பஞ்சாசட்கோடி வித்தாரமான பரப்போடுங்கூடிய பூமியின் கண்ணிலே வாழப்பட்ட சர்வ பிராணிகளிலேயும் மீசுரமான மானிட சாதிக்கெல்லாம் புசிக்கத்தகுமான தகுதியைப் படைத்திருப்பதான நரேத்திர ரென்கிற அரசருக்கெல்லாம், உணா - புசிக்கும் அமுர்தத்தை நிகரான திவ்வியாவிடத சஞ்சீவிகரம் பாண்டி தேந்திர மகா மகத்துவ

மென்கிற, ருணியை - தாம்பிரத்திற்குப் பரியாய அனுகரணப்பெயரான சீருணி யென்கிற பெயருக்கு முதலெழுத்து எச்சமென்றுந் தலைக்குறை விகாரமாகிற செம்பினது களிம்பாகிய மலத்தினைப் போக்கிச் சுத்தி செய்த பிற்பாடு பண்ண வேண்டிய கிரமப்பிரகாரந்தானே பற்பத்தைச் செய்து அந்தப் பற்பத்தைமேலே கூறுவதான பிரயோகப் பிரமாணப் பங்கீட்டின் வழியாக அனுபான விதியின்படியே, இன்முன் - புசிக்கவேண்டிய கிரமப்படியே புசித்து இனிதான பத்தியத்தினது அங்கமான கடன் முறைகளை எல்லாஞ் செய்து கடைப்பிடி நித்திய விதி பண்ணுவோமென்று மனத்திலே எண்ணுகிறதற்கு முன்னமே தானே இந்த வாக்கியத்திற்கு மேற்படியான முதலெழுத்து எச்சமாகிக் கடையெழுத்து வருமொழிச் சந்தியினாலே விகாரப்பட்டது எப்படியென்றால் அயில என்று சொல்லப்பட்டதான உணவின் சாதிவினை முதற் பெயர்க்கு முதலெழுத்தாகிய அகாரங் குறைந்து இலயென்கிற பகுதியெச்சத்தின் விகுதி லகர வொற்று வருமொழி முன்னென்கிற மகரத்தினால் னகர வொற்றாகியின் என்னென்று சொல்லுவதான இலக்கணம் பெற்றவாறு காண்க.

முன் - முன்னமே அதிசீக்கிரமாகத்தானே இந்தத் தாம்பிரபற்பத்தினது குணாதிசய மகிமையைத் தானே கேதாவிப்பட்டபடியினாலே பயந்து சகல வண்மைப்பிணிகளும் வெகு தூரம் நிற்கமாட்டாமல் ஓடிப்பறந்து போய்விடும். அப்படியோடிப் பறந்து போய்விடவே முதுமை தள்ளி உடனே சரீரமானது முன்னாலே பிணிவெப்பக் கோடையினாலே அடிபட்டுத் தளர்ச்சியை மேற்கொண்டது. இந்த அவிழ்த குணத்தினாலே அறுபது சென்ற வயதான போதைக்கும் பதினாறு வயதுள்ள பாலிய யௌவன கௌமாரிய மாகத்தானே வெளுத்த நரைமயிர்களெல்லாம் கறுப்பாகி வெங்காயத்தோலைப் போலே திரைந்ததினாலே அதிகமான தளர்ச்சியை அடைந்த தேகமானது வச்சிரக்கம்பியைப் போலே இரத்த மாமிசந் துன்னி இறுகி அழுத்தமாய்ப் பலப்பட்டு நரம்புக ளெல்லாம் சந்து பேதங்களிலே பிரிவாகி எலும்பினது சந்துகளெல்லாம் இரத்தப் பசுமையளாவித் தாதுவுமிகுதியான நித்திய விர்த்தியைத் தானே உண்டாகிப் பின்னும் முன்னாலே அதிக

வெப்பத்தினாலே பீசங்கள் மிகுத்து அதோமுகப்பட்டதனாலே கோசமானது சிறுத்திருந்து உலகத்திலே இருக்கப்பட்டபேர்களிலே ஞானித்துவமானபேர்களிலொருத்தன் ஒரு காலத்திலே சிறுத்துப் பின்னொரு காலத்திலே பருப்பது போலவுங் கடன் வாங்கிக் கொண்டவன் கடன் கொடுப்பது போலவும் இருவினை மாறுபாடுகளைப் போலவும் மாறி மாறிப் பீசஞ் சிறுத்துக் கோசம் பருத்து மற்ற உறுப்பும் விளங்கி இப்படியாகத்தானே வார்த்திப மென்கிற முதுமைதள்ளியிலக்கணப் பழுதுகளை யெல்லா மொருக்காலு மில்லாமற்படியே ஓடிப் போய்விடத் தக்கதாக ஓட்டிவிட்டு உண்மைக்கு உத்தாரமாக நீக்கிடவும்.

இ - இனிதாகி ஒருவராலே நிமிக்கக்கூடாத பண்பையுடைத்தான மகாமகத்துவமும் அலங்காரமும் படைத்திருக்கப்பட்டதான படிக் குணாதிசயம் உருவமாகிய ரூபத்தினது உருப்படி விளக்கமானது மேலிட்டு அதிகக் காந்தி ஒண்மை விளங்கத் தக்கதான நல்ல லட்சண புஞ்சமும் வாசக தாட்டியும் விபூரண உல்லாசமும் மதவிசும்பக்குவ மிருதுவசன நயப்பும் நாலுவகை உபாய மாதுரிய இங்கிதவொய்யாரமும் மன்னரவை மகிழவசனிக்கப்பட்ட வாக்கும் பரிமளப் பிரக்கியாதியும் மாற்றலரும் வந்து அடி பரவி நட்பாக்கிக் கொள்ளத் தக்கதாகக் கோரப்பட்ட நண்பாண்மையுபாய தந்திரமும் பொன்மலையைப் போலே தீரத்துவ வல்லாண்மை ஆதிக்கிய சம்பிரமவிற்பன்னமும் உபய பாண்டி தோத்தம மேம்பாட்டினது திறமையும் வசனசத்தி பாஷரிச் சந்திரத்துவமாகிய உத்தமோத்தமமும் பாசயினிய பயங்கரோற்பவ கண்ணிய பரக்கிரமும் இன்னமு மிப்படியாகத்தானே எடுத்தோதுவதான நவரச வரோதயன் என்று எவரும் ஆக்சரியத்தினின்றும் பிந்தாச்சரியப்பட்டு உவமிக்கத் தக்கதாகிய சர்வாபீஷ்ட நற்குண சிலாக்கியங்க ளெம்மாத்திரமோ அம்மாத்திரமும் வேறே மேலொரு குந்தக மில்லாமலப்படி ராசீக மென்றுந் தெய்வீகமென்றும் பகுத்துரைக்கப்பட்ட உபயமார்க்காரதமும், எய்தி - சகலபுவனகர்த்தத்துமெல்லாம் இறப்பு எதிர்வு நிகழ்வென்னும் முக்காலத்திற்கும் வேற்றுமையில்லாம லொற்றுமையாகத் தானே அமைத்தபடி உண்டு உண்மை யெண்ணத்திற்கும் நிச்சயப் பொருண்மையான பரமசிவனுடைய திருவுளப் பிரசாதானுக்

கிரகத்தினாலே அருளிய வரப்பிரசாதம் பெற்றது போலே படைத்த பாக்கியமாகத்தான் கிடைக்கப் பெற்று மெய் யிப்படிக்குத் தேகத்திலே முன்னாலே வெகுகாலமே பழகிப் பழம்பட்டிருப்பதான வண்மைபொருந்திய பழவினைப் பந்தமாகிய சஞ்சிதப் பிணிக்கூட்டங்களெல்லாம் மொருக்காலே கெட்டு முறிந்ததனாலே வருகிற தேகாநித்தியமென்கிற பொல்லாப்பையெல்லாம் போக்கி யந்தச் சேடத்தினால் வராநின்ற தொடர்ச்சி வினைகளையும் போக்கடித்து. வாலிபத்தை - மேலேயென்னென்ன நன்மைகளை யெல்லாம் கொடுக்குமென்றால் வண்மை விளங்கிப் பராக்கிரமத்தைத் தருவதான யெளவன நல்லவயது மேன்மையையும் மேட்டிமையும், வலிமையையும் மேம்பாட்டையும் வரிசைக்கிரமத்திலே ஆதிக்கிய முண்டான அஷ்டாயுசுவரிய சம்பத்துக்கிடமான தேவேந்திர போக பாக்கியசம்பத்துக்களும். வாச்சியத்தை - அறுபத்துநான்கு கலைகியான நன்மைகளென்கிற வசிய, மேகன, ஸ்தம்பன, உச்சாடன, பேதன, ஆக்ரூடண, வித்துவேட்சண, மாரணமென்று சொல்லப்பட்ட ஒன்றிலே எட்டுப் பேதமான ஒரு வசியத்திலே எப்படி யென்றால் தெய்வ வசியமென்றும். பூத வசியமென்றும், பைசாசவசியமென்றும், புருடவசிய மென்றும், பெண் வசியமென்றும், இராச வசியமென்றும், மிருக வசியமென்றும் சர்வ வசியமென்று மிப்படியே மற்ற வேழுடனேபுமாறிப் பெருக்கிப் பார்க்கவே அறுபத்து நான்கு கலைக்கியானங்களும் வரிசைக் கிரமப்படியே வரும்.

அப்பேர்ப்பட்ட வித்தைகளெல்லாங் கை கூடிவாழலாம். பின்னு மப்படியான நன்மைகளும், நீளுயிரை - காலமல்லாத அகாலத்திலே வரப்பட்டதான அவமரணத்தை வராமற்படிக்குத் தள்ளி மேலே விசிதப்பிரகாரமாக வரப்பட்டதான காலமரணத்தையும் நீக்கி யோகாப்பியாச காயகற்பிகளான நிஷ்டாபரராகிய யோகிகளுக் கெப்படி ஆயுசு வளருமோ அப்படிப்போலே வயதை மெத்த மெத்த வளர்த்தி அதனாலே சிரஞ்சீவிப்பட்ட மென்கிற தீர்க்காயுளைக் கொடுக்கப்பட்ட வேர்பற்றி யிருப்பதான தொரு நன்மைக் கேதுகரமான வண்மையையும், வாலிபத்தை - இவைகளுமல்லாமல் வேறு வேறு நற்பவகாத்திர மகிமைப்

பெருமிதமான தேவேந்திர வாகன மென்கிற வெள்ளை யானையைப் போலே திக்க சாதிகாரமும், பலமும், அரசாட்சியும், தெய்வீகமும், பருமிதோத்தமும், பாக சாதாட்சியும் பெற்றிருப்பது போலே சர்வகுணமகிமையையும் எய்தி வாழ்வார் பதைத்தலொழிந்து நன்மைகள் உள்ளதெல்லா மொருக்காலே யடைந்து நீடூழிகாலம் வாழ்வார்களாதலால் வாழ்வார்களென்னும் பட்டத்தை அடைவார்களென்றவாறு. இப்படியே இந்த மார்க்கத்தை யெல்லாம் நன்றாயறிந்து முனிசிலாக்கியரான அகத்திய முனிவரும் பெருநூற்றிரண்டென்னும் கரிசலிலே,

*"வடுவுண்டு கடுவுண்டு*
*வானான திரனா*
*வன்பு பெற்ற*
*முன்பு பெற்ற*
*வாறு போல*
*வீறவே*
*வருமது நிசமே*
*திருமது கையரே"*

இப்படியாகத் தாம்பிரபற்பத்தைப் புசித்தமைந்த பேர்களுடைய மகிமையைத் தானே நித்தியத்துவமாகப் பேசிக் கொண்டாடினார். பின்னும், திருமூல நாயனாரானவர் ஞான காண்டம் ஆயிரத்திலேயும் -

*"செம்பின் பொடியுண்டு தேகமுரமுண்டு*
*செம்பின் வடிவுண்டு செய்தவங்கையுண்டு*
*செம்பின் முடிவெலாந் தெய்வத மாகவேோர்*
*செம்பின் குலந்திகரமாகுமே".*

இவ்வாறு படிவோதிய திருமந்திரத்தினாலேயும் பார்த்துக்கொண்டு பின்னும் இடைக்காட்டுத் தேவர் பாசுரத்திலேயும்

*"சீருணியாட்டிலோர் வெள்ளாட்டுக்குட்டி*
*செம்மறிக்குட்டிக்குஞ் செய்யக் கோனாடே*
*யாருமவர்க்குப்பால் வேண துண்டாகும்*
*அப்பாலெப் பாலு மருந்த வொண்ணாதே"*

இப்படியே தாம்பிர பற்பத்தினை உண்ட பேருடமகிமை யென்றறிவது.

## அயநாக பற்பம் செய்யும் முறை

*அயனாக மேனி யடிகணைகை மேலே*
*அயனாக மேனி யடிசெய் - அயனாகம்*
*பானமது மழைபுல் பாலையர சாதியனு*
*பானமது பத்திய நுட் பம்.* 134

(சொ. பொ.) இத்தலைச் சூத்திரச் செய்யுள் வெண்பா வென்னுதலிற்றோ வெனின் அயத்திலிருந்து உண்டாவதான நாகத்தினது பற்பத்தைப் பண்ணவேண்டிய முறைமையையும் அப்படிப் பண்ணின பற்பத்தைப் புசிக்கிற பிரமாணப் பிரயோகத்தையும் மேலே அதற்கு வேண்டிய அனுபானத்தையும் அப்படிப் புசிப்பதனாலே தீரப்பட்ட பிணிகளையும் பண்ணவேண்டிய பத்தியத்தையும் பிரித்து விவரமாகக் கூறுதனுதலிற்று. எப்படியென்றால், வரலாறு.

அயனாகம் - அயமென்று மேலோர்களாலே சிறப்பித்துச் சொல்லப் பகுதியாயேற்பட்டிருப்பதான இரும்பிலேயிருந்தும் உற்பத்தியான நாகத்தினது மலின மாகிய களங்கத்தைப் போக்கி மேலே அதைப் பற்பம் பண்ண வேணுமென்று பிரயத்தனமான உத்தியோகிக்கிற காலத்திலே எப்படிப்பண்ணவேண்டிய தென்றால் மேலே சொல்லிய இலக்கணப்படித்தானே, மேனி - குப்பைமேனிச் சாறு ஒருபலம் பொருண்மையான பிரதானவஸ்துவையான அயநாகத்தினது சன்னத்துக்கு நாலுபலமென்கிற விகிதப்படிக்கு குப்பைமேனி இலைச்சாறு விட்டு

முன்னேதானே ஏற்படுத்திச்சொல்லியிருப்பதானபடியே முதலிரவாகிய இராத்திரிக்கே ஊறவைத்து மறுநாளுதயந்தொடங்கி அம்மாத்திரமே சாறுவிட்டொருநாளுக்கெல்லா மிடைவிடாமற்படிக் கரைத்து வில்லைதட்டி அப்படித் திரும்ப அன்றைக்கு இராத்திரிக்கு மேற்படி போலே தானேசெய்து இப்படி எட்டு நாளான பிற்பாடு மறுபடி எட்டுநாள் வில்லை தட்டி வெயிலிலே உலர்த்தி அப்பாலே எட்டுமெட்டும் பதினாறு நாள் போக மேலே பதினேழென்கிற நாளுதயத்திலே நாற்பத்து நான்கு விராட்டியிலே புடத்தைப் போட்டு ஒரு நாளாறவைத்து மறு நாள் உதயத்திலே எடுத்துப்பார்க்கக் கால்வாசி என்கிற திட்டத்திலே வெண்மை குணாதிகளெல்லாம் உண்டாம்.

அடி - அப்படிக் கால்வாசி வெண்மையானதை ஒன்றுக்கு மூன்று பங்கான விகிதப்படியே ஒரு பலத்திற்கு மூன்று பலமாகச் செருப்படைச்சாறுவிட்டு மேற்படியே ஏழுநாளைக்கு நியதியைப்போலே பாவனையாகச் செய்து நித்தியப்படி பகலுக்கெல்லாம் மத்தித்தரைத்து இராத்திரிகாலத்துக்கு வில்லைதட்டிவைத்து மறுநாளைக்கு அப்படியே ஏழுநாளான பிற்பாடு பதினைந்தாம் நாள் உதயத்திலே முப்பத்தாறு விராட்டியோடே புடம் போட்டு ஒரு நாள் ஆறவிட்டு மறுநாளைக்கு எடுத்துப் பார்த்தால் அரைவெண்மையாம், கணை - இப்படி அரைவாசி வெண்மையான பொடியை மேலே ஆறுநாள் நித்தியப்படி இடைவிடாமல் மேற்படியாய்த்தானே திப்பிலியிலைச்சாறு விட்டு ஊறவைத்து அம்மாத்திரமே விட்டு ஒரு நாள் எல்லா மிடைவிடாம லரைத் தப்பாலே வில்லை தட்டி இப்படி இராத்திரி காலத்திலே சும்மாய் வைத்து இப்படி ஆறுநாளான பிற்பாடு ஆறுமாறும் பன்னிரண்டு நாளான பிற்பாடு பதிமூன்றாம் நாளுதயத்திலே இருபத்தேழு விராட்டியிலே புடத்தைப் போட்டு ஒருநா ளாறவைத்து மறுநா ளுதயத்திலே எடுத்துப்பார்க்க முக்கால்வாசி வெண்மையாம், கை - அப்படி முக்கால்வாசி வெண்மையான பொடியை ஒருபலம் பொடிக்கு ஒரு பலம் கரிசலாங்கண்ணி இலைச்சாறு விட்டு ஊறவைத்து அப்படி அம்மாத்திரமே விட்டரைத்து இராத்திரி காலத்திற்கு மாத்திரம் வில்லைதட்டி வைத்து மறுநாளைக்கு மேற்படியே அரைத்து வில்லைதட்டி வைத்திப்படியே ஐந்து நாளான பிற்பாடு மேலே ஐந்து

நாள் வெயிலிலே வைத்து மேலே உலர்த்தி மேலே ஐந்துமைந்தும் பத்து நாளான பிற்பாடு பதினோராம் நாள் காலமே பதினாறு விராட்டியிலே புடத்தையிட்டு ஒரு நாளாறவிட்டு மறுநாளான பதின்மூன்றாம் நாளுதயத்திலே எடுத்துப்பார்க்கவே முழுமையும் வெண்மையா யதற்கேற்ற இலக்கண நன்மையுடனே விளங்க ஆதிகாரணப் பொருள்போலே இருக்கும் மகிமை மகாமகத்துவ முண்டாகும். அப்போது அந்த அவுடதத்திற்குப் பேர் அயநாகச் சுவேதாவிடதமென்றும் அயநாகச் சுன்னாவிடதமென்றும், அயநாகப்பற்பாவிடதமென்றும் விளங்கும்.

மேலே அப்பேர்ப்பட்ட தேவாமிருத சஞ்சீவிக்கினையாகிய அவுடதத்தை, மேலே அயனாகமேனியடிசெய் - முன்னேதானே அப்பேர்ப்பட்ட பற்பங்களும் கைமுறைதப்பாமற் படிக்குப் பண்ணவேண்டிய வரலாற்று முறைமையென்கிற சம்பிரதாய வித்தைப்படியே ஆட்டுக்குட்டியைப்போலேயொத்த சிறுத்த பிராணியும் ஆனையைப் போலே பராக்கிரம விக்கிரமனஞ் செய்யத்தக்கதாகிய பராக்கிரமம் எப்படி யுண்டாகுமோ அப்படி உனக்குத் தெரியாமையினாலே மனம் தாட்டீகம் இல்லாமலிருந்தாலும் நீ மெத்த மனத்தைத் தாட்டீகம் வரத்தக்கதாய் அதிகாரம் படைத்துண்டாக்கிக் கொண்டு மேலே நீ உன்னுடைய தாட்டீகத்தைக் கொண்டு உன் புத்திக்கு மந்தத்தைக் கொடுப்பதான பொல்லாங்கையெல்லாம் வெட்டி அடித்துத் துரத்தி விட்டு உண்மைக்கு உத்தாரமாக நிசத்தை நித்தியமாகப் பேசிக்கொண்டு உன்னுடைய உரமான மனோவாக்குக் காயமென்கிற திரிகரணசுத்தியான வேலையைச் செய்வதான அவிழ்தவேலையைச் செய்து மேலே உன்னுடைய நன்மைக்குணத்தைத் தாபிக்க வேண்டியதாம், அயநாகம் - அது எப்படி என்றால் முன்னமே தானே சொல்லியிருக்கப்பட்டதான பற்பத்தை எப்படி உவமான உவமேயத்துடனே சொல்லலாமென்று துணிவுண்டாகிப் பிரம்மதேவனுடைய நாவிலே இருப்பதான வெண்மை வர்ணத்தையும் மகிசத்தையும் படைத்த வாணியென்னும் சரசுவதியைப் போலே ஆக்கிக் கொள்ளலாம்.

பிரம்ம தேவனுடைய தலையான நாவது உதிரத்திலே அப்படியேயாம்படி செயப்படியான பற்பாவிடத சஞ்சீவியைப்

புசிக்கவேண்டிய பிரயோக பிரமாண அனுபானப்படியே சொல்லவேண்டியதான வசனவாக்கியப்படியே நியமிக்கப்பட்ட, பானம் - மேலே அவிடத மென்கிற அயநாகபற்பத்தைப் பண்டிதன் பிரயோகம் பண்ணுவதற்கு அனுபானிக்கவேண்டிய காலத்திலே கள்ளென்று பொதுப் பெயரா யொன்றான காலத்திலேயுஞ் சிறப்புப் பெயரான பன்மையிலே பனங்கள்ளென்றும், தென்னங்கள்ளென்றும் ஈச்சங்கள்ளென்றும் பேரான இவைகளிலே பிரமாணப்படிக்குத்தானே அவிடதத்தை அனுபானித்துக் கொடுத்தால் இராச வியாதியென்று சிறப்பித்துச் சொல்வதான வாதபித்த தேகமான சுத்த வாயுவினுடைய சம்பந்தமான மகோதரம், சூலை, பக்கவாய்வு, பிடிப்பு, வாத சத்தி, பல்லை, அண்டம், வீக்கம் இவைகளெல்லாம் தீருமென்றும், மது - தேனிலே அனுபானித்துக் கொடுத்தால் தொந்த வாதம் என்கிற வாதசுரம், வாதபித்த வெப்பம், வாதசேட்ப உட்டிணம், வாத சன்னி, நீர்க்கட்டு, மேகவுட்டிண காங்கை, மேக வாதம் ஆகிய இவைகளெல்லாம் தீருமென்பதாம்.

மழை - சுத்த சலத்திலே அனுபானித்துக் கொடுத்தால் மந்திரிவியாதி என்கிற சிறப்பையுடைத்ததான பித்தம், பிறகு தேகமானது பயித்திய சம்பந்தமானதை மேற்கொண்டிருக்கும் பித்த வாயு, விக்கல், வாந்தி, வாய் நீரூறல், தலைதிருப்பல், அசீரணம், பக்கசூலை, அசரீரியுரைத்தல், வியர்த்திருத்தல், புன்னகைகோடல் இவைகளெல்லாந் தீருமென்றும், புல் - சர்க்கரையிலேயாவது கற்கண்டிலேயாவது அனுபானித்துக் கொடுத்தால் தொந்த பித்த வியாதி என்கிற மது மேகம், வெகுமூத்திரம், மூத்திரத்திரட்சி, அருகவடைத்தல், வெகுதாகம், வெகுபசி, வாயாடல், பற்கடித்தல், குடம் பறியாடல் இவையெல்லாம் மாறித் தீருமென்றும், பால் - பாலென்று பொதுவிலே சொன்னதையொட்டிச் சிறப்பிலே பசுவின் பாலிலேயாவது முலைப்பாலிலேயாவது வெள்ளாட்டுப் பாலிலேயாவது சாணிப்பாலிலே யாவது பிரமாணப்படியே அவிடதத்தை அனுபானித்துக் கொடுத்தால் தந்திரிவியாதி யென்று சிறப்பித்துச் சொல்வதான பிரதகுதச் சேட்பமென்கிற வியாதியினது சம்பந்தமான நளிர்ச்சுரம், முறைக்காய்ச்சல், வெக்கை, உட்டிணம், பெருவாரிக்காய்ச்சல், சுவேதானலம், நீர்க்கோவை, நீராமை, பெரும்பாடு, பெருங்குட்டம், கருங்குட்டம், மாரடைப்பு, வடசோபத்திரப் பிணி,

பெருவயிறு ஆகிய இவைகளெல்லாம் தீருமென்றும், ஐ - வெண்ணெயிலே பிரயோகனுபானப் பிரமாணப்படியே பிசகாமற்படி எடுத்து அனுபானித்துக் கொடுத்தால் தொந்த சேட்ப வியாதியான சிரங்கு, செவ்வாப்பு, பரு, கட்டி, கொப்புளம், பெருஞ்சொறிக் குட்டம், மேகவறட்சி, வெப்பம், நேத்திரவாயு, நேத்திரப்படலம், நேத்திரத்துர்மாமிசப் பிணி, சாலேசுரப்பிணி, கண்ணோவு, கண்ணீர் முட்டல், கண்கட்டி, கண்பரு, கண் பீளைசாரல், புழுவெட்டு, இல்லிக்கண்ணோய், மண்டைக்குடைச்சல், ஒருதலைநோய், பீனிசங்கள் சலவியாதி, சலதோடம், விடாவேர்வை, பலபிணிவெட்டை ஆகிய இவைகளெல்லாம் மேலிட்டிருந்த போதைக்கும் பற்றற்றுப்போம்.

அரசாதியனுபானமது - மேலே நான் சொன்னபடியே முதன்மையான வாதமுதலிய பிணிகளும் அவைகளுக்கெல்லாம் இனமான பலபல பேதவித்தியாசத்தோடுங்கூடிய பிணிவர்க்கங்களுங்கெட்டு முறிந்தோடிப் போய்விடும். மேலே வேறு வித்தியாசமான மேன்மையாகச் சொல்லவேண்டுவதில்லை. எல்லாம் புத்தியினாலே அறிந்துகொண்டு அப்படியே நடக்கவேண்டியதாம். ஆனபோதைக்கும், பத்தியம்- இதற்குப் பத்தியம் எப்படியென்று மயங்க வேண்டியதில்லை, நுட்பம் - இதற்குவேண்டிய பத்தியத்தின் வரலாறு - விசாரித்துப் பார்க்குமிடத்திலே அதிக சூட்சுமமாய் இருக்கும், அதுதான் என்னவென்றால் - பெண் போகமான காமமென்று மாத்திரமாகா. மற்றவையெல்லாம் பரவாயில்லாத பொருட்டல்ல என்கிற குறிப்பிலே இவரிவ்வாறு கூறினார். இப்படியே மற்ற மேலோர்களான பெரியோர்களிலே அகத்திய முனிவரும் மேலான வாக்கியமான கரிசலிலே திருவுளம் பற்றினார் - எப்படியென்றால்,

*"இரும்பிலே பிறந்த நாக*
*மெலும்பிலே நிறைந்த ரோக*
*மிறங்கவே*
*துறந்தனேக*

*மிச்சைப்படி மெச்சப் பொரு*
*மச்சத்தினை யெவராலுரைப் பார்க்களே னு மிகுபத்திய*
*முவமாமடப்பாவை யோர்குறைய றுக்கி*
*வைதானியப் பொழிவு நாடுவது நிச்சயம்"*

பின்னும் இப்படியே வரராச பாண்டித மனுவென்கிற வடநூலைத் திராவிடப் படுத்திய நூதனாயுளமென்கிற தன்வந்திரியார் வாகடத்திலே உதாரணம்

*"அயத்தி லூதித்திடு நாகப்பெருமை யென்னா*
*வரிதறைத வெனி னு நனியறையக் கேண்மோ*
*பயத்தி லூதித்திடு கனலாநோயின் வர்க்கப்*
*பாரா வாரத்தை வரட்படுத்த நாளும்*
*நயத்தி லூதித்திடும் பத்தியக்கடைப் பாடில்லை*
*நங்கை யொன்றே நங்கை யொன்றே நாடிப்பார்க்கில்*
*சயத்தி லூதித்திடு வாகையாயு ளோர்க்குந்*
*தரிப்பிக்குஞ் சிரிப்பிக்குஞ் சலரைத் தானே"*

இப்படியென்றும், பின்னும் மேன்மையுடைத்தான திருமூல நாயனார் கன்மகாண்டமாயிரத்திலே அருளிய திருமந்திரச் செய்யுள்

*"கரும்பொன் னிலான நாகத்தி னதிசயம்*
*பெரும்புவி மீதிற் பிரசங்கிப்பா ரில்லை*
*விரும்பின பேர்க்குவி யாதியுண் டோவிடல்*
*வரும் பிணியான மடவர லொன் றுமே."*

இப்படியே உதாரண வாய்பாட்டின்படியே பார்த்துக்கொள்ள வேண்டியதென்பதை அறிக.

**(தேரையர் யமக வெண்பா பேருரையுடன் முதற்பாகம் முற்றும்)**

## பாட்டு முதற் குறிப்பகர முதலி

## இந்திய மருத்துவம் - ஓமியோபதித் துறை நூலகங்களில் விற்பனைக்குக் கிடைக்கும் நூல்கள்

| வ. எண் | நூலின் பெயர் | எடை (கிராம்) | விலை ரூ - | பை |
|---|---|---|---|---|
| 1 | குணபாடம் - மூலிகை வகுப்பு- பாகம் -1 | 900 | 150 | 00 |
| 2 | குணபாடம்- தாது சீவ வகுப்பு-பாகம் 2& 3 | 800 | 39 | 00 |
| 3. | உடற்கூறு | 1200 | 103 | 00 |
| 4. | சிறப்பு மருத்துவம் | 450 | 74 | 00 |
| 5. | கடுக்காய் வல்லாரையின் தனிமாண்பு | 500 | 29 | 00 |
| 6. | பால வாகடம் | 650 | 33 | 00 |
| 7. | நஞ்சு முறிவு நூல் | 250 | 27 | 00 |
| 8. | நோய்களுக்குச் சித்த பரிகாரம்- பாகம் 1 | 700 | 94 | 00 |
| 9. | நோய்களுக்குச் சித்த பரிகாரம்-பாகம் 2 | 200 | 25 | 00 |
| 10. | பிணி உடற்பொருள் தேர்வக ஆய்வு முறைகள் | 100 | 30 | 00 |
| 11. | மருந்துசெய் இயலும் கலையும் | 400 | 27 | 00 |
| 12. | நல்வாழ்விற்கோர் நல்மருத்துவம் | 50 | 3 | 00 |
| 13. | பிள்ளைப்பிணி மருத்துவம் | 500 | 78 | 25 |
| 14. | சித்த மருத்துவ அகராதி | 200 | 50 | 00 |
| 15. | அகத்தியர் ஒடிவு முறிவு சாரி- நிகண்டகராதி | 400 | 80 | 00 |
| 16. | வர்மப் பரிகாரமும் சிகிச்சை முறைகளும் | அச்சில் | | |
| 17. | உடல் தத்துவம் | 450 | 75 | 15 |
| 18. | மகளிர் மருத்துவம் | 450 | 46 | 00 |
| 19. | தோற்றக்கிரம ஆராய்ச்சியும் சித்த மருத்துவ வரலாறும் | அச்சில் | | |
| 20. | நோயில்லா நெறி | 450 | 35 | 00 |
| 21. | சித்த வைத்தியத் திரட்டு | 300 | 58 | 50 |
| 22. | சட்டம் சார்ந்த மருத்துவமும் நஞ்சு மருத்துவமும் | 700 | 150 | 00 |
| 23 | நோய்நாடல் நோய்முதல் நாடல் திரட்டு -பாகம் -1 | 400 | 100 | 00 |
| 24. | நோய்நாடல் நோய்முதல் நாடல் திரட்டு -பாகம் -2 | ........ | 175 | 00 |
| 25. | சித்தர் அறுவை மருத்துவம் | அச்சில் | | |
| 26. | தேரையர் யமக வெண்பா- பாகம் - 1 | அச்சில் | | |

| வ.ண் | நூலின் பெயர் | எடை (கிராம்) | விலை ரூ -பை |
|---|---|---|---|
| 27. | சித்த மருத்துவாங்கச் சுருக்கம் | அச்சில் | |
| 28. | சூல் மருத்துவம் | அச்சில் | |
| 29. | சித்த மருத்துவம்-பொது | அச்சில் | |
| 30. | யூகி வைத்திய சிந்தாமணி | அச்சில் | |

## ஆயுர்வேத நூல்கள் (தமிழில்)

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | அஷ்டாங்க சங்கிரகம் | 800 | 71 | 00 |
| 2. | சரக சம்ஹிதை பாகம் - 1 | 1250 | 105 | 30 |
| 3. | சரக சம்ஹிதை பாகம் - 2 | 1400 | 253 | 65 |
| 4. | சரக சம்ஹிதை பாகம் - 3 | 1700 | 390 | 00 |
| 5. | சுசுருத சம்ஹிதை பாகம் - 1 | 1500 | 390 | 00 |
| 6. | சுசுருத சம்ஹிதை பாகம் - 2 | 1400 | 272 | 00 |

# Siddha Medical Books in English

| S.No. | Name of the Title | Weight (gms) | Rate Rs. p |
|---|---|---|---|
| 1. | Introduction to Siddha Medicine (T.V. Sambasivam Pillai) | 50 | 11 35 |
| 2. | Simple Home remedies | 50 | 2 70 |
| 3. | Siddha Pharmacopiea | 200 | 39 00 |
| 4. | History of Siddha Medicine | 800 | 159 00 |
| 5. | Siddha Science of Longevity and Preventive Medicine | 250 | 25 00 |
| 6. | Siddha Toxicology | 500 | 44 00 |
| 7. | Siddha Principles of Social and Preventive Medicine | 500 | 66 00 |
| 8. | Siddha Medical Dictionary **(Tamil and English Dictionary of Medicine, Chemistry, Botany, and Allied Sciences) T.V Sambasivam Pillai**- Vol.I | 2500 | 623 00 |
| 9. | -do- Vol.II | 1150 | 202 15 |
| 10. | -do- Vol.III | 650 | 81 00 |
| 11. | -do- Vol.IV-part I | 800 | 156 00 |
| 12. | -do- Vol.IV-part II | 800 | 151 50 |
| 13. | -do- Vol.V | 1000 | 480 00 |

* நூல்களை வாங்க விரும்புவோர் நேரிலோ அஞ்சல் மூலமோ பெற்றுக்கொள்ளலாம்.
* பதிவஞ்சலில் நூல்களைப் பெற விரும்புவோர் நூல்களின் விலையோடு அஞ்சல் கட்டணத்தையும் சேர்த்து பணவிடை(**M.O**) அனுப்ப வேண்டும்.
* வி.பி.பி. மூலம் நூல்கள் அனுப்பப்பட மாட்டாது.
* 2000 கிராமுக்கு (2 கிலோவுக்கு) மேற்பட்ட நூல்கள் அஞ்சல் மூலம் அனுப்பப்பட மாட்டாது.
* **அஞ்சல் கட்டணங்கள் மாறுதலுக்குட்பட்டவை.**

## அஞ்சல் கட்டணம்

1. 250 கிராமும் அதற்குட்பட்ட எடையும் கொண்ட நூல்களுக்கு:

| | |
|---|---|
| முதல் 50 கிராமுக்கு | ரூ 4 - 00 |
| அடுத்த ஒவ்வொரு 50 கிராமுக்கும் | ரூ 3 - 00 |
| பதிவஞ்சல் கட்டணம் | ரூ 17 - 00 |

2. **பதிவுப் பார்சல்**(பதிவுக்கட்டணம் உட்பட ): 250 கிராமுக்கு மேற்பட்ட எடையுள்ள நூல்களைப் பதிவஞ்சல் மூலம் பெற்றுக்கொள்ளலாம்.

| | |
|---|---|
| முதல் 500 கிராமுக்கு | ரூ 36 -00 |
| அடுத்த ஒவ்வொரு 500 கிராமுக்கும் | ரூ 16 -00 |

**பணம் அனுப்பவேண்டிய முகவரி:**

**இயக்குநர்,**
**இந்திய மருத்துவம்- ஓமியோபதித் துறை,**
**அறிஞர் அண்ணா மருத்துவமனை வளாகம்,**
**அரும்பாக்கம்,சென்னை- 600 106.**

**நூல்கள் கிடைக்குமிடங்கள்:**

1. **டாக்டர் அம்பேத்கர் மைய நூலகம்**
**இந்திய மருத்துவ இயக்குநரகம்**
**அறிஞர் அண்ணா மருத்துவமனை வளாகம்,**
**அரும்பாக்கம்,சென்னை- 600 106.**
தொ.பே. 26216244, 26214844,26281563

2. அரசினர் சித்த மருத்துவக்கல்லூரி நூலகம்
பாளையங்கோட்டை,
திருநெல்வேலி- 627 002
தொ.பே. 0462-2572736, 2572737, 2572738

